# திருஅருட்பா இசைமலர்





திரு அருட்பா இசைச் சங்கம்

வடலூர்

# வாரியார் சுவாமிகள் வழங்கிய வாழ்த்து

உ
முருகா

திருச்சி
3—9—1986

## வாழ்த்து

**நேரிசை வெண்பா**

அருட்பா இசைச்சங்கம் ஐயனரு ளாலே
தெருட்பால் சிவம்ஓங்கி சீராய் - விருப்பாக
நல்லதிருத் தொண்டியற்றி நாளும் நலமோங்கி
வல்லமையாய் வாழ்க மகிழ்ந்து.

அன்பன்,
**கிருபானந்தவாரி**

---

உ
முருகா

சேலம்
26—4—1987

## வாழ்த்து

**நேரிசை வெண்பா**

வாழி வடலூர் திருவருட்பா மன்னுமிசை
ஏழிசைச் சங்கம் இனிதோங்கி - காழியுறை
கந்தன் கருணையினுல் காசினியில் தேசுடனே
சந்ததமும் வாழ்க தழைத்து.

அன்பன்,
**கிருபானந்தவாரி**




# திருஅருட்பா இசைமலர்






**திரு அருட்பா இசைச் சங்கம்**

13 - C, அருள்குடில் சத்திய தருமச்சாலை வீதி

வடலூர் - 607 303 தென்னார்க்காடு மாவட்டம்.

## பொருளடக்கம்

4-4

# முன்னுரை

**தமிழிசைச் செய்திகள்**

தமிழ்மொழி ஒன்றனுக்கே உரிய, வேறு எம்மொழிக்கும் இல்லாத சங்கத் தமிழ் என்னும் சிறப்பு - இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ் என்னும் முத்தமிழ்ப் பாகுபாடு - தொல்காப்பியத்திற் காணப்படும் இசைக்கூறுகள், பண்ணத்தி முதலியவை - இசைத்தமிழ் நூலாகிய பரிபாடல், அதற்கு இசைவகுத்தோர் - பாணர் என்னும் சங்ககால இசைக்குடியினர், அவர் வாசித்த யாழ், சீரியாழ் (சிறிய யாழ்), பேரியாழ் (பெரிய யாழ்), சீரியாழ் வாசிக்கும் சிறுபாணன், பேரியாழ் வாசிக்கும் பெரும்பாணன், சிறுபாணனை ஆற்றுப் படுத்திய சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணனை ஆற்றுப்படுத்திய பெரும் பாணாற்றுப்படை - முத்தமிழ்க் காப்பியமாகிய சிலப்பதிகாரம், இசைச் சுரங்கமாகிய அதன் அரங்கேற்றுக்காதை, அதன் அரும்பத உரை, அடியார்க்கு நல்லார் உரை - சிந்தாமணியிற் காணப்படும் இசைச் செய்திகள் - குடுமியாமலை இசைக் கல்வெட்டு - காரைக்காலம்மையாரின் முத்ததிருப்பதிகங்கள் - நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தர் - தமிழோடிசை பாடல் மறந்தறியா அப்பர் - ஏழிசையாய் இசைப்பயனாய் என்னுடைய தோழனுமாய் என்ற சுந்தரர் - இம்மூவரும் பாடிய முதல்ஏழு திருமுறைகள் - எட்டாந்திருமுறையாகிய மணிவாசகரின் திருவாசகம் - ஒன்பதாம் திருமுறையாகிய திருவிசைப்பா - சைவத்தில் ஒரு திருநீலகண்டயாழ்ப்பாணர் - வைணவத்தில் ஒரு திருப்பாணாழ்வார் - பெரியபுராணத்திலும் திருவிளையாடற் புராணத்திலும் காணப்படும் பற்பல அரிய இசைச் செய்திகள் - இசைக் களஞ்சியமாகிய அருணகிரிநாதர் திருப்புகழ் - தமிழ்நாட்டுத் திருக்கோயில்கள் சிலவற்றில்உள்ள இசைத்தூண்கள்; சாரங்கி, பஞ்சமுக வாத்தியம், முகவீணை, கல்நாதசுரம் முதலிய அரிய இசைக் கருவிகள் - கீதம், வாத்தியம், நிருத்தம் ஆகிய மூன்றும் திருக்கோயில்களால் வளர்க்கப் பெற்றமை - திருக்கோயில் களில் திருமுறைகள் ஓத ஓதுவார்மூர்த்திகள் பழங்காலந்தொட்டு இன்று வரை இருந்து வருதல் - புரந்தரதாசர், அன்னமய்யா, தாள்ளபாக்கம் இசைப்பரம்பரையினர் - கர்நாடக சங்கீதத்தின் ஆதி மும்மூர்த்திகளான முத்துத்தாண்டவர், அருணாசலக் கவிராயர், மாரி முத்தாப்பிள்ளை, கர்நாடக சங்கீத மும்மூர்த்திகள் என இப்போது வழங்கப்பெறும் (வணங்கப்பெறும்) தியாகப்பிரம்மம், சியாமாசாஸ்திரிகள், முத்துசுவாமி தீட்சிதர் - ஆபிரகாம் பண்டிதர் இயற்றிய கருணாமிர்தசாகரம் - சுவாமி விபுலானந்தர் இயற்றிய யாழ்நூல் - தமிழிசை இயக்கம் - ராஜாசர் அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் நிறுவிய தமிழிசைச் சங்கம் - ஆண்டுதோறும் அது நடத்திவரும் தமிழிசை விழாக்கள், பண்ணாராய்ச்சி மாநாடுகள் - அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம் அவர்கள் ஆண்டுதோறும் நடத்தி வரும் இசைக்கலைவிழா, இவையெல்லாம் எம் கண்முன் தோன்றிக் களிநடம் புரிகின்றன. இசைவரலாற்றில் அறிந்து கொள்ள வேண்டிய இன்றியமையாச் செய்திகளாகிய இவை ஒவ்வொன்றைப் பற்றியும் சிறு குறிப்புகளாக எழுதினாலுங் கூடப் பல பக்கங்கள் விரியும். ஆதலின் விருப்பமிருந்தும் விரிவஞ்சி விடுத்தோம்.

பாசுரம், கீர்த்தனம், கிருதி, பதம், பல்லவி - அனுபல்லவி - சரணம், ராகம் தாளம், ஆரோகனம், அவரோகனம், ஆலாபனம், சங்கதி போன்ற இன்றியமையாத இசைக்கூறுகள் சிலவற்றிற்கேனும் சிறுகுறிப்புகள் இம்முன்னுரையில் எழுத எண்ணியும் இடமும் காலமும் போதுமான அளவு இன்மையின் இவையும் வேண்டா என அரைமனத்தோடு விடுத்தோம்.

இனி, வள்ளலாருக்கும் திருஅருட்பாவுக்கும் நேர் தொடர்புடைய இசைச்செய்திகள் சிலவற்றையும், திருஅருட்பா இசைச் சங்கத்தின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் இம்மலரையும் பற்றிமட்டும் கூறி இம்முன்னுரையை நிறைவு செய்வோம்.

## வள்ளலாரும் இசையும்

வள்ளற்பெருமான் இசையிலும் வல்லவர். இசைப்பாடல்கள் பலவற்றைப் பாடியுள்ளார். இசைவாணர் பலர் பெருமானிடம் வந்து பாடியும் வாசித்தும் வாழ்த்துப் பெற்றுச் சென்றனர்.

சங்கீதத்திற் சிறந்த சிதம்பரம் கிருஷ்ணையர் மகாதேவமாலையில் முதற் பாசுரத்தை அபுருப ராகத்தில் பாடிப்பழகி வடலூர்க்கு வந்து வள்ளலார் திருமுன்பு பாடினர். உடனே வள்ளலார் ஐயரைப் பார்க்கிலும் மிக விநயமாக அப்பாடலையே பாடி ஐயரை மகிழ்வித்தனர். ஐயர் ''இந்த வித்தையிலும் சுவாமிகள் இவ்வண்ணம் மேம்பட்டு இருக்கிறீர்களே'' என்று வியந்து புகழ்ந்தனர்.

ஒரு பகல் கூடலூரில் இரிசப்ப செட்டியார் மெத்தையின் பேரில் திருவெழுந்தூர் சுப்பிரமணியன், திருப்பாதிரிப்புலியூர் முத்துவீரன், திருவைந்திரபுரம் பொன்னன் ஆகிய நாதசுரக்காரர்கள் பிள்ளைப்பெருமான் திருமுன்பு வாசித்து நமஸ்கரித்தனர். அப்போது வள்ளலார் அவர்களை நோக்கி ''நீ மணியே, நீ முத்தே, நீ பொன்னே'' என்று கூறிச் சங்கீத அருமை பாராட்டி விபூதி கொடுத்தனர்.

— இராமலிங்க சுவாமிகள் சரித்திரக்குறிப்புகள், ச. மு. க.

தம் வீட்டில் நடக்கும் பாட்டுக் கச்சேரிக்கு வரவேண்டும் என்று ஓர் அன்பர் வள்ளற்பெருமானுக்குக் கடித மூலம் விண்ணப்பித்துக் கொள்ளுகிறார். ''ஐயா! இன்று ராத்திரி நமது வீட்டில் 6 மணிக்கு நடக்கும் சிவகங்கை வயித்தியநாதய்யர் பாட்டுக் கச்சேரிக்குத் தாங்கள் வந்திருந்து சிறப்பிக்கக் கோருகிறேன்'' என்பது அக்கடிதம். கடிதத்தின் தேதி 4—2—1867. அது பெருமான் கருங்குழியில் உறைந்த காலம். கருங்குழி இராமலிங்கம் பிள்ளை யவர்களுக்கு என்றே முகவரியும் உள்ளது. பாட்டுக்கச்சேரிக்கு வள்ளற்பெருமான் சென்றிருப்பாரா? சென்றிராரா? சென்றிரார் என்றே கருதவேண்டும். சங்கீதம் கேட்பதில், நடனம் காண்பதில் பெருமானுக்கு விருப்பமில்லை என்பது அவரது பாடல்களால் நன்கறியக் கிடக்கிறது. கச்சேரிகேட்க அழைத்த அன்பர் மரியாதைக்காக அழைத்திருக்கிறார்.

## திருஅருட்பாவில் இசைப்பாடல்கள்

சைவத்தில் பன்னிரு திருமுறைகளில் முதல் ஒன்பது திருமுறைகள் இசைப் பாக்கள். ஏனைய மூன்று திருமுறையும் இயற்பாக்கள். அவற்றுள்ளும் பதினோராந் திருமுறையில் உள்ள காரைக்காலம்மையாரின் மூத்த திருப்பதிகங்கள் இரண்டும் இசைப்பாக்கள்.

வைணவத்தில் திவ்வியப்பிரபந்தம் நாலாயிரத்தில் மூவாயிரம் இசைப்பா. இயற்பா என்னும் மூன்றுவது ஆயிரம் மட்டுமே இயற்பா.

சைவம் வைணவம் இரண்டிலுமே முக்காற் பங்கு இசை; காற்பங்கு இயல். 12 திருமுறையில் 9 இசை; 3 இயல். 4000-த்தில் 3000 இசை; 1000 இயல்.

வள்ளலாரின் அருட்பாவில் ஆறில் ஒன்று இசைப்பாவாக உள்ளது. அருட்பா ஏறத்தாழ 6000 பாடல்கள் என்றால் அதில் இசைப்பாக்கள் ஏறத்தாழ 1000 பாடல்கள்.

தொம்மி, கண்ணிகள், கீர்த்தனம், பதம், நாமாவளி, ஆனந்தக்களிப்பு எனப் பல வகை இசைப் பாக்களை வள்ளலார் இயற்றியுள்ளார். அக்காலத்தில் முத்துத்தாண்டவரின் கீர்த்தனைகள் சிறப்பாக விளங்கின. முத்துத் தாண்டவரின் தாக்கம் வள்ளலாரின் இசைப்பாடல்களில் நிரம்பக் காணப்படுகிறது. 'நல்ல மருந்து', 'தெண்டனிட்டே னென்று சொல்லடி' என்னும் இருபாடல்களும் இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டுகள். 'தெண்டனிட்டே னென்று சொல்வீர்' என்ற தாண்டவர் பாடலும் 'தெண்டனிட்டே னென்று சொல்லடி' என்னும் வள்ளலார் பாடலும் இம்மலரினுள்ளே (பக்கம் 42) நமது ஆராய்ச்சிக் கட்டுரையில் ஒப்பிட்டுக் காட்டப்பட்டன. முத்துத்தாண்டவரைப் பாம்பு தீண்டியபோது, 'அருமருந்தொரு தனிமருந்திது அம்பலத்தே கண்டேனே' என்ற கீர்த்தனத்தைப்பாட விடம் இறங்கிற்று. தாண்டவரின் அவ்வரிய பாடலில் ஈடுபட்ட பெருமான் அதனை அடியொற்றியே 'நல்ல மருந்திம் மருந்து சுகம் நல்கும் வைத்தியநாத மருந்' தென்று பாடினார். அதனை ஒட்டி எழுந்ததே 'ஞான மருந்திம் மருந்து, சுகம் நல்கிய சிற்சபா நாத மருந்து' என்னும் பின்னுளைய சிதம்பர வழிபாட்டுப் பாடல். முத்துத்தாண்டவரையும் வள்ளலாரையும், இருவரது இசைப் பாடல்களையும் ஒப்பிட்டு ஆராய்ந்து ஒரு கட்டுரை எழுதவேண்டும். ஒருசிறு நூலாகக் கூட அது அமையும். முத்துத்தாண்டவரும் வள்ளலாரும் என்றொரு கட்டுரை இம்மலரில் எழுத எண்ணியும் இடமும் காலமும் எழுதுதற்குரிய மனஅமைதியும் இன்மையின் விட்டுப்போயிற்று. இன்னொரு சமயம் எழுதுவோம்.

வள்ளலார் பாடிய இசைப்பாடல்களில் பல சிறப்புகள் உண்டு. எல்லாவற்றையும் எடுத்துக்கூறவும் விளக்கவும் இங்குஇடம் போதாது. முக்கியமாக இரண்டு செய்திகளை மட்டும் இங்கே குறிப்பிடுவோம். ஒன்று : பல்லவி அனுபல்லவி சரணம் என்ற பகுப்புகளையுடைய இசைப் பாடல்களில் 100 சரணங்கள் வரை பாடியவர் வள்ளலார். மற்றொன்று : மிகமுக்கியமாகக் கூறத்தக்கது - இசைப்பாக்களில் இயற்பாச் சிறப்புகளையும் வைத்துக் காட்டியவர் வள்ளலார். இசைப்பாக்களின் சரணங்கள் பல தனித் தனியே இயற்பாக்களாகவும் அமைந்துள்ளன. இயற்பா இலக்கணமும் இசைப்பா இலக்கணமும் கொண்டு அன்பர்கள் இவற்றை ஆராய்ந்துணர வேண்டும்.

இயற்பாக்களைப் பாடித் தோத்திரஞ் செய்த ஞானிகள் ஏன் இசைப் பாக்களையும் பாடினர் என்றால், நாயக நாயகி பாவம் என்றவுடனேயே அங்கு ஆடலும் பாடலும் வந்து விடுகின்றன. ஆடலும் பாடலும் பெண்டிர்க்குரியன. பெண்மையை ஏறிட்டுக் கொண்டு நாயகி பாவத்தில் நின்ற ஞானிகள் அதற்கேற்ப ஆடலும் பாடலும் கூடிய கீர்த்தனங்களையும் பதங்களையும் பாடினர்.

ஒரு வகையில் இசைப்பாக்களை அகம் என்றும் இயற்பாக்களைப் புறம் என்றும் கூறலாம். தோத்திரங்களில் இசைப்பாக்கள் மிகுந்ததன் காரணமும் இதுவே. சாத்திரங்களில் இயற்பா மிகுதி, தோத்திரங்களில் இசைப்பா மிகுதி (மிகுதியாக இல்லாதவிடத்தும் குறிப்பிடத்தக்க அளவு உண்டு) என்பதனைச் சாத்திர தோத்திர நூல்களில் நன்கு பயிற்சியுடையோர் அறிவர். ஒரேயடியாக இவ்வாறு கூறவியலாது என்று கொண்டாலும் சாத்திரங்களைவிடத் தோத்திரங்களிலேதான் இசைப்பா மிகுதி என்பதை அனைவரும் ஒப்புவர்.

**சமரச சுத்த சன்மார்க்கத்தில் இசை**

தோத்திரமாக இசைப்பாடல்கள் பலவற்றைப் பாடிப்பரவினுரென்ருலும் வழிபாட்டில் இசைக்கருவிகள் இடம் பெறுவதை வள்ளலார் ஒப்பவில்லை. மங்கல வாத்தியங்கள் என்று மற்றைத் திருக்கோயில்களில் வழங்கும் நாதசுரம் மேளம் முதலியவை வடலூரில் சத்தியஞானசபையில் அன்றும் இல்லை, இன்றும் இல்லை. மேளம் என்ன? தாளம் கூட இல்லை! மேளதாளங்கள் வாத்தியங்கள் வாணவேடிக்கைகள் பக்தியில் ஓரளவு இருக்கலாம், ஞானத்தில் இவற்றுக்கு இடமேஇல்லை. அதனுற்ருன் சத்திய ஞானசபையில், சன்மார்க்க சங்கங்களில் வழிபாட்டிற்குக் கருவி இசை வேண்டா என்று வள்ளற்பெருமான் விதி செய்தருளினுர். வழிபாட்டுக்குக் கருவி இசை கூடாது' பிரச்சாரத்திற்கு ஓரளவு, தேவையான அளவு கருவி இசையையும் கொள்ளலாம்.

**திருஅருட்பா இசைச்சங்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும்**

இசைக்கலைஞர்கள் அனைவரும் திருவையாறு சென்று தியாகப்பிரம்மத்திற்கு இசைபாடி ஆராதனை செய்வது போல, திருஅருட்பா இசைவாணர்கள் அனைவரும் வடலூர் வந்து ஒருநாள் அல்லது இரண்டுநாள் அல்லது மூன்றுநாள் நாள்முழுவதும் திருஅருட்பா இசைப்பாடல்களைப் பாடிப்பரவவேண்டும் என்ற எண்ணம் எமக்குப் பல காலமாகவே இருந்து வந்தது. நமது அன்பர் தியாகி. சாது முத்தையா அவர்களிடம் இதைப் பற்றி அவ்வப்போது சொல்லிக் கொண்டிருப்பதுண்டு. இருவரும் பல ஆண்டுகளாக இதைப் பற்றிச் சிந்தித்து வந்தோம். காலம் சென்று கொண்டிருந்தது. நாடெங்கும் இசை விழாக்கள் பல நடக்கின்றன, வடலூரிலும் திருஅருட்பா இசை விழா வொன்றுநடப்பது இசைவழித் திருவருட்பா பரவ, அதன் வழிச் சன்மார்க்கம் பரவ ஏதுவாக இருக்கும் என்ற எண்ணம் உண்டாயிற்று. அருட்பாமணி விசுவநாதன் அவர்கள் ஏறத்தாழ ஐம்பது ஆண்டுகளாகத் திருவருட்பா இசைத்தொண்டு செய்து வருபவர். அருட்பா இசையில் நாடுமுழுவதும் நற்புகழ் பெற்றவர். அவரையும் கலந்தாலோசியுங்கள் என்ருேம். சாதுவும், அருட்பாமணியும் கலந்தாலோசித்தனர். திருஅருட்பா இசைச்சங்கம் என்றே ஒரு சங்கத்தைத்தொடங்கி அதன் மூலம் வடலூரில் திருஅருட்பா இசைவிழாவை நடத்தலாம் என்றனர். இன்று வைகாசி 11, வள்ளற்பெருமான் வடலூரில் சத்திய தருமச்சாலையைத் தொடங்கியருளிய நன்னுள், இன்றே அதற்கான பணிகளைத்தொடங்குங்கள்: சாது, அருட்பாமணி, அன்னையார் தருமாம்பாள் ஆகியமூவருமே நிறுவனராக இருந்து தொடங்குங்கள் என்றுகூறித் தாள்கள், நோட்டுப் புத்தகங்கள் எழுது பொருள்கள் ஆகிய ஸ்டேஷனரிகள் ரு 28. 25க்கு வாங்கியளித்தும் முதன் முதலாக ரு 1001 (ஆயிரத்தொன்று) நன்கொடையளித்தும் வாழ்த்தினேம். நிறுவனர் மூவரும் விரைந்து பணியாற்றத் தொடங்கினர். எம்மையே தலைவராக இருக்க வேண்டினர். நாம் தலைவராக இருப்பதைவிட இதுபோன்ற விஷயத்தில் முன் அனுபவம் உள்ளவர், அறிஞர்க்கு அறிஞர், பிரமுகர்க்குப் பிரமுகர், எழுத்தாளர், கலை இலக்கிய அமைப்புகள் பலவற்றின் தலைவர், விடுதலைப்போராட்டத்தியாகி, பல ஆண்டுகளாக ஆண்டுதோறும் தைப்பூசத்திற்கு வடலூர் வந்து வழிபடுபவர் ஆகிய இத்தனை தகுதிகளையும் உடைய பெரிய மனிதர் ஒருவரிடம் உங்களை ஆற்றுப்படுத்துகிறேம், அவர் உங்களுக்கெல்லாம் தெரிந்தவர்தான், பட்டுக்கோட்டைக்குப் போங்கள், அன்பு வேதாசலம் அவர்களை அணுகுங்கள், அவர்தான்இன்றைய சரபோஜி, தஞ்சைத் தரணியில் அன்றைக்கு ராஜா சரபோஜி கலை இலக்கியம் மருத்துவம் பண்பாடு முதலியவற்றை வளர்த்தார், இன்றைய சரபோஜி என்று சொல்லும் படி அவற்றின் வளர்ச்சிப்

பணிகளில் இன்று இவர் ஈடுபட்டுள்ளார். எல்லாவற்றையும் விட மிக முக்கியமான செய்தி திருவையாறு தியாகப்பிரம்ம உத்சவ மகாசபையின் அறங்காவலருள் இவரும் ஒருவர், ஏனையசிலர் அறங்காவலராக இருப்பினும் அங்கு இவர்தான் ஏற்பாடு முதற் கொண்டு விழாத் தொடக்கத்திலிருந்து நிறைவுவரை விழாவை உடனிருந்து நடத்து பவர், இசையுலகம் முழுவதையும் நன்கறிந்தவர், இசையுலகம் முழுவதும் இவரை நன்கறியும். இப்பேர்ப்பட்டவர்தான் திருஅருட்பா இசைச் சங்கத்திற்கும் தலைவராக இருக்க வேண்டும், நாம் சொன்னதாகச் சொல்லுங்கள், ஏற்றுக்கொள்வார் என்று சொல்லி அனுப்பினோம். அன்பும் இசைந்தார். 1986 ஜூலை 8, அட்சய, ஆனி, 24, மாதப் பூச நன்னாளில் நிகழ்ந்த அமைப்புக் கூட்டத்தில் முறைப்படித் திருஅருட்பா இசைச் சங்கம் நிறுவப்பெற்றது.

25— 5—1986 வைகாசி 11 — ஸ்தாபகர்கள் ஆலோசனை - சங்கம் நிறுவ முடிவு செய்து அதற்கான பணிகளைத் தொடங்கியது

8— 7—1986 ஆனி 24, பூசம் — திருஅருட்பா இசைச்சங்கம் நிறுவப்பெற்றது.

4—10—1986 — 6—10—86 — முதலாம் ஆண்டு திருஅருட்பா இசைவிழா.

22— 5—1987 —25— 5—87 — 2 ஆம் ஆண்டு திருஅருட்பா இசைவிழா (வைகாசி 8; 9; 10; 11 - நான்கு நாள்)

பொருத்தமான தலைவர் அமைந்ததைப் போலவே பொருத்தமான பொருளாளரும் அமைந்தார். கும்பகோணம் வணிகர் திரு. A. சண்முகம் அவர்களை யாம் முதன் முதலிற் கண்டபோதே அவர் மீது ஒரு மதிப்புணர்ச்சி உண்டாயிற்று. உழைப்பால் உயர்ந்தவர். நாணயம் கண்டிப்பு கரார் மிக்கவர். அவரினும்சிறந்த பொருளாளர் கிடைப்பதரிது என்பது எம் எண்ணம். அது போன்றே பொருத்தமான இரு துணைத் தலைவர்கள் அமைந்தனர். திரு. டாக்டர் A. இராஜேந்திரன், திருமதி. டாக்டர். சு. சிவகாமசுந்தரி. இராஜேந்திரன் நெய்வேலி நிலக்கரி நிறுவனத்தின் முதன்மைப் பொறியாளர்களுள் ஒருவர். இசைச்சங்கத்தின் தொடக்க காலத்திலும் முதல் இசை விழாவின் போதும் அவர் முதன்மைப் பொறியாளராகத்தான் இருந்தார். இரண்டாவது இசைவிழாவின் போது நெய்வேலி நிலக்கரி நிறுவனத்தின் கலை, கல்வித் துறையின் தலைவராகி விட்டார். நெய்வேலியில் புதிதாகத் தொடங்கப்பெற்ற ஜவகர் அறிவியற் கல்லூரியின் செயலாளர் - தாளாளராக ஆகிவிட்டார். முதன்மைப் பொறியாளர் பலர். அவருள் இவர் ஒருவரே கலைஞர், ஆதலின் கலைத் துறைத் தலைமை இவரை வந்தடைந்தது. "கலைமாமணி" விருது பெறுவதற்கு முற்றிலும் தகுதியுடையவர் இவர். இளமையிலிருந்தே இவர் செய்து வரும் கலைப்பணிகளையெல்லாம் தொகுப்பின் அதுவே ஒரு பெருங்கட்டுரையாகிவிடும். பொறிஞர், கலைஞர் இராசேந்திரனர் "கலைமாமணி" விருதுபெறவும் அதற்குமேலும் சிறப்புப்பெறவும் வாழ்த்துகிறோம். சிவகாமசுந்தரியார் குடும்பம் மூன்று தலைமுறையாகச் சன்மார்க்கக் குடும்பம். பெற்றோர்களே சன்மார்க்கத்தில் ஈடுபட்டவர்கள். இவர் சன்மார்க்கத்தில் ஈடுபட்டவர். பிள்ளைகளும் சன்மார்க்க ஈடுபாட்டோடு வளர்ந்து வருகின்றனர். பிறந்த குடும்பம் சன்மார்க்கக் குடும்பம் என்றால் புகுந்த குடும்பம் தமிழ்க் குடும்பம, தந்தையார்

சன்மார்க்கி, மாமனுர் தமிழாசிரியர், இவரோ தமிழ்ப்பேராசிரியர், கணவர் வேளாண்மைப் பொறிஞர். இவரும் இவரது கணவனுரும் வருங்காலத்தில் துணை வேந்தர்களாகத் தகுதியுள்ளவர்கள். சன்மார்க்க மகளிர் உலகில் முதல் இடம் சிவகாம சுந்தரியார்க்கு உரியது. இதனுற்றுன் கருங்குழி வள்ளலார் இல்லத் திருப்பணி நிறைவு குடநீராட்டு விழாவில் பாராயணசாலையிலிருந்து திருக்குடநீர் சுமந்தேத்தி வலம் வந்து இல்லம் புகுந்து வழிபடும் பேற்றை அவர்க்கு நாம் நல்கினேம். இம்மலரைப் பொறுத்த வரையில் சிவகாமசுந்தரியார் உதவி இன்றேல் இம்மலர் இல்லை. மலரில் வெளிவந்துள்ள விளம்பரங்களுட் பெரும்பாலன கிடைப்பதற்கு அவரும் அவரது கணவனுருமே உதவினர். வாழ்க சிவகாமசுந்தரியார் ! வாழ்க அவர் குடும்பம் !! வெல்க அவர் பணிகள் !!

பொருத்தமான இரு செயலாளர்கள் அமைந்தனர். தியாகி சாது முத்தையா, அருட்பாமணி திரு. ந. விசுவநாதன். சாது இயற்செயலாளர், அருட்பாமணி இசைச் செயலாளர் என்று மகிழ்ந்திருந்தோம். ஆனல் அம்மகிழ்ச்சி நீடிக்கவில்லை. மலர் வெளியிடு சம்பந்தமான வேலைகளில் சாது உடனிருந்து உதவுவார் என்று கருதித்தான் மலர் வெளியிடும் ஆலோசனையையே கூறினேம். மலர் வெளியிட ஏற்பாடாயிற்று. இரண்டாம் இசைவிழா நடந்தபோது சாது உடனிருந்து பணியாற்றினுர். அடுத்து நம் நடத்திய கருங்குழித் திருப்பணி நிறைவு - குடநீராட்டு - விழ:விலும் (1-6-1987) உடனிருந்து உதவினுர். அதன்பின் சிலநாளில் போகுமிடம் சொல்லாமல் விடைபெற்றுச் சென்றுர். இரண்டாவது இசைவிழாவின் வரவு செலவுக் கணக்குகளை முடிப்பதும் மலர் அச்சுவேலையும் அரை குறையாக இருந்தன. வந்து விடுவார், முடித்து விடலாம் என்று எதிர்பார்த்திருந்தோம். நாலைந்து மாதங்களாக எவ்விதத் தகவலும் இல்லை. சில நாள் முன்பு ராஜிநாமாக் கடிதம் வந்தது. தமது முழுமையான முகவரியைக் கூட அதில் தெரிவிக்கவில்லை. அவரது ஒத்துழைப்புக் கிடைக்காததாலும் வெளியூர் சென்றுவிட்டதாலும் மலர் வெளியீடு இவ்வளவு தாமதப் பட்டு விட்டது. இன்றேல் நாலைந்து மாதங்களுக்கு முன்பே வெளிவந்திருக்கும். போனுற்போகட்டும். எங்கிருந்தாலும் வாழ்க !

அருட்பாமணி விசுவநாதன் திருஅருட்பா இசை உலகில் பலருக்கு ஆர்வமுண்டாக்கி அவர்களை ஆளாக்கியவர். பழம் பெரும் அருட்பா கோஷ்டியினருள் இன்று நம்மிடையே விளங்கும் ஒருவரே ஒருவர். அவர் செயலாளராக அமைந்தது முற்றிலும் பொருத்தமே. சாது ராஜிநாமாச் செய்து விட்டதால் இனிச் செயலாண்மைப் பொறுப்பு (பாரம்) முற்றிலும் அருட்பாமணியின் தோள்களின் மீதே விழுகிறது. வரவு செலவுக் கணக்கு விஷயத்தில் செயலாளர் இருவரும் கூட்டுப் பொறுப்பு வகித்ததை இனிச் செயலாளரும் பொருளாளரும் கூட்டுப் பொறுப்பு வகிப்பதாக மாற்றிக் கொள்ள வேண்டியதுதான். மற்ற பல விஷயங்களில் இசைமுகில் புருஷோத்தமன் அருட்பாமணிக்கு உதவியாகப் பணி புரிய வேண்டியது தான். வாழ்க அருட்பாமணி ! வளர்க அவர் பணி !!

இசைச் சங்கம் தொடங்கி இரண்டாண்டுகள் முடியவில்லை. அதற்குள் இரண்டு இசைவிழாக்கள் நடந்து விட்டன. முதல் விழா 1986 அக்டோபரில் வள்ளற்பெருமான் திரு அவதாரத் திருநாளை ஒட்டி 4-10-86 ; 5-10-86 ; 6-10-86 ஆகிய மூன்று நாள் நடந்தது. பெருமழை பெய்ததால் பெரும் இடையூறு. மேலும் அக்டோபர் 1 முதல் 8 முடியச் சென்னையில் திரு. நா. மகாலிங்கம் அவர்கள் வழக்கமாக

22 ஆண்டுகளாக நடத்திவரும் வள்ளலார் காந்தி விழா. ஒரே சமயம் இரு இடங்களில் பெருவிழா நடத்துவதால் நடத்துவோர்க்கு மட்டுமின்றிக் கலந்து கொள்வோர்க்கும் காண, கேட்க வருவோர்க்கும் சில பல சிரமங்கள். ஆதலில் இனி அடுத்த விழாவைக் கோடை காலத்தில் வைகாசி 11 ஐ ஒட்டி வைத்துக் கொள்வனெ அப்போதே முடிவு செய்யப் பெற்றது. அதுபோன்றே இரண்டாவது இசைவிழா 1987 மே 22-25, வைகாசி 8; 9; 10; 11 ஆகிய நான்கு நாளும் நடந்தது. இனி ஆண்டுதோறும் வைகாசி 8; 9; 10; 11 நான்கு நாளும் வடலூரில் திரு அருட்பா இசைவிழா என்று நிரந்தரமாக நாள்கள் நிச்சயிக்கப்பெற்றுவிட்டன. நிரந்தரமாக நாள்களை நிச்சயித்து விட்டதால் அழைப்பிதழைக் கூட எதிர்பாராமல் நாடெங்கும் உள்ள ஆர்வமுள்ள அன்பர்கள் வந்து கண்டும் கேட்டும் மகிழப் பெரு வாய்ப்பாகும்.

முதல் இசைவிழாவில் சீர்காழியும் சேலம் ஜெயலட்சுமியும் கலந்து கொண்டு அருட்பா இசைவிருந்தளித்தனர். அருட்பா இசைவாணர்கள் பலரும் பங்கு கொண்டு பாடி மகிழ்ந்தனர், மகிழ்வித்தனர். பாண்டிச்சேரி அனைத்திந்திய வானொலியினர் வந்திருந்து நிகழ்ச்சிகளை ஒலிப்பதிவுசெய்து ஒலிபரப்பினர். நம்மைக்காணவந்த மயிலை குருஜீ சுந்தரராம் சுவாமிகள் இசைவிழா மேடைக்கும் எழுந்தருளிவாழ்த்தியமை ஓர் அரிய வாய்ப்பாயிற்று. தில்லைத் திருப்பணிச் செல்வர் திரு. G. வாகீசம்பிள்ளை அவர்கள் மூன்று நாளும் வடலூரிலேயே தங்கிக் காலந்தவறாது எல்லா நிகழ்ச்சிகளுக்கும் வந்திருந்து கண்டும் கேட்டும் சிறப்பித்தார், மூன்று நாளும் பிள்ளையவர்கள் அவையில் இருந்தது விழா அரங்குக்கே ஒரு தனிச் சிறப்பைத் தந்தது. 'வாகீசம் பிள்ளையே வந்து மூன்று நாளும் தங்கியிருந்து கேட்கிறார்' என்று வந்திருந்த அன்பர்களிற் பலர் சொல்லிச் சொல்லி வியந்தனர், மகிழ்ந்தனர். முதல் இசைவிழா அரங்கே, நிகழ்ச்சிகளே, வந்திருந்த கூட்டமே கண்திருஷ்டிபட்டுவிடும் போல் இருந்தது.

இரண்டாம் ஆண்டு இசைவிழா அதைவிடச் சிறப்பு. தொலைக்காட்சியினர் வந்திருந்து நிகழ்ச்சிகளைப் பதிவு செய்து ஒளிபரப்பினர். சீர்காழியின் இசை விருந்தோடு இவ்வாண்டு அவர் மகனார் டாக்டர் சிவசிதம்பரத்தின் தனி இசைவிருந்தும் நிகழ்ந்தது. இசைப்பேரறிஞர் மதுரை சோமுவின் இசைவிருந்தும் இசைப்பேரரசி சேலம் ஜெயலட்சுமியின் இசைவிருந்தும் நிகழ்ந்தன. சென்ற ஆண்டைவிட மிகுதியாகத் திருஅருட்பா இசைக்கலைஞர்கள் கலந்துகொண்டு பாடினர். சென்ற ஆண்டைவிடக்கூட்டமும் மிகுதி. எல்லாவகையிலும் முதல் விழாவை விட இரண்டாம் விழா, சிறப்பாக அமைந்தது. இம்மலரின் ஒரு பகுதி மட்டும் வெளியிடப்பெற்றது. அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர் திரு. RM. சேதுநாராயணன் அவர்கள் வந்திருந்து மலரை வெளியிட்டுச் சிறப்பித்தார். அவர்களுக்குச் சங்கத்தின் நன்றியும் எம் வாழ்த்தும் உரிய ! வாழ்க துணைவேந்தர் சேதுநாராயணன் அவர்கள் ! வெல்க அவர் பணிகள் !! ஒரே ஒரு குறை, சென்ற ஆண்டு அரங்கில் மூன்று நாளும் காட்சியளித்த வாகீசம் பிள்ளை யவர்களை இவ்வாண்டு காண இயலாமற்போனதே ! அந்தோ ! அவர் அண்மையில் அமரராகி விட்டார். அவர் ஆன்மா உரிய மறுமை நலம் பெறுக !

திருவண்ணாமலை கௌதம ஆசிரமம் தவத்திரு சுவாமி ஸ்ரீநிவாசலு அவர்கள் தாம் வடலூரிற் கட்டியுள்ள முத்துலட்சுமி அம்மையார் திருமணமண்டபத்தை விழாவுக்கு உணவளிப்பு தங்குமிட உபயோகத்திற்காகக் கொடுத்துதவினார்கள். அன்பர்பலரை ஆயுள் உறுப்பினராகச் சேர்த்தும் உதவினார்கள். சுவாமிகளின் ஆசி இசைச் சங்கத்திற்குப் பெரிதும் வலிவூட்டுவதாகும். சுவாமிகள் வாழ்க! அவர்கள் பணிகள் ஓங்குக!! உணவளிப்பு உபசரிப்புப் பொறுப்பு முழுவதையும் சன்மார்க்கப் பணி அன்னையார் தருமாம்பாள் அவர்கள் தாயன்போடு செய்தார்கள். விழாவின் வெற்றிக்கு இஃதோர் இன்றியமையாக் காரணம். வாழ்க அம்மையார்! வழி வழி வாழ்க!!

வடலூர் அபிவிருத்திப் பணி மூவராகிய சட்டமன்ற உறுப்பினர் திரு. A. தங்கராசு அவர்களும் ஒன்றியத் தலைவர் திரு. C. நடேசன் அவர்களும் பேரூராட்சித் தலைவர் திரு. து. இராமலிங்கம் அவர்களும் கலந்து கொண்டு சிறப்பித்தனர். இம் மூவர்க்கும் சங்கத்தின் நன்றியும் நமது வாழ்த்தும் உரிய. வாழ்க! வாழ்க!!

திருவையாறு தியாகப்பிரம்ம மகோத்சவ சபையைப்போல், தமிழிசைச் சங்கத்தைப்போல் திருவருட்பா இசைச் சங்கமும் செழித்து வளர்ந்து நன்கு பணி செய்யவேண்டும். ஆண்டுதோறும் கோடைகாலத்தில் திருஅருட்பா இசைவிழாவை நடத்துவதோடு அமையாது, வடலூரில் திருஅருட்பாஇசைப்பள்ளி ஒன்றைத் தொடங்கி நடத்தவேண்டும். நாளடைவில் அது திருஅருட்பா இசைக்கல்லூரியாக ஆகவேண்டும். திருஅருட்பா இசைப் பாடல்களை ஒரு தனி நூலாக, சிறந்த ஆராய்ச்சிப்பதிப்பாக, இசைப்பதிப்பாக வெளியிடவேண்டும். திருஅருட்பா இசைக்கலைஞர்களுக்கு அஃதோர் கையேடாக, திருஅருட்பா இசைபயிலும் மாணாக்கர்களுக்கு அஃதோர் பாடப்புத்தகமாகத் திகழவேண்டும். திருஅருட்பா இசைத்தட்டுகளையும் காசெட்டுகளையும் வெளியிட வேண்டும். பெரிய அமைப்பாக விளங்கிப் பெரும் பணிகளைச் செய்யவேண்டும். இதற்கெல்லாம் பெரும் பொருள் வேண்டுமே. எங்கே போவது? ஆர்வமுள்ள அன்பர்கள் அவ்வப்போதிய செலவுக்கும் நிரந்தர நிதிவைப்புக்கும் தங்கள் பங்கைத் தாராளமாகத் தந்துதவவேண்டும்.

இதுவரை மூன்று பெருந்தகையாளர்கள் ஆண்டுதோறும் ஆயிரம் ரூபாய் வழங்கத் தாமாகவே இசைந்துள்ளனர். 1. மூப்பனார், 2. அருட்செல்வர் மகாலிங்கம், 3. அன்புச் செல்வர் திரு. நா. பூமலை. இப்படிப்பட்டவர்களின் எண்ணிக்கை பெருகினால் நாடு எவ்வளவோ முன்னேறும். நம் இசைச்சங்கமும் செழிப்புறும்.

ஆயுள் உறுப்பினர் நன்கொடை ரூ 250. இத்தொகையைச் செலவழிப்பதில்லை. நிரந்தர நிதிவைப்பாக அதிக வட்டிதரும் கூட்டுறவு வங்கியில் மூலதனமாக டெபாசிட் செய்து, அதன் வட்டிவருவாய் மட்டுமே செலவு செய்யப்பெறும். இதுவரை 147 அன்பர்கள் ரூ 250 வழங்கி ஆயுள் உறுப்பினராகச் சேர்ந்துள்ளனர். வாகீசம்பிள்ளை தம் மகன் நால்வரோடும் உறுப்பினரானார். நெய்வேலி இராஜேந்திரன் குடும்பத்தில்

குடும்ப

அனைவரும் (அவர், அவரது துணைவியார், மகன், மகள் ஆகிய நால்வருமே) உறுப்பினர்கள். இஃதன்றித் தமையனர், தமையனரின் துணைவியார் ஆகியோரையும் உறுப்பினராக்கினர். இவ்வாறு மூலதனம் வழங்கும் ஆயுள் உறுப்பினர்களின் எண்ணிக்கை ஆயிரமும் அதற்கு மேலும் ஆகவேண்டும். அருட்பா இசைப்பணி காலங் காலமாகத் தொடர்ந்து தங்கு தடையின்றி உலகமுள்ளளவும் நடக்க வேண்டும். அன்பர்கள் பெருமனங்கொள்ள வேண்டுகிறோம்.

**திருஅருட்பா இசைமலர்**

திருஅருட்பா இசைச் சங்கத்திற்கு ஒரு சின்னம் (Emblem) எம்மால் வடிவமைக் கப்பெற்றது. திருஅருட்பா இசைமலராகிய இம்மலர் எம்மால் பதிப்பிக்கப்பெற்றது. டாக்டர் இராஜேந்திரன், டாக்டர் சிவகாமசுந்தரி, டாக்டர் சேலம் S. ஜெயலட்சுமி டாக்டர் S. இராமநாதன், குங்கிலியம் சாது. சண்முகனர் ஆகிய ஐவர் கட்டுரைகளும் மலரில் முதலில் இடம் பெறுகின்றன. அடுத்து, திருஅருட்பா கீர்த்தனைப் பகுதி ஆ. பாலகிருஷ்ண பிள்ளை பதிப்பின் முன்னுரையும் பொருளடக்கமும் இடம் பெறு கின்றன. அருட்பாவின் ஆராய்ச்சிப் பதிப்புக்கென்றே பிறந்தவர் ஆ. பாலகிருஷ்ண பிள்ளை. அவர் பதிப்பை எவ்வளவு பாராட்டினாலும் தகும். கீர்த்தனைப் பகுதியின் அவருடைய முன்னுரை அரிய செய்திகள் பலவற்றைக் கூறுவது. அடுத்து இடம் பெறுவன நம்மால் எழுதப் பெற்றவை. திருஅருட்பா இசைப் பாடல்களுக்குச் சிறு குறிப்பு முறையில் நாம் எழுதியுள்ள சிற்றாராய்ச்சியும், தொகுத்துள்ள இராக தாள அட்டவணையும் அருட்பா இசைக் கலைஞர்களுக்கு மிகவும் பயன்படுபவை. 56 பக்கங் களுக்கு விரிந்த இவை ஒரு தனி நூலாகவே வடிவங் கொள்ளத் தக்கவை. வள்ளலாரு டன் பழகிய பலருள் ச.மு.க. ஒருவரே இசையறிவு வாய்ந்தவர். வள்ளலாரைப் பற்றிப் பல பிரபந்தங்களைப் பாடியவர். வள்ளலாரின் சரித்திரக் குறிப்புகளை எழுதியவர். திரு அருட்பாவைப் பதிப்பித்தவர். நாடெங்கும் சமரச பஜனை செய்தவர். அவரது வரலாற்றை மிகச் சுருக்கமாக இரண்டே பக்கங்களில் எழுதியுள்ளோம். இதுவரை பலரும் அறியாத செய்திகள் பல அதனுள் உள்ளன.

திருஅருட்பா இசைக் கலைஞர்களின் வாழ்க்கைக் குறிப்பு ஈற்றில் இடம் பெறுகிறது. கலைஞர் முப்பத்தெண்மரைப் பற்றிய குறிப்புகளே கிடைத்தன. இன்னும் எவ்வளவோ பேரைப் பற்றிய செய்திகள் தெரியவில்லை. நமக்குத் தெரிந்து தூத்துக்குடி திரு. குட்டியப்பன் அவர்களைப் பற்றிய குறிப்பு விட்டுப்போயிற்று. அவர் சிறந்த அருட்பா இசைக் கலைஞர். இன்னும் பலரது வாழ்க்கைக் குறிப்புகளைக் கேட்டுப் பெறுதல், இதுவரை வெளிவந்துள்ள திருஅருட்பா இசைத்தட்டுகள் கேசட்டுகள் பற்றிய முழுமையான விபரங்கள், அருட்பாவைப் பாடிப் பரப்பிய கிட்டப்பா போன்ற பழம்பெரும் இசை வித்துவான்களின் பெயர்களைத் தொகுத்தல் முதலிய பணிகளைச் செயலாளரிடம் ஒப்படைத்திருந்தோம். அவையெல்லாம் தொகுக்கப்பெறாது தவிர்ந்தன.

விளம்பரங்கள் உதவிய வணிகப் பெருமக்களுக்குச் சங்கத்தின் நன்றியும் எமது வாழ்த்தும் உரியன. அவர்களது குடும்பம், வாணிகம், தொழில், தொண்டுகள் ஆகிய அனைத்தும் செழித்தோங்க வாழ்த்துகின்றோம். வாழ்க! வாழ்க!!

**அச்சகத்தார்க்கு நன்றியும் வாழ்த்தும்**

இம்மலரை அழகாக அச்சிட்டுக் கொடுத்தோர் வடலூரில் நெய்வேலி மெயின் ரோடில் (தபால் நிலையம் அருகே) உள்ள **வி. ஆர். பிரிண்டர்ஸ்** ஆவர். இவ்வச்சகத்தார் ஒழுங்கும் வேலைத்திறனும் மிக்கவர்கள். பிழையின்றி நன்றாக அச்சு வேலையை முடித்துக் கொடுத்த வி. ஆர். பிரிண்டர்ஸுக்குச் சங்கத்தின் நன்றியும் எமது வாழ்த்தும் உரியன. வளர்க! வாழ்க!! குறித்தகாலத்தில் அச்சுப்பணியை முடித்துக் கொடுக்க அச்சகத்தார் தயாராக இருந்தும் முற்கூறியவாறு செயலாளர் சாதுவால் ஏற்பட்ட இடையூறால் வேலையை முடித்துக் கொள்வதில் தாமதம் ஏற்பட்டுவிட்டமையால் சங்கத்திற்கும் எமக்கும் அச்சகத்திற்கும் உண்டான கஷ்ட நஷ்டங்கள் பல. சங்கமும் நாமும் அவற்றைப் பொறுத்துக் கொள்வது போன்று அச்சகத்தாரும் பொறுத்துக் கொள்வார்களாக.

**அன்பர்களுக்கு ஒரு வேண்டுகோள்**

சன்மார்க்க உலகில் இத்தகைய ஒரு மலர் வெளிவருவது இதுவே முதன் முறை. இதற்குமுன் இப்படி ஒரு மலர் வெளிவந்ததில்லை. இதற்குப்பின் இப்படி இன்னொரு மலர் வெளிவருவதற்கு வாய்ப்பு எப்போது நேருமோ?! ஆதலின் அன்பர்கள் இப்போதே இம்மலரை ஒன்றுக்கு இரண்டாக வாங்கிப் பயன்படுத்திக் கொள்ளவும் பத்திரப்படுத்திக் கொள்ளவும் வேண்டுகிறோம்.

வாழ்க! வாழ்க!

வள்ளலார் கழல் வாழ்த்தல் வாழ்வாவதே.

**- ஊரன் அடிகள்**

---

# திரு அருட்பா இசைச் சங்கம், வடலூர்.

*புரவலர்கள்*

தவத்திரு. **ஊரன் அடிகளார்,** வடலூர்.

திரு. **G. கருப்பையா மூப்பனர்**
பொதுச்செயலாளர், அகில இந்திய காங்கிரஸ், புதுடில்லி.

அருட்செல்வர் Dr. **நா. மகாலிங்கம்,** B. Sc., F.I.E.,
தலைவர், இராமலிங்கர் பணிமன்றம், சென்னை.

சங்கீதகலாநிதி டாக்டர் **செம்மங்குடி R. சீனிவாசய்யர்**

இசைச் சக்கரவர்த்தி **இளையராஜா,** இசை இயக்குனர்.

*தலைவர்*

தியாகச்செம்மல் **அன்பு வேதாசலம்,** பட்டுக்கோட்டை.

*துணைத் தலைவர்கள்*

பத்மஸ்ரீ டாக்டர் மதுரை **S. சோமசுந்தரம்**

பத்மஸ்ரீ டாக்டர் சீர்காழி **S. கோவிந்தராஜன்**

இசைப்பேரறிஞர் டாக்டர் **S. இராமநாதன்**

டாக்டர் **A. இராஜேந்திரன்** B. Sc., B.E., நெய்வேலி.

டாக்டர் **சு. சிவகாமசுந்தரி** M.A., Ph.D., கோயம்புத்தூர்.

*செயலாளர்கள்*

தியாகி **சாது முத்தையா,** வடலூர்.

அருட்பாமணி. **ந. விசுவநாதன்,** வடலூர்.

டாக்டர். **சேலம் S. ஜெயலட்சுமி**

*பொருளாளர்*

**A. சண்முகம்,** வணிகர், கும்பகோணம்.

## செயற்குழு உறுப்பினர்கள்

திரு. வள்ளல் ஆறுமுகம் பிள்ளை — திருப்பத்தூர்
திரு. K. தாமோதரசாமி நாயுடு — கோயம்புத்தூர்
திரு. L. சோமு — R.S. புரம், கோயம்புத்தூர்
திரு. நா. பூமலை — பரவலூர்
திருமதி. Dr. M.L. வசந்தகுமாரி — சென்னை
திரு. குன்னக்குடி வைத்தியநாதன் — சென்னை
திரு. மகாராஜபுரம் V. சந்தானம் — சென்னை
திரு. உமையாள்புரம் K. சிவராமன் — சென்னை
திரு. நாமகிரிப்பேட்டை K. கிருஷ்ணன் — நாமகிரிப்பேட்டை, சேலம்
திரு. Dr. N. ரமணி — சென்னை
திரு. A. K. பழனிவேல் — அரித்துவாரமங்கலம், தஞ்சை
திரு. டாக்டர் P. வள்ளல்பெருமான் M. D. பாராளுமன்ற உறுப்பினர், சிதம்பரம்
திரு. A. தங்கராசு M.L.A. சட்டமன்ற உறுப்பினர், — சேராக்குப்பம்
திரு. C. நடேசன், தலைவர், ஊராட்சி ஒன்றியம், குறிஞ்சிப்பாடி — வடலூர்
திரு. D. இராமலிங்கம், தலைவர், வடலூர் பேரூராட்சி — வடலூர்
திரு. M. இராமமூர்த்தி ரெட்டியார் — வடலூர்
திரு. தியாகி R. K. முருகேச நாயுடு — வடலூர்
தவத்திரு. குங்கிலியம். பழ. சண்முகனர் — வடலூர்
திரு. கவிஞர் ஆதி கணேசன் — வடலூர்
திரு. இசைமுகில் K. புருஷோத்தமன் — மருத்திருங்குப்பம்
திரு. S. இராஜாங்கம், ஆசிரியர் — வடலூர்
திருமதி. P. தருமாம்பாள் — சத்திய தருமச்சாலை வீதி, வடலூர்
திரு. Dr. வ. சுப்பிரமணியன் B. Sc., M.E., Ph.D. — கோயம்புத்தூர்
திரு. K. பாலசுப்பிரமணியம், வாசவி சர்விஸ் — சேத்தியாத்தோப்பு
திரு. R. அருட்பிரகாசம் B.Sc., — காரைக்குடி
திரு. A.C. ஆறுமுகம் — சேலம்
திரு. D. பாலசுப்பிரமணியம் — சேலம்
தவத்திரு. இராமதாஸ் சுவாமிகள், வள்ளலார் மாணவர் இல்லம், கும்பகோணம்
திரு. Dr. M. C. இராஜமாணிக்கம் M.S., — ஈரோடு
திரு. Rtn. Dr. M.V. இராஜமாணிக்கம் — மன்னார்குடி
திரு. ஆழி. த. முத்தையா, மீனாட்சி திரையரங்கம் — கும்பகோணம்
திரு. T. K. இராமலிங்கம் செட்டியார் — பண்ணுருட்டி
திரு. D. அருணாசலம் — மாரியம்மன் கோயில், தஞ்சை
திரு. Dr. R. கோவிந்தராஜு — சென்னை
திரு. R. நடராஜன் — நாகப்பட்டினம்
திரு. G. கிருஷ்ணமூர்த்தி, ஊராட்சி மன்றத் தலைவர், — பூங்குணம்
திரு. G. இராமதாஸ் வன்னியர், மிராசு, வங்காரம்பேட்டை P.O. பாபநாசம் Tk
திரு. S. இராஜாங்கம், மிராசு, மாத்தூர்-அய்யம்பேட்டை-தஞ்சை மாவட்டம்
திரு. K. ஆறுமுகம் — பட்டுக்கோட்டை

---

# திரு அருட்பா இசைச் சங்கத்திற்கு வைப்பு நிதியாக ரு. 250 மூலதனம் வழங்கிய ஆயுள் உறுப்பினர்கள்

| | | |
|---|---|---|
| 1 | தவத்திரு. ஊரன் அடிகள் | வடலூர் |
| 2 | திரு. அன்பு வேதாசலம் | பட்டுக்கோட்டை |
| 3 | திரு. தியாகி முத்தையா | வடலூர் |
| 4 | திரு. R. K. முருகேச நாயுடு | வடலூர் |
| 5 | திரு. மு. காந்திநாதன் B. A. B. G. L. | நங்கவள்ளி - சேலம் |
| 6 | திரு. R. பலராமன், அருள் ஏஜன்சிஸ் | வடலூர் |
| 7 | திரு. N. கோவிந்தசாமி | ஆனந்தா எம்போரியம், பாண்டிச்சேரி |
| 8 | திரு. G. V. மருதவாணன் | பின்னலூர் |
| 9 | திரு. Dr. G. V. இராமலிங்கம் M. B. B. S., | வடலூர் |
| 10 | திரு. M. A. கந்தசாமி | மதுரை |
| 11 | திரு. D. அருணாசலம் | மாரியம்மன்கோயில் |
| 12 | திரு. A. M. இராமலிங்கம் | பண்ணுருட்டி |
| 13 | திரு. A. சண்முகம் | கும்பகோணம் |
| 14 | திரு. S. புஷ்பவல்லி சன்முகம் | கும்பகோணம் |
| 15 | திரு. N. M. இராமலிங்கம் | கும்பகோணம் |
| 16 | திரு. K. ஆறுமுகம் | பட்டுக்கோட்டை |
| 17 | திரு. Dr. A. இராசேந்திரன் | கோயம்புத்தூர் |
| 18 | திரு. P. காசி விசுவநாதன் | கோயம்புத்தூர் |
| 19 | திரு. R. சந்திரகாந்தன் A.C.T.O. | மதுரை |
| 20 | திரு. M. S. கருணாகரன் M.A.M.Sc., | அண்ணாமலைநகர், சிதம்பரம் |
| 21 | திரு. S. கலியமூர்த்தி B. E. சுகர்மில் | திருவலம் (வழி) |
| 22 | திரு. K. S காவேரிமுதலியார் | சேலம்-1 |
| 23 | திரு. Dr. S. இராமநாதன் | சென்னை-5 |
| 24 | திரு. T. S. தியாகராஜன் (திருக்கோவிலூர்) | சென்னை-28 |
| 25 | திரு G. பாலசுப்பிரமணியம் (பாலு) | பட்டுக்கோட்டை |
| 26 | திரு. T. சுப்பிரமணியம் B.A , B.T., | பட்டுக்கோட்டை |
| 27 | திரு. S கலியபெருமாள் (P. T. C. டிரைவர்) | சென்னை - 23 |
| 28 | திரு. ச. மெய்யப்பன் M. A., | சிதம்பரம் |
| 29 | திரு. M. இராமானுஜம் | மேலப்புதுப்பேட்டை |
| 30 | திரு. நா. பூமலை | பரவனூர் |
| 31 | திரு. G. V. சிவசுப்பிரமணியன் | பாண்டிச்சேரி |
| 32 | திரு G. V. பாலதண்டாயுதம் | சிதம்பரம் |
| 33 | திரு. G. வாகீசம்பிள்ளை | சிதம்பரம் |
| 34 | திரு. Dr. சீர்காழி S. கோவிந்தராஜன் | சென்னை - 28 |
| 35 | திரு. K. பாலசுப்பிரமணியம் (வாசவி) | சேத்தியாத்தோப்பு |
| 36 | திருM. .R. பால்ராஜ் சகோதரர்கள் | பெங்களூர் |
| 37 | திரு. A. சங்கரநாயகர் | கடலூர் - 2 |
| 38 | திரு. Dr P. சரசு M.A., Ph. D. | பேரூர், கோவை |

| | | |
|---|---|---|
| 39 | திரு. T. K. முத்துசாமி செட்டியார் | திருப்பூர் |
| 40 | திரு. ஞானி மு. தனபால் செட்டியார் | மதுரை |
| 41 | திரு. M. N. S. T. சிதம்பரம் செட்டியார் | காரைக்குடி |
| 42 | திரு மு. மெ. முத்துராமன் செட்டியார் | காரைக்குடி |
| 43 | திரு. M சீதாராம ரெட்டியார் | தோட்டப்பட்டு |
| 44 | திரு. R. ராஜேந்திரபாபு நாயுடு (லக்கி ஸ்டுடியோ) | வடலூர் |
| 45 | திரு. ம. கொ. அப்பையன் B.Sc., (Agri) | புதுக்குடி, கொடவாசல் |
| 46 | திரு. N. சண்முகம் B.Sc, (Tech) | மயிலாடுதுறை |
| 47 | திரு. R. இராமநாதன் (ஜுவல்லர்ஸ்) | சிதம்பரம் |
| 48 | திரு. மகாராஜபுரம் V. சந்தானம் (இசைவித்வான்) | சென்னை-17 |
| 49 | திரு. Dr. H. கோதண்டராமன் M.Sc., Ph.D., | சென்னை-85 |
| 50 | திரு. V. மனோகரன் | நெய்வேலி |
| 51 | திரு. டாக்டர் இராமானுஜன் | நெய்வேலி |
| 52 | திரு. N. இராமையாப்பிள்ளை | கிழப்படுகை |
| 53 | திரு. K. ராதாகிருஷ்ணன் | ஒரத்தநாடு-தஞ்சை |
| 54 | திரு. A S. பழனியப்பன் | குறிஞ்சிப்பாடி |
| 55 | திரு. P. கோவிந்தராஜபிள்ளை | காரைக்கால் |
| 56 | திரு. A.P. வைத்தியலிங்கம் | குறிஞ்சிப்பாடி |
| 57 | திரு. அருட்பா வெ. மகாலிங்கம் | மதுரை |
| 58 | திரு. L. சோமு | ஆர். எஸ். புரம், கோயம்புத்தூர் |
| 59 | திரு. ஸ்ரீதேவி டெக்ஸ்டைல்ஸ் | காந்திபுரம் கோயம்புத்தூர் |
| 60 | திரு. ப. வேலம்மாள் | R.S. புரம், கோயம்புத்தூர் |
| 61 | திரு. ம. இராமு R.I.M.P. | பேரூர்வாம்பட்டி-கோவை |
| 62 | திரு. K.S வீரண்ண செட்டியார் | கோயம்புத்தூர் |
| 63 | திரு. சுப்பையன் | காந்திபுரம்-கோவை |
| 64 | திரு. S. இராமையாபிள்ளை (சோனு) | கோயம்புத்தூர் |
| 65 | திரு. N. சிவசுப்பிரமணியன் B.E., | காந்திபுரம்-கோவை |
| 66 | திருமதி. டாக்டர் சு. சிவகாமசுந்தரி M.A , Ph.D., | கோயம்புத்தூர் |
| 67 | திரு. V. சுப்பிரமணியன் B.Sc., M.E. Ph.D., | கோயம்புத்தூர் |
| 68 | திருமதி ப. தருமாம்பாள் | வடலூர் |
| 69 | திரு. A. ராஜ்மோகன் M.A., M.B.A., I.P.S. | சென்னை-85 |
| 70 | திரு. செல்வகுமாரி ராஜ்மோகன் | சென்னை-85 |
| 71 | திரு. N. ஆறுமுகம் M.A., | பெண்ணாகடம் |
| 72 | திரு. A. சதாசிவம் | வேலூர் வ.ஆ. |
| 73 | தவத்திரு. சுவாமி ஸ்ரீநிவாசலு | திருவண்ணாமலை |
| 74 | திரு. D. S. மணி முதலியார் | திருவண்ணாமலை |
| 75 | திரு. P. பாலாஜி | திருவண்ணாமலை |
| 76 | திரு. A. கிருஷ்ணமூர்த்தி | திருவண்ணாமலை |
| 77 | திரு. K. நிர்மல்குமார் | திருவண்ணாமலை |
| 78 | திரு. ஞானமுதலியார் | திருவண்ணாமலை |
| 79 | திரு. N. முருகேசன் | கீழ்முதுகூர் |
| 80 | திரு. நா. இராசாராமன் A.C.T.O. | நவல்பூர். வ.ஆ. |
| 81 | திரு. புலவர் ப. கோவிந்தசாமி | மன்னார்குடி |
| 82 | திரு. R. விநாயகம் B.A.B.L., | விருத்தாசலம் |
| 83 | திருமதி. டாக்டர் சேலம் S. ஜெயலட்சுமி | சென்னை-18 |

84 திரு. Dr. M.C. இராசமாணிக்கம் M.S., தலைவர், ச. சு. ச. சங்கம். ஈரோடு
85 திரு. அருட்பாமணி ந. விசுவநாதன் வடலூர்
86 திரு. V. அருட்பெருஞ்ஜோதி (கதகளி ஆசிரியர்) கொல்லங்கோடு, கேரளா
87 திரு. உ. முத்தையா, ஆசிரியர் கீழ்க்குடி, காமராஜர் மாவட்டம்
88 திரு. M. பழனியம்மாள் திருப்பூர்
89 திரு. R. நீலகண்டன் B.A., சிவகங்கை
90 திருமதி R. தில்லைநாயகி ராஜசேகர் அடையாறு, சென்னை
91 திரு. S. முத்துக்குமார், குமாரசாமி & Co திருவனந்தபுரம்-கேரளா
92 திரு. ப, ஜெயபால் செட்டியார் (சைக்கிள் கம்பெனி) வடலூர்
93 திரு. T.S. முருகேசன் M.A.B.L. விருத்தாசலம்
94 திரு. R. லக்ஷ்மணன், முனிசிபல் சேர்மென் விருத்தாசலம்
95 திரு. T. S. சோமசுந்தரம் விருத்தாசலம்
96 திரு. கும. நா. மாணிக்கம் செட்டியார் விருத்தாசலம்
97 திரு. C. தங்கவேல் உடையார் விருத்தாசலம்
98 திரு. TK. இராமலிங்கம் செட்டியார் பண்ணுருட்டி
99 திரு. புலவர் கோ. சீனுவாசன் சத்தியவாடி தெ.ஆ.
100 திருமதி. பவுனம்மாள் பாண்டிச்சேரி
101 திரு. A. P. வெங்கடாசலம் ஈரோடு
102 திரு. தஞ்சை உபேந்திரன் (மிருதங்கவித்வான்) சென்னை-28
103 திரு. இரா. அருள்பிரகாசம் சென்னை-1
104 திரு. P. நடராஜன் B.A., B.T., மீனாட்சி திரை அரங்கம் கும்பகோணம்
105 திரு. ஆழி. முத்தையா (மீனாட்சி திரை அரங்கம்) கும்பகோணம்
106 திரு. S. கோபாலகண்ணன் சேத்தியாத்தோப்பு
107 திரு. M, இராஜமாணிக்கம் சேத்தியாத்தோப்பு
108 திரு. ஜெகன் சைக்கிள் மார்ட் சேத்தியாத்தோப்பு
109 ஸ்ரீ மீனாட்சி மெடிக்கல்ஸ் சேத்தியாத்தோப்பு
110 திரு. S. K, தணிகாசலம் சேத்தியாத்தோப்பு
111 ஸ்ரீனிவாசா ஏஜன்சிஸ் சேத்தியாத்தோப்பு
112 திரு. M.S,D. சந்திரசேகரராஜா இராஜபாளையம்
113 திரு. N. கிருஷ்ணசாமி செட்டியார் பாண்டிச்சேரி
114 திரு. G. இராமலிங்கம் ஈரோடு
115 திரு. L. கணேசன் அரிமளம், புதுக்கோட்டை Dt
116 திரு. A.K.V. பொன்னுசாமி, தலைவர், அருட்ஜோதி சன்மார்க்க சங்கம், ஈரோடு
117 திரு. G. கணேசன் பாண்டிச்சேரி
118 திரு. RM. சேதுநாராயணன் (துணைவேந்தர்) அண்ணாமலைப்பல்கலைக்கழகம்
119 திரு. பா. சொ. நல்லப்பன் மேலப்புதுப்பேட்டை
120 திரு. P. L. S. செந்தில் ஆறுமுகம் B.A., தூத்துக்குடி
121 திரு. சி. நடேசன், தலைவர், குறிஞ்சிப்பாடி ஊராட்சி ஒன்றியம் வடலூர்
122 திரு. து. இராமலிங்கம் தலைவர், வடலூர் பேரூராட்சி வடலூர்
123 திரு. K. இராஜசேகரன் வாசவி எஞ்சினியரிங் கார்ப்பரேஷன், நெய்வேலி
124 திரு. எஸ். வி. கலியபெருமாள் தலைவர், வடக்குத்து ஊராட்சி
125 திரு, V. தியாகராஜன், தலைவர், ச. சு. ச சங்கம் கடலூர்
126 திரு. Dr. சீர்காழி G. சிவசிதம்பரம் சென்னை-28
127 திரு. S.V. அண்ணாமலை முதலியார் வேலூர் வ.ஆ.
128 தவத்திரு. வியோமமாமுனிவர் வில்லியனூர்

129 திரு. S. இராமலிங்கம் B.Sc., B.L., சேலம்-7
130 திரு. பாகவதர் S. அருணசலம் பிள்ளை தந்தமங்கலம்-கேரளா
131 திரு T.R.V. செல்வராஜு செட்டியார் பண்ணுருட்டி
132 திரு. S. வீரமாகாளிப்பிள்ளை மதுரை
133 அருள்மிகு ஸ்ரீ ஆண்டவர் சுப்பிரமணியசுவாமி பக்த ஞானகான சபா திருப்பரங்குன்றம்
134 திரு. வெ, பெருமாள் புதுக்குடி. இராமநாதபுரம் மாவட்டம்
135 திரு. K. கனகசபாபதி சென்னை
136 திரு. M. P. அருணசல முதலியார் சேலம்
137 திரு M. குப்புமுத்துராசு (Retd D.R.O.) ஈரோடு
138 திரு. K. தாமோதரசாமி நாயுடு (அன்னபூரணு) கோயம்புத்தூர்
139 திரு. வே. பா. இராமலிங்கம் மங்கைநல்லூர்
140 திரு. முல்லை G. V. நாதன் R. I. M. P. திருநெல்வேலி.6
141 திரு. சிக்கல் R. பாஸ்கரன் சென்னை-28
142 திரு. டாக்டர் ஸ்ரீமதி பிரமிளா கணேசன் சென்னை-34
143 திரு. அறச்சுடர். K. முத்துலிங்கா ரெட்டியார் கயப்பாக்கம்
144 திரு. Dr. A. இராஜேந்திரன் B.Sc., B.E., முதன்மைப் பொறியாளர் நெய்வேலி-3
145 திருமதி. Dr. பத்மாவதி இராஜேந்திரன், துணைமுதன்மை மருத்துவர் நெய்வேலி-3
146 திரு. R. பத்மராஜ் M.B.B.S, S/o Dr. A. இராஜேந்திரன் நெய்வேலி-3
147 திரு. செல்வி R. உஷாராஜ் B. Arch. D/o Dr. A. இராஜேந்திரன் நெய்வேலி-3

---

## வேண்டுகோள்

திருஅருட்பா இசைச் சங்கத்திற்கு நிரந்தர வைப்பு நிதி ரு 250 வழங்கி ஆயுள் உறுப்பினராக அன்பர் அனைவரும் சேர வேண்டுகிறோம். இத்தொகையைச் செலவழிப்பதில்லை. அதிக வட்டி தரும் கூட்டுறவு வங்கியில் மூலதனமாக டெபாசிட் செய்து, வட்டி வருவாயை மட்டுமே இசை விழாவுக்குச் செலவிடப்பெறும். இசைச் சங்கத்திற்கு இதுவே மூலதனம். ஆகவே அன்பர் அனைவரும் குறைந்த தொகையாகிய ரு 250 மூலதனம் வழங்க அன்புடன் வேண்டுகிறோம். இசைச் சங்கத்தின் முகவரிக்குச் செக்காகவோ, டிராப்டாகவோ அனுப்பி வைக்கலாம்.



தவத்திரு. ஊரன் அடிகள்
புரவலர்.

டாக்டர், அருட்செல்வர்
**திரு. நா. மகாலிங்கம்**
B. Sc., F. I. E.
(தலைவர், இராமலிங்கர்
பணிமன்றம், சென்னை.)
புரவலர்.





**திரு. G. கருப்பையா மூப்பனார்**
**M.P.**
(அகில இந்திய காங்கிரஸ்
பொதுச் செயலாளர்)
புரவலர்.

இசைச்சக்கரவர்த்தி
**திரு. இளையராஜா**
புரவலர்.





தியாகச் செம்மல்

**திரு. அன்பு வேதாசலம்**

பட்டுக்கோட்டை.

தலைவர்.

**திரு. A. சண்முகம்**

பெருவணிகர், கும்பகோணம்.

பொருளாளர்.





டாக்டர்

**திரு. A. இராஜேந்திரன்**

B. Sc., B.E.,

(செயலாளர் & தாளாளர்

ஜவகர் அறிவியல் கல்லூரி, நெய்வேலி)

துணைத்தலைவர்.

டாக்டர்

**திருமதி. சு. சிவகாமசுந்தரி**

M. A., Ph. D.,

( தமிழ்ப்பேராசிரியர் - துறைத்தலைவர்

திரு. அவினாசிலிங்கம் மனையியல்கல்லூரி

கோயம்புத்தூர்.)

துணைத்தலைவர்.





தியாகி
**திரு. சாது முத்தையா**
செயலாளர்.

அருட்பாமணி
**திரு. ந. விசுவநாதன்**
வடலூர்.
செயலாளர்.





டாக்டர்
திருமதி. சேலம். **S. ஜெயலட்சுமி**
செயலாளர்.

திருமதி.
**ப. தருமாம்பாள் அம்மையார்**
வடலூர்.
செயற்குழு உறுப்பினர்.





டாக்டர். **வ. சுப்பிரமணியன்**
B. Sc., M. E. Ph. D.
(முதல்வர் (Dean),
வேளாண் பொறியியல் கல்லூரி,
தமிழ்நாடு வேளாண்மைப் பல்கலைக்கழகம்,
கோயம்புத்தூர்,)
செயற்குழு உறுப்பினர்.

**திரு. A. தங்கராசு M.L.A.,**
(சட்டமன்ற உறுப்பினர், குறிஞ்சிப்பாடித் தொகுதி,
அறங்காவலர்குழுத் தலைவர்
வள்ளலார் தெய்வநிலையங்கள், வடலூர்)
செயற்குழு உறுப்பினர்.





**திரு. C. நடேசன்**
(தலைவர், குறிஞ்சிப்பாடி ஊராட்சி ஒன்றியம்
வடலூர்
செயற்குழு உறுப்பினர்.

**திரு. து. இராமலிங்கம்**
(தலைவர், வடலூர் பேரூராட்சி)
வடலூர்
செயற்குழு உறுப்பினர்.



I

# தவத்திரு. ஊரன் அடிகள்

**புரவலர்.**

பெயர் : ஊரன் அடிகள்
முகவரி : வடலூர் - 607 303, தென்னார்க்காடு மாவட்டம்.
தொலைபேசி : வடலூர் 82.
பிறந்த ஊர் : நரசிங்கமங்கலம், சமயபுரம், திருச்சிராப்பள்ளி மாவட்டம்.
பெற்றோர் : இராமசாமி பிள்ளை, நாகரத்தினம் அம்மாள்.
பிறப்பு : 22—5—1933 (ஸ்ரீமுக, வைகாசி, 9).
நிலை : நைட்டிக பிரமச்சாரி, துறவி.
கல்வி : இண்டர்மீடியட், தேசியக் கல்லூரி, திருச்சிராப்பள்ளி.
பார்த்த உத்தியோகம் : நகரமைப்பு இன்ஸ்பெக்டர், ஸ்ரீரங்கம், வேலூர், திருச்சிராப்பள்ளி.
துறவு : 22—5—1967 முப்பத்தைந்தாம் அகவைத் தொடக்கநாள்
தற்போதியபணி : (1) நிறுவனர், ஆராய்ச்சியாளர் - சமரச சன்மார்க்க ஆராய்ச்சி நிலையம்.
ஆசிரியர் - சன்மார்க்க விவேகவிருத்தி (திங்களிதழ்)
(2) அறங்காவலர் குழு உறுப்பினர்,
திருவருட்பிரகாச வள்ளலார் தெய்வநிலையங்கள், வடலூர்.
துணைத்தலைவர், சத்திய தருமச்சாலைத் திருப்பணிக்குழு.

முன்னாள்பணிகள் : தலைவர், திருச்சிராப்பள்ளி மாவட்ட சன்மார்க்க சங்கம்
தலைவர், இளைஞர் இலக்கிய மன்றம், திருச்சிராப்பள்ளி.
ஆசிரியர், இராமலிங்கர் பணிமன்ற முத்திங்களிதழ், சென்னை.
செயலாளர், சுத்த சன்மார்க்க நிலையம். வடலூர்.
செயலாளர்&தாளாளர், வள்ளலார் குருகுலம் உயர்நிலைப்பள்ளி (O.P. இராமசாமி ரெட்டியார் அவர்களால் நிறுவப்பெற்றவை).

அறங்காவலர் குழு உறுப்பினர் (ஒருமுறை), அறங்காவலர் குழுத் தலைவர் (இருமுறை), தக்கார் (ஒருமுறை) ஆக நான்கு முறை வடலூர் வள்ளலார் தெய்வநிலையங்களின் நிர்வாகம்.

எழுதிய நூல்கள் :
1. வடலூர் வரலாறு 1967.
2. இராமலிங்கரும் தமிழும் 1967.
3. இராமலிங்க அடிகளின் சிதம்பர அனுபவங்கள் 1969.
4. இராமலிங்க அடிகள் வரலாறு. (தமிழக அரசின் பரிசு பெற்ற நூல்) முதற்பதிப்பு 1971, இரண்டாம் பதிப்பு 1976.
5. வடலூர் திருவருட்பிரகாச வள்ளலார் தெய்வநிலையங்களின் வரலாறு 1972.
6. வள்ளலார் மறைந்தது எப்படி (சாகாக்கலை ஆராய்ச்சி) 1976

7. வள்ளலார் கண்டமுருகன் 1978.
8. வள்ளலார் வாக்கில் ஓங்காரமும் பஞ்சாக்கரமும் 1979.
9. வள்ளுவரும் வள்ளலாரும் 1980.

பதிப்பித்த நூல்கள் :
1. திருஅருட்பா (ஆறுதிருமுறைகளும்) வரலாற்று முறைப் பதிப்பு 1972. பக்கம் 1330.
2. திருஅருட்பா - உரை நடைப்பகுதி 1978. பக்கம் 700.
3. திருஅருட்பாத் திரட்டு (ஆறு திருமுறைகளிலிருந்தும் திரட்டிப் பொருள் வரிசையில் அடைவு செய்தது) 1982

வெளிவரும் திங்களிதழ் : சன்மார்க்க விவேக விருத்தி. (1867ல் வள்ளற்பெருமானே தொடங்கியது)

யாத்திரை : ஹரித்துவாரம், ரிஷிகேசம், காசி முதலிய தலங்களுக்குப் பலமுறை.

வெளிநாட்டுப் பயணம் : மலேசியா, சிங்கப்பூர் 1980ல் 75 நாள் சுற்றுப்பயணம், 87 நிகழ்ச்சிகள்.

பெரும் பணிகள் :
(1) மலேசிய விஜயத்தின் நினைவாக வடலூரில் ''மலேசியா ஓய்வு இல்லம்'', மதிப்பு சுமார் ஒரு லட்சம் ரூபாய்.
(2) வடலூரை அடுத்த கருங்குழியில் வள்ளலார் இல்லம் (தண்ணீர் விளக்கெரிந்த இல்லம்) திருப்பணி. மதிப்பு சுமார் மூன்று லட்சம் ரூபாய்.

சிறப்புச் செய்திகள் : திருவாவடுதுறை ஆதீனத்தின் ஒடுக்கத்தைக் கட்டிக் கொடுத்த ஆவுடையப்பபிள்ளை மரபினர் உறவு; உறவினர் பலர் திருக்கோயில் ஓதுவார்கள், திருமடத்துத் தம்பிரான்கள், ஸ்ரீரங்கம் கோயில் கணக்கு பரம்பரை உரிமை - இப்படிப் பட்ட குடும்பப் பின்னணி.

இளமையிலிருந்தே துறவு மனப்பான்மை - நைட்டிகப் பிரமச்சரியம்.

திருச்சிராப்பள்ளியில் இருந்தவரை திருச்சிராப்பள்ளி வானொலியிலும் வடலூர் வந்தபின் பாண்டிச்சேரி வானொலியிலும் பேச்சுகள் பலமுறை.

பழனி தண்டாயுதபாணி திருக்கோயில் மூலவிக்கிரகப் பாதுகாப்பு வல்லுனர் குழு உறுப்பினர் (அரசு நியமனம்)

விசுவ இந்து பரிஷத் நடத்திய தமிழக மடாதிபதிகள் துறவிகள் மாநாடு நான்கிலும் முக்கிய பங்கு. நான்காவது மாநாட்டின் அமைப்பாளரில் ஒருவர். உடுப்பியில் நிகழ்ந்த அகில இந்திய மடாதிபதிகள் துறவிகள் மாநாட்டிற் பங்கேற்றல். இராம ஜன்ம பூமி விஷயமாக டெல்லி சென்று பணி, அயோத்தியில் இராமநவமியன்று நிகழ்ந்த மாநாட்டில் உரை.

ஞானபூமி இதழில் பேட்டி (1986). தினமணி கதிரில் வரலாறு வெளிவரல் (1986). அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்க்கடல் இராய. சொ. நினைவு அறக்கட்டளைத் திருவாசகச் சொற்பொழிவு (1987).

சன்மார்க்க உலகு மட்டுமேயன்றிச் சமய உலகு தமிழ் உலகு ஆகியவற்றுலும் நன்கறியப் பெறுதல்.

5400 நூல்களைத் தமது சொந்த நூலகத்திற் சேர்த்து வைத்துக்கொண்டு படிப்பிலும் ஆராய்ச்சியிலும் மூழ்கி மகிழ்தல்.

அருட்செல்வர்

# டாக்டர் திரு. நா. மகாலிங்கம் B.Sc., F.I.E.

**புரவலர்.**

**பெயர் :** நா. மகாலிங்கம்

**முகவரி :** 31. போயஸ் தோட்டம். சென்னை - 600 086

**பிறந்த ஊர் :** பொள்ளாச்சி

**பெற்றோர் :** நாச்சிமுத்து கவுண்டர், ருக்மணி அம்மாள்

**பிறப்பு :** 21—3—1923

**கல்வி :** பி. எஸ். சி (B.Sc.,) எப். ஐ. ஈ (F.I.E.,)

**கௌரவப் பட்டங்கள் :** சன்மார்க்கப் பிரகாசமணி, அறம் வளர்க்கும் அண்ணல்- காஞ்சி காம கோடி பீடம் வழங்கியவை. சிவம் பெருக்கும் சீலர் - தருமபுர ஆதீனம் வழங்கியது. அருட்செல்வர் - வேதாத்திரி மகரிஷி வழங்கியது. டாக்டர் பட்டம் (Doctor of Laws) - பாரதியார் பல்கலைக் கழகம்.

**நடத்தும் தொழில் நிறுவனங்கள் :**

| | |
|---|---|
| ஏ பி.டி. பார்சல் சர்வீஸ், | பகவதி டீ எஸ்டேட்ஸ், |
| இந்தோ சுவிஸ் சிந்தடிக் ஜெம் மானுபாக்சரிங் கம்பெனி, | கோயம்புத்தூர் ஆல்கஹால் & கெமிகல்ஸ். |
| சக்தி சர்க்கரை ஆலை, | சென்னை பாட்லிங் கம்பெனி, |
| சாமுண்டீஸ்வரி சர்க்கரை ஆலை, | என். மகாலிங்கம் & கம்பெனி |
| பன்னாரி அம்மன் சர்க்கரை ஆலை, | கவுண்டர் & கம்பெனி, |
| சக்தி டெக்ஸ்டைல்ஸ், | நாச்சிமுத்து இண்டஸ்டிரியல் அசோசியேஷன், |
| சக்தி ஆட்டோமொபைல்ஸ். | |
| சக்தி எஸ்டேட்ஸ், | ஆனைமலைஸ் எஞ்சினீரிங் |
| சக்தி பைனான்ஸ், | ஆனைமலைஸ் ரீடிரெடிங் கம்பெனி, |
| சக்தி பெவிரிஜஸ் | ஆனைமலைஸ் ரீடிரெடிங் கார்ப்பரேஷன். |
| பகவதி டெக்ஸ்டைல்ஸ், | |

**நடத்தும் கல்வி நிறுவனங்கள் :** நல்லமுத்து கவுண்டர் மகாலிங்கம் கல்லூரி, நாச்சிமுத்து பாலிடெக்னிக், சக்தி இன்ஸ்டிடியூட் ஆப் டெக்னாலஜி

**நடத்தும் பத்திரிகைகள் :** கிஸான் ஒர்ல்டு (Kisan World) - ஆங்கிலப் பத்திரிகை ஓம் சக்தி - தமிழ்

**பொதுவாக :** இவர் ஒரு பல்கலைச் செல்வர். இல்லற ஞானி, ராஜரிஷி, சக்தி உபாசகர். சக்தி படத்தை வைத்துப் பூஜை செய்யும் சாதாரண உபாசகரல்லர். சக்தி - சாமுண்டி - பகவதி - பன்னாரி இப்படிச் சக்தியின் பெயரால் பல தொழில் கல்வி நிறுவனங்களை நிறுவி, மனித சக்தி யந்திர சக்தி பொருட் சக்தி (பணத்தின் சக்தி) களைப்

# தியாகச்செம்மல். திரு. அன்பு வேதாசலம்

தலைவர்.

பிறந்த இடம் : அன்பு நிலையம், 30 - செட்டியார் தெரு, பட்டுக்கோட்டை.

அன்னையார் : இரத்தினம்மாள்

தந்தையார் : சு. சிங்காரவேலர்.

பாட்டனார் : மகாவித்வான் நடமாடும் நூல்நிலையம் சுப்பிரமணியனார்.
(இச்சிறப்பு விருதினை மகாவித்வான் பொறியியல் அறிஞர் திரு. பா. வே. மாணிக்கநாயக்கர் அவர்கள் தலைமையில் மறைமலை அடிகள் அவர்கள் வழங்கிச் சிறப்பித்தார்.)

1937 முதல் 5 ஆண்டுகள் நகர காங்கிரஸ் தலைவர்.

1942 விடுதலைப் போராட்டத்தில் தண்டனை பெற்று அலிப்புரம் சிறையில் நலிதல்.

1970 முதல் தஞ்சை மாவட்ட காங்கிரஸ் கமிட்டித் தலைவர்.

பேரவை உறுப்பினர், அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி.

1952 முதல் இன்று வரை தஞ்சை மாவட்ட தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவர்.

1976 முதல் இன்று வரை ஸ்ரீ தியாகப்பிரம்ம ஆராதனைசபை (திருவையாறு) அறங்காவலர்,

1977 முதல் இன்று வரை அனைத்திந்திய தமிழ் எழுத்தாளர் சங்கத் துணைத்தலைவர்.

1981 முதல் இன்றுவரை இந்தோ சோவியத் கலாசாரக் கழகத்தின் துணைத்தலைவர்.

திருக்கழுக்குன்றம் திருஞானசம்பந்தர் இசைவிழாக் குழுவின் துணைத்தலைவர்.

பட்டுக்கோட்டை கம்பன்கழகத் தலைவர்.

15 ஆண்டுகள் காரைக்குடி கம்பன் விழாவில் கலந்து கொண்டு உரையாற்றியுள்ளார்.

நா. இராமநாதன், பாவலர் பாலசுந்தரம் இவர்களிடம் முறையாகத் தொல்காப்பியம் சிலப்பதிகாரம், சங்க இலக்கியங்கள் கற்றார்.

தமிழ்க்கடல் இராய. சொ. அவர்களிடமும் காரைக்குடி கம்பன் அடிப்பொடி சா. கணேசன் அவர்களிடமும் கம்பஇராமாயண பாடம் கற்றவர்.

''தியாகச் செம்மல்'' என்ற விருது பெரியவர் எம். பக்தவத்சலம் அவர்கள் வழங்கியது

1986-ல் டென்மார்க்கில் நடைபெற்ற உலக சமாதான மாநாட்டில் தமிழகத்தின் பிரதிநிதியாகக் கலந்து கொண்டார். அது சமயம் சோவியத் யூனியனின் அழைப்பின் பேரில் ரஷ்ய சுற்றுப்பயணமும் செய்தார்.

வடலூர், திருஅருட்பா இசைச் சங்கத்தின் தலைவர்.

## டாக்டர் A. இராஜேந்திரன் B.Sc., B.E., AMIMM. (Aust) D.L.tt

**துணைத்தலைவர்.**

| | | |
|---|---|---|
| பெயர் | : | டாக்டர். A. இராஜேந்திரன். |
| தந்தையார் | : | எஸ். அர்ச்சுனன். |
| பதவி | : | செயலாளர்&தாளாளர், ஜவஹர் அறிவியல் கல்லூரி, நெய்வேலி. |
| நிலை | : | முதன்மைப் பொறியாளர். |
| முகவரி | : | F 16, இராஜேந்திரபிரசாத் சாலை, வட்டம் 27. நெய்வேலி - 607 803. |
| பிறந்த நாள் | : | 20—7—1931 |

**கல்வித்தகுதிகள் :** இளங்கலை (கணிதமும் இயற்பியலும்) 1952, பொறியியல் 'வேதியியல்) 1956 அண்ணுமலைப்பல்கலைக்கழகம். ஏ.எம் ஐ.எம்.எம். (ஆஸ்திரேலியா) 1960. ஆஸ்திரேலியா சுரங்கம் & உலோகவியல் பயிற்சியகம். டி. லிட். (இலக்கியத் துறையில் டாக்டர் பட்டம்) 1986 ஆவணப்பயிற்சியகம், ஐரோப்பியக் கல்விகள், அனைத்து நாடுகள் பல்கலைக்கழக ஆய்வகம், பெல்ஜியம்.

**தனிப்பயிற்சிகள் :** புதுடெல்லி, பம்பாய், ஹைதராபாத், சென்னை, அண்ணுமலை நகர் முதலிய பல இடங்களில் பல ஆய்வுக் கூடங்களில், பல ஆய்வரங்குகளில், 1981 முதல் 1987 வரை பல முறைகள் ஆய்வுப் பயிற்சிகள்.

**வெளிநாட்டுப் பயணங்கள் :** ஆஸ்திரேலியா. யூகோசுலோவியா, செக்கோஸ் லோவேக்கியா, மேற்கு ஜெர்மனி, கிழக்கு ஜெர்மனி, இத்தாலி, இங்கிலாந்து.

**வெளியீடுகள் :** பழுப்பு நிலக்கரித் தொழில் நுட்பம் பற்றிப் பல.

**வேறு துறைகளில் வகித்த சிறப்புப் பதவிகள் :** 1979 வரை அண்ணுமலைப் பல்கலைக் கழக ஆட்சி மன்றக் குழுவில் (செனட்) மூன்று முறை உறுப்பினர்.
தென்னுர்க்காடு மாவட்ட ஊர்க்காவல் படையில் 7 ஆண்டுகள் தளபதி (காவல் துறையின் இணைக் கண்காணிப்பாளர் பதவிக்குச் சமமானது)

அனைத்திந்திய வானொலி நிலையத்தில் முதல் நிலைக் கலைஞர். திருச்சிராப்பள்ளி, பாண்டிச்சேரி வானொலியில் 1956 முதல் இன்று வரையில் பல நாடகங்கள் நடிப்பு, தயாரிப்பு.

நெய்வேலி நகரிய பால் நுகர்வோர் கூட்டுறவு சங்கத்தின் தலைவர். நெய்வேலி நாடகக் கூட்டமைப்பின் காவலர். ஜோதி இராமலிங்க மிஷன் நிறுவனர்.

**குடும்பச் சிறப்பு :** இவர் தந்தையார் அமரர் திரு அர்ஜுனன் அந்நாளில் புகழ்பெற்ற மருந்தாளுனர். சுற்றுப்புறங்களில் நன் மதிப்புப் பெற்றவர். பிள்ளைகளை உயர்கல்வி பெற வைத்தவர். எஞ்சினீர் இராஜேந்திரனின் சகோதரர்களில் இருவர் மருத்துவ டாக்டர்கள். ஒருவர் சென்னையில் இருக்கிருர். மற்றவர் விருத்தாசலத்தில் உள்ளார். இன்னொரு சகோதரர் காவல் துறையில் ஐ.ஜி.யாக இருக்கும் ராஜ்மோகன் M.A.I.P.S. (இவ்வாண்டு ஜனுதிபதி விருது பெற்றவர்.) இராஜேந்திரனின் ஒரே மகன் மருத்துவ டாக்டர். அண்ணுமலைப் பல்கலைக்கழக மருத்துவக் கல்லூரியில் பணியாற்றுகிருர். ஒரே மகள் உஷாராஜ் B.Arch பட்டம் பெற்றவர். சிறந்த பரத நாட்டியுக் கலைஞர்.

**வள்ளலாரிடம் ஈடுபாடு :** நெய்வேலியில் ஜோதி இராமலிங்க மிஷன் நிறுவிச் சன்மார்க்கப் பணியாற்றுதல்.

மாதப் பூசந்தோறும் முதியோர் இளைஞர் பலர் புடைசூழ இராமலிங்க மிஷன் திருக்கூட்டமாக நெய்வேலி டவுன்ஷிப்பில் இராமலிங்க மிஷன் இடத்திலிருந்து வடலூர் சத்திய ஞானசபைக்குப் பாதயாத்திரையாக வந்து வழிபடுதல்

பக்கவாத்தியங்களுடன் திருஅருட்பா இசைக்கச்சேரி செய்தல்.

வடலூர் திருஅருட்பா இசைச் சங்கத்தின் துணைத்தலைவர். குடும்பம் முழுவதும்' இவர். இவரது மனைவியார், மகன், மகள் ஆகிய நால்வருமே இசைச் சங்கத்தின் ஆயுள் உறுப்பினர்கள்.

**பொழுதுபோக்குக்கலைகள் & தனிஆர்வம் :** நிழற்படம் (போட்டோ) பிடித்தல், எடுத்துக் காட்டுகள் (மாடல்) அமைத்தல், வானொலிநாடகம், மேடைநாடகம் தயாரித்து இயக்குதல், நடித்தல்.

இலக்கிய, சமய சங்கங்களில் முக்கிய பங்குவகித்தல்.
படைப்புக்கலைகளில் பொதுவான ஆர்வம்.

---

# டாக்டர் சு. சிவகாமசுந்தரி M.A., Dip. Ed., Ph.D.,

**துணைத்தலைவர்.**

பிறந்த ஊர் : திருவையாறு. (தஞ்சை மாவட்டம்)

பெற்றோர் : தஞ்சை திரு. K. பழனிவேல், P. தருமாம்பாள்.

பயின்றது : புனித சிலுவைக் கல்லூரி, திருச்சி. அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

பணி : தமிழ்ப்பேராசிரியர் - துறைத்தலைவர்
திரு அவினாசிலிங்கம் மனையியல் கல்லூரி - கோயம்புத்தூர்.

துணைவர் : டாக்டர் வ. சுப்பிரமணியன்.

தமிழ், பிற பணிகட்காகப் பெற்றுள்ள சிறப்புப் பட்டங்கள் :

| | | |
|---|---|---|
| 'செந்தமிழ்ச் செல்வி' | — | 1965ல் கல்கத்தா தமிழ் மாணவர் மன்றம் வழங்கியது |
| 'அருட்பாமணி' | — | 1971ல் கோவை நகர சன்மார்க்க சங்கம் ,, |
| 'தமிழறிஞர்' | — | 1973ல் கோவை நன்னெறிக் கழகம் ,, |

வகிக்கும் பொறுப்புகள் : ஆட்சிக்குழு உறுப்பினர் — பாரதியார் பல்கலைக் கழகம் 1983 - 87
அறங்காவலர் — வள்ளலார் சேவா நிலையம் - கோவை.
நிர்வாகக்குழு — கோவை மாவட்ட சன்மார்க்க சங்கம்.
மதிப்பியல் உறுப்பினர் — சுழற்குழு - உள்சுற்று (Rotary Innerwheel)
துணைத்தலைவர்—திருஅருட்பா இசைச்சங்கம், வடலூர்.

எழுதியுள்ள நூல்கள் :

| | |
|---|---|
| வள்ளலார் | திறனாய்வு |
| தமிழகப் பெண்கள் வாழ்வும் வளர்ச்சியும் | ,, |
| அறம் வெல்லும் | ,, |
| பாரதிக்கு நிகர் பாரதியே | ,, |
| புகழ்க்கம்பன் | ,, |

நீலக்குறிப்பேடு — புதினம் — மொழிபெயர்ப்பு
நீயே என்னுயிர் — கவிதை
நேற்று நடந்தது — நாடகம்

கலந்து கொண்ட உலக மாநாடுகள் :

| | |
|---|---|
| உலகத் தமிழ் மாநாடு | — மதுரை |
| உலக இந்து சமய மாநாடு | — ஸ்ரீலங்கா |
| உலக இந்து சமய மகளிர் மாநாடு | — கோலாலம்பூர் |

சென்றுவந்த வெளிநாடுகள் : ஸ்ரீலங்கா, கோலாலம்பூர், சிங்கப்பூர்

பிற மாநிலங்களில் தமிழ் உரை : பம்பாய், கல்கத்தா, ஹௌரா, வாரணாசி, டில்லி.

பள்ளி, கல்லூரி, பல்கலைக் கழக நாட்களில் : பல முதற் பரிசுகள், பாட்டு, பேச்சு, நடிப்புக்காக.

மேடைப்பேச்சு : 300க்கு மேல்

வானொலி உரை : 80க்கு மேல்

ஆய்வுக் கட்டுரைகள் : 80க்கு மேல்

பல்கலைக் கழக அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் : சென்னை, மதுரை.

வடலூர் வருகை : இரண்டரை வயதுக் குழந்தை முதல் (சாலையில் பாடியதைச் சிறப்பாகச் சொல்வர்) இன்று வரை......... இனியும்

ஈடுபாடு : வள்ளல்பெருமான், பாரதி.

எந்த மேடையாயினும் மையப் பேச்சு : வள்ளல்பெருமான்தான்

இப்பணிகட்குத் திருமணத்திற்கு முன் ஊக்கி வளர்த்தோர் : பெற்றோர்

இன்று வளர்த்து வருவோர் : அருமைத் துணைவர்

அனுமதியுடன் விட்டுக் கொடுப்போர் : அருமை மக்கள்

---

XI

# திரு. A. சண்முகம்

**பொருளாளர்**

பெயர் : A. சண்முகம்

முகவரி : 18. கொத்தன் ஒத்தைத் தெரு, கும்பகோணம்.

பெற்றோர் : ஆறுமுகம் பிள்ளை, தனபாக்கியத்தம்மாள்.

பிறப்பு : 4-8-1922

கல்வி : தொடக்கப் பள்ளி நிறைவு

குடும்பம் : 1943 ல் திருமணம் - மனைவியார் புஷ்பவல்லி.
ஆண்மக்கள் மூவர் : குமாரவடிவேல்; முத்துராமலிங்கம்; செல்வம்.
பெண் மக்கள் இருவர் : பிரபாவதி; தமிழரசி.

தொழில் : வாணிகம் - செல்வம் ஏஜன்சீஸ்
செல்வம் மெடிக்கல்ஸ்
செல்வம் எண்டர்பிரைசஸ்
செல்வம் டிரேடிங் கார்ப்பரேஷன்.

**தொண்டுகள் :** தஞ்சை மாவட்ட சிறு தொழில் சங்கத்தின் நிர்வாக உறுப்பினர்.
கும்பகோணம் சமூக நற்பணி மன்றத்தின் தலைவர்.
வடலூர் திரு அருட்பா இசைச்சங்கத்தின் பொருளாளர்.

**சிறப்புச்செய்திகள் :** எளிய குடும்பத்தில் பிறந்த இவர் இளமையில் வணிகர்களிடம் தொழிலாளியாக வேலை செய்து, உழைப்பால் உயர்ந்தவர். உள்ளத்தால் வளர்ந்தவர். சுதந்திரத்திற்கு முன் காங்கிரசில் இருந்தார். பின்பு சோஷலிஸ்ட் ஆனார். ஜெயப்பிரகாஷ் நாராயணன் அசோக் மேத்தா ஆகியோருடன் பழகியவர். மூப்பனாருக்கு நண்பர். தற்போது கட்சி சார்பற்றவராக அனைவரின் அன்பிற்கும் நட்பிற்கும் உரியவராக ஒரு நல்ல குடும்பஸ்தராக தொழிலதிபராக அடக்கமாகத் தன்னாலியன்ற பணிகளைச் செய்து வாழ்கிறார். நாணயம் நம்பிக்கை உறுதி இவரது குறிக்கோள்.

**வள்ளலாரிடம் ஈடுபாடு :** சுமார் 30 ஆண்டுகளாக வள்ளலாரிடம் ஈடுபாடு. குடியரசு பத்திரிகையில் பெரியார் ஈ. வே. ரா. எழுதியதைப் பார்த்து ஈடுபாடு உண்டாயிற்று. தைப்பூசத்திலும் வள்ளலார் பிறந்த நாளிலும் வடலூர் வந்து வழிபடத் தொடங்கினார். வள்ளலாரைத் தவிர இவருக்கு வேறு தெய்வம் இல்லை. வேறு ஆரவாரச் சடங்கு வழிபாடுகள் இவருக்குப் பிடிப்பதில்லை. வள்ளலார் பிறந்த தினத்தில் கும்பகோணம் கீழக்கொட்டையூரிலுள்ள வள்ளலார் மாணவர் இல்லத்து மாணவர்களுக்குப் புத்தாடைகளும் விருந்தும் அளித்து மகிழ்கிறார்.

---

# தியாகி. சாது முத்தையா

**செயலாளர்.**

ஊர் : நங்கவள்ளி, சேலம் மாவட்டம்.

பெற்றோர் : குமரவேல் செட்டியார், சுந்தரம் அம்மாள்.

பிறப்பு : 22—12—1923.

கல்வி : தொடக்கப்பள்ளி

தொழில் : வாணிகம்.

தேசத்தொண்டு: சுதந்திரப் போராட்டத்தில் சிறைசெல்லல். அலிப்புரம் சிறையில் மூன்றுமாத சிறைவாசம். சொந்த ஊராகிய நங்கவள்ளியில் ஹரிஜன ஆலயப் பிரவேசம் செய்து வைத்தல். அதன் பயனாக ஜாதிப்பிரஷ்டம் செய்யப் பெறல். கதர் மதுவிலக்கு, தீண்டாமை ஒழிப்பு இப்படிப்பல காந்திய சர்வோதய ஆக்கப்பணிகள். 3 ஆண்டுகள் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி உறுப்பினர் காந்தியடிகளின் மறைவுக்குப் பின் தமிழரசுக் கழகத்தில் சிலகாலம்.

சன்மார்க்கப்பணி : பல ஆண்டுகள் சேலம் மாவட்ட சன்மார்க்க சங்கத்தின் செயலாளர். சேலம், தாரமங்கலம், இடைப்பாடி முதலிய நகரங்களில் சன்மார்க்க சங்க மாநாடுகள் பலவற்றை நடத்தியது. பல மலர்கள் வெளியிட்டது. வடலூரில் சேலம் மாவட்டத்திற்கு ஓ. பி. ஆர் அளித்த மனையில் தங்கும் விடுதி கட்டியது. வடலூரில் ஓ. பி. ஆர். நிறுவிய சுத்த சன்மார்க்க நிலையத்தின் சான்றோர் இல்லத்தில் தங்கி அதன் மாணவர் இல்லத்திற்கு உதவியாகப் பணியாற்றியது. வடலூரில் சாவித்திரி அம்மையார் அறநிலையத்தின் மேலாளராகப் பணியாற்றியது. ஞானசபையில் விழாக் காலங்களில் நிகழும் அருட்பா முற்றோதலில் பல ஆண்டுகள் கலந்து கொள்ளல்.

குடும்பம் : நாடு சுதந்திரம் பெற்ற ஏழாம் நாள் திருமணம். மனைவியார் சேலம் வழக்கறிஞர் T. குமாரசாமி செட்டியார் திருமகள் குமுதவல்லித் தாயார். ஒரே மகன் காந்திநாதன், பி.ஏ. பி.ஜி.எல். பட்டம் பெற்று நங்கவள்ளியிலேயே பரம்பரைத் தொழிலாகிய வாணிகத்தை நடத்தி வருகிறார். உளுந்தூர்ப்பேட்டை பேராசிரியர் கவிஞர் சண்முகம் அவர்களது திருமகள் தேன்தமிழை காந்திநாதனுக்குத் திருமணம் செய்து வைத்தார். தேன்தமிழ் படித்த பெண், பட்டதாரி. சமுக சேவையில் மிகவும் ஆர்வமுடையவர். இப்போது நங்கவள்ளி நகரப் பஞ்சாயத்தின் தலைவராக (தலைவியாக) இருந்து தேன்தமிழ் அரியபல பணிகளை ஆற்றி வருகிறார். உளுந்தூர்ப்பேட்டை சண்முகம் அவர்களும் இசைமணி சீர்காழி கோவிந்தராஜன் அவர்களும் சகலர்கள். அதாவது இருவரது துணைவியாரும் சகோதரிகள். ஆதலின் சீர்காழியும் உறவினரானார். இவரது மருமகள் சீர்காழியின் வளர்ப்புப் பெண்ணே எனலாம். இவரது மணிவிழா வடலூரில் சாவித்திரி அம்மையார் அறநிலையத்தில் 22—12—1983ல் சிறப்புற நிகழ்ந்தது. மணிவிழாவிலிருந்து இவர் சாதுவானார். சாவித்திரி அம்மையார்

அறநிலைய மேலாளர் பதவியையும் விடுத்து வடலூரிலேயே தவத்திரு ஊரன் அடிகளார் அவர்கள் ஆதரவில் அவருடனேயே தங்கியுள்ளார். அவ்வப்போது சிற்சில காலம் அருட்குடிலிலும் தங்குவார். இப்படி இங்கும் அங்குமாக இருப்பதோடு எங்கும்சென்று வள்ளலார் புகழை இயம்புபவராய் அவ்வப்போது தமிழ்நாட்டிலும் ஆந்திரம், கேரளம் முதலிய மாநிலங்களிலும் பல ஊர்களுக்குச் சென்று வருவார். யாத்திரையில் மிகவும் விருப்பமுள்ளவர். சேலத்திலிருந்த காலத்திலேயே பாடல்பெற்ற தலங்களின் யாத்திரையை நாடு வாரியாக பிரித்து அன்பர் பலருடன் பேருந்து ஏற்பாடு செய்துகொண்டு பலமுறை நடத்தியிருக்கிறுர். ஊரன் அடிகளாருடன் இருமுறை வடஇந்திய யாத்திரை செய்திருக்கிறுர்.

**தற்போதிய பணி :** திருஅருட்பா இசைச்சங்கத்தின் செயலாளராக இருத்தல் இவரது இப்போதிய பணி.

---

கலைமாமணி இசைப்பேரரசி

# டாக்டர் சேலம். எஸ். ஜெயலட்சுமி

**செயலாளர்.**

முகவரி : 93, செயின்ட் மேரீஸ் ரோடு, சென்னை - 600 018.

தொலைபேசி : 75250.

கர்நாடக இசையிலும் தமிழிசையிலும் வல்லவர். நாடறிந்த பெரிய இசை மேதை. ஹிந்தி பஜனையிலும் கூடச் சிறந்தவர். சங்கீத பூபதி மகாராஜபுரம் விஸ்வநாதையர், சங்கீத ரத்நாகரம் மைசூர் T. சௌடையா ஆகியோரிடம் பயின்றவர். தமிழ்நாட்டில் மட்டுமின்றி வெளிநாடுகளிலும் புகழ் பெற்றவர். வானொலியிலும் தொலைக்காட்சியிலும் முன்னணிக்கலைஞர், இவர் பாடிய இசைத்தட்டுகளும் கேசட்டுகளும் பல. திருமுறைகள், திவ்வியப் பிரபந்தம், திருப்புகழ் திருஅருட்பா இவற்றின் பகுதிகள் இவரால் பாடப் பெற்று இசைத்தட்டுகளாகவும் கேசட்டுகளாகவும் வெளிவந்துள்ளன, இவர் பாடி வெளி வந்துள்ள அருட்பா கேசட் "அருட்பெருஞ்ஜோதி - அருட்பா பாடல்கள்" என்ற பெருமை உடையது. அதில் பத்து திரு அருட்பாப் பாடல்களை இவர் மிக அழகாகப் பாடியுள்ளார்.

மலேசியா, சிங்கப்பூர், இலங்கை, மொரிஷியஸ், தென்னாப்பிரிக்கா, அமெரிக்க ஐக்கிய நாடுகள், லண்டன் எனப் பல வெளி நாடுகளுக்குச் சென்று இசைக் கச்சேரிகள் செய்து அங்குள்ள இந்தியர்களிடம் மட்டுமின்றி, அந்நாட்டு மக்களிடமும் புகழ் பெற்றவர்.

தமிழக அரசு இவருக்குக் "கலைமாமணி" பட்டம் வழங்கியுள்ளது. "இசைப் பேரரசி" என்பது காஞ்சிபுரம் தமிழ்க் கழகம் வழங்கிய பட்டம். அமெரிக்காவில் அரிசோனாவில் உள்ள உலகப் பல்கலைக் கழகம் இவருக்கு இசைத் துறையில் டாக்டர் பட்டம் வழங்கியுள்ளது.

இசையியல் பண்பாட்டு மையம் (Cultural centre of performing Arts) என்ற பெயரில் இசைப்பயிற்சி நிலையம் ஒன்றை இவர் சென்னையில் நடத்தி வருகிறார். ஆண்டுதோறும் கோடை காலத்தில் (மே - ஜூன்) திருக்கழுக்குன்றத்தில் திருஞான சம்பந்தர் இசை விழாவை இம்மையம் நடத்துகிறது. சில ஆண்டுகளாகத் திருஞான சம்பந்தர் இசை விழா நாட்டில் மிகவும் பெயர் பெற்று வருகிறது.

இவர் பிறந்த குடும்பமே வள்ளலாரிடம் ஈடுபாடுடைய குடும்பம். தந்தையார் வக்கீல் சுப்பிரமணிய முதலியார் வள்ளலாரின் பேரால் பல தர்மங்கள் செய்தவர். வடலூரில் ஐம்பது செண்ட் நிலத்தை ஒ. பி. ஆர். நிறுவனத்திற்கு அன்பளிப்பாக வழங்கியவர். தமையனார் "சித்தாந்த சிகாமணி," "அருட்பாமணி" திரு. S. இராம லிங்கம் B. sc., (Agri) B. L. அவர்கள் சேலத்தில் சிறந்த வழக்கறிஞர், சைவ சித்தாந்த அறிஞர், சேலம் நகர சன்மார்க்க சங்கத்தின் தலைவர். இப்படிப்பட்ட சன்மார்க்க ஈடுபாடுகளையும் திருஞானசம்பந்தர் இசை விழாவை இவர் நடத்தும் அருமையையும் நோக்கியே திரு அருட்பா இசைச் சங்கம் இவரைச் செயலாளருள் ஒருவராகக் கொண்டது.

*சன்மார்க்கப் பணி அன்னையார்*

# திருமதி ப. தருமாம்பாள்

**செயற்குழு உறுப்பினர்**

தஞ்சாவூர் மாவட்ட சன்மார்க்க சங்கத்தின் தலைவராக இருந்தும், வேறு பல வகைகளிலும் தஞ்சை மாவட்டத்தில் சன்மார்க்கத்தைப் பரவலாக வளர்த்தவர் அன்பர் திரு K. பழனிவேல் பிள்ளை அவர்கள் சுவாமிமலை சன்மார்க்க சங்கக் கட்டிடம் இவர் கட்டியது. சுவாமிமலைப் படிவிழா இவர் தொடங்கியது. இவரது நினைவின் வடிவமாக இன்றும் அவை சிறந்து விளங்குகின்றன. திருமதி. ப. தருமாம்பாள் அம்மையார் பழனிவேல் பிள்ளை அவர்களின் துணைவியார் ஆவர். பிள்ளையவர்கள் தஞ்சை நகராட்சியில் பணியாற்றிய போது ஓய்வு நேரங்களையும் பணியிலிருந்து ஓய்வு பெற்ற பின் முழு நேரத்தையும் சன்மார்க்கப் பணிகளுக்கே அர்ப்பணித்துச் சன்மார்க்கப் பெருந்தொண்டராகவே இறுதி முச்சுவரை வாழ்ந்து ஒரு வைகாசி 11ல் (1973) புகழுடம்பெய்தினர். அதன்பின் அம்மையார் வடலூர் வாழ்வை மேற்கொண்டு வடலூர்க்கே வந்து விட்டார். தருமச்சாலைக்கு அருகில் தென்புறத்தில் **"அருள் குடில்"** என்றதோர் இல்லத்தை அமைத்து வசித்து வருகிறார். வியாழக்கிழமைகளிலும் மாதப் பூச நாள்களிலும், பிறவிழா நாள்களிலும் தைப்பூசத்திலும் தருமச்சாலையில் நிகழும் பாராயணத்திற் கலந்து கொள்ளத் தவறுவதில்லை. திருஅருட்பா முற்றோதலில் முக்கிய பங்கு கொண்டு பணி செய்கிறார். நாள்தோறும் வீட்டில் அகவற் பாராயணம் செய்பவர். பழக்கமுள்ள முக்கியமான சில வெளியூர் சங்கங்களின் விழாக்களுக்கும் சென்று பாராயணத்திற் கலந்து கொள்வதுண்டு. திருவருட்பா இசைச் சங்கத்தின் ஸ்தாபகர் களில் இவரும் ஒருவர். இவரது "அருட் குடில்" இல்லத்தில்தான் தற்போது இசைச் சங்கத்தின் அலுவலகச் செயல்கள் நடைபெறுகின்றன. விருந்தோம்புதல் இவரது பிறவிக் குணம். வடலூர்க்கு வரும் வெளியூர் அன்பர்கள் பலர் அதிலும் சிறப்பாகக் குடும்பத்தோடு வருவோர் அம்மையாரது இல்லத்தில் உணவளித்து உபசரிக்கப் பெறுதல் அம்மையார் வடலூர் வந்து தங்கத் தொடங்கிய காலந்தொட்டே வழக்கமாக இருந்து வருகிறது. இசை விழாவில் உணவளிப்பு நிர்வாகத்தைத் தாமே நேரில் கவனித்துச் செய்வது ஒரு பெருந்தனிச் சிறப்பாகும். பண்புள்ள கணவர், படித்த மகள் மருமகன், போதுமான செல்வவளம் உடைய நிறைந்த குடும்பத் தலைவியானமையின் அம்மையார்க்கு உணவளிப்பு நிர்வாகமும் உபசரிப்பும் குறைவின்றி நிறைவாக அமைந்துள்ளன. இச்சிறப்பை உணர்ந்துதான் நாம் நடத்திய கருங்குழி வள்ளலார் இல்லத்தின் திருப்பணி நிறைவு-குடநீராட்டு-விழாவிலும் (1—6—1987) உணவளிப்பு நிர்வாகப் பொறுப்பு முழுமையும் அன்னையாரிடத்தில் ஒப்படைத்தோம். அன்னையார் தாயாக இருந்து அதனைப் பாங்குறச் செய்து அவ்விழாவுக்கே ஒரு தனிச்சிறப்பை உண்டாக்கினர். சன்மார்க்க மகளிர் உலகில் முதல் இடம் இவர்கள் திருமகளார் சிவகாமசுந்தரியார்க்கு உண்டென்றால், முதிர்ந்த அன்னையர் உலகில் முதல் இடம் இவர்களுக்கே உரியது. **"சன்மார்க்கப் பணி அன்னையார்"** என இவர்களை அழைக்கத் தோன்றுகிறது. அன்னையாரின் அன்புப் பணியால் அருட்பா இசைச் சங்கம் இன்னும் சிறந்து விளங்க இருப்பதில் ஐயமில்லை.

# டாக்டர் வ. சுப்பிரமணியன்

B.Sc., M.E. (Chem) Ph.D., M.I.I.Ch.E., M.I.S.A.E.

**செயற்குழு உறுப்பினர்.**

பிறந்த ஊர் : புதைகிரி (தஞ்சை மாவட்டம்)

பெற்றோர் : பெரும்புலவர் வித்துவான் அ. வடிவேலன், திருமதி. இரஞ்சிதம் அம்மாள்

பயின்றது : தேசியக்கல்லூரி, திருச்சி, பச்சையப்பன் கல்லூரி, சென்னை, அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

கட்டுரைகள் : இந்தியா மற்றும் அயல்நாட்டு இதழ்களில் வேதியியல் பொறியியல் துறை' வேளாண் பொறியியல், பதன் செய்துறை, அறுவடைப் பின்சார் தொழில் நுட்பம் பற்றிய ஆராய்ச்சிக் கட்டுரை 60-க்கு மேல் எழுதி உள்ளார்.

அறிவியல் நூல்கள் : 2

மாநாட்டுத் தலைமை கருத்தரங்குகள் : தமிழகம், இந்தியா, அயல்நாடுகளில் பல............

சென்றுவந்த அயல் நாடுகள்: ஸ்ரீ லங்கா, புதியசீனா.

தொலைக் காட்சி; வானொலி உரைகள் : பல.

தலைவர் : இந்திய வேதியியல் பொறியியலார் கழகம், கோவைபிரிவு. இந்திய வேளாண் பொறியியலார் கழகம்-தமிழ்நாடு.

நிர்வாகக்குழு உறுப்பினர் ஆலோசகர் : வேளாண்பொறியியல் பற்றியஉயர்மட்ட அறிவியல் ஆலோசனைக்குழு - மத்திய, மாநில அளவில்.

பணி : முதல்வர் (Dean) வேளாண் பொறியியல் கல்லூரி, தமிழ்நாடு வேளாண்மைப் பல்கலைக் கழகம், கோயம்புத்தூர்.

திருமணம் : 1968-ல், துணைவியார் சு. சிவகாமசுந்தரி (தஞ்சை திரு. K. பழனிவேல்-தருமாம்பாள் மகள்.)

ஈடுபாடு : வள்ளல் பெருமானிடம். (கல்லூரியில் படிக்கும் நாள்களிலேயே.)

அமைப்பாளர் : நல்ல 'அமைப்பாளர்' (Organiser) எனப் பலரும் பாராட்டக் கலை உணர்வுடன் செயல்படக்கூடியவர்.

வடலூர்க்கு வருகை : 1966 முதல்

மக்கள் மூவரையும் சன்மார்க்க வழி வளர்த்து வருதல் : சு. அமுதவடிவு, சு. அன்புமலர் சு. அருள்செல்வி

# திரு. A. தங்கராசு M.L.A.

## செயற்குழு உறுப்பினர்

பெயர் : A. தங்கராசு

முகவரி : சேராக்குப்பம், வடலூர்-607 303, தென்னார்க்காடு மாவட்டம்

தொலைபேசி : வடலூர் 66

தந்தையார் : ஆதிமூலம் படையாட்சி

பிறப்பு : 17—8—1933, ஸ்ரீமுக, ஆவணி 2

**வகிக்கும் பதவிகள் :**

1. சட்டமன்ற உறுப்பினர் (M.L.A.), குறிஞ்சிப்பாடித் தொகுதி. (முன்பும் ஒருமுறை எம்.எல்.ஏ. ஆக இருந்தார். இப்போது இரண்டாம் முறை)
2. அறங்காவலர்குழுத் தலைவர், வள்ளலார் தெய்வ நிலையங்கள், வடலூர்.
3. தலைவர், சத்திய தருமச்சாலைத் திருப்பணிக்குழு,
4. செயற்குழு உறுப்பினர், திருஅருட்பா இசைச் சங்கம் வடலூர்.

**பொதுப்பணி :** சேராக்குப்பம் வடலூரை ஒட்டி அதன் கிழக்கே அமைந்துள்ள அடுத்த கிராமம். முன்பு அது தனி கிராம பஞ்சாயத்தாக இருந்தது. அதன் தலைவராக இவர் இருந்தார். பின்பு 1982ல் பார்வதிபுரம், சேராக்குப்பம், ஆபத்தாரணபுரம் ஆகிய 3 கிராம பஞ்சாயத்துகளும் ஒன்று சேர்ந்து வடலூர் பேரூராட்சி ஆயின. இப்போதுள்ள வடலூர் பேரூராட்சி அலுவலகக் கட்டிடம் முன்பு சேராக்குப்பம் கிராம பஞ்சாயத்து அலுவலகக் கட்டிடமாக இருந்ததே. தங்கராசு தலைவராக இருந்தபோது கட்டியது தான் அது. பஞ்சாயத்துத்தலைவராக இருந்தபோதே இவர் நல்ல பணிகளைச் செய்தார்.

எம். எல். ஏ. ஆக இருந்து செய்துவரும் பணிகள் பற்பல. சில வருமாறு :

குறிஞ்சிப்பாடிப் பேருந்து நிலையம் - வடலூர்ப் பேருந்து நிலையம் (மதிப்பு 20 லட்சம்) வள்ளலார் பேருந்து நிலையம் என்றே இதற்குப் பெயர். வளர்ந்து வரும் வடலூர்க்கு வாரச்சந்தை (சனிக்கிழமை) - வடலூரில் இராட்சச போரிங் குழாய்க் கிணறு-வடலூர்ப் பகுதிக்குக் குடிநீர் வழங்க அரசு மான்யம் 75 லட்சம் - ஆலப்பாக்கத்தில் உப்பனாறு பாலம் 80 லட்சம் - புயல் பாதுகாப்புக் கட்டிடங்கள் 5, (ஒவ்வொன்றும் சுமார் ரு 5 லட்சம் மதிப்பு) - கைத்தறி நெசவாளர்களுக்கு வீடு கட்டியது. ஒரு வீடு ரு 12 ஆயிரம் 100 வீடுகள் - மீனவர்களுக்கு வீட்டு வசதி 100 - ஹரிஜனங்களுக்கு வீட்டு வசதி 150- ஹரிஜனங்களுக்கு நிலம் உள்ள இடங்களில் கூட்டுறவுத் துறையில் பம்ப்செட் பாசன வசதி (வடலூர், கருங்குழி, மருவாய், நயினார்க்குப்பம், அரங்கமங்கலம், வடகுத்து, எல்லப்பன்பேட்டை ரங்கநாதபுரம் ஹரிஜன மக்கள் இதன் முழுப்பயனை அனுபவிக்கின்றனர்) - பல சாலைகள் தார்சாலையாக்கப் பெற்றன - டவுன் பஸ் வசதியும் பல.

சன்மார்க்கப்பணி : முன்பு ஒரு முறை 11—3—1981 முதல் 10—3—1984 முடிய வடலூர் வள்ளலார் தெய்வநிலையங்களின் அறங்காவலர்குழு உறுப்பினராக இருந்தார். இப்போது இரண்டாம் முறையாக 5—8—1987 அரசாணைப்படி அறங்காவலர் ஐவருள் ஒருவராக நியமிக்கப் பெற்று, 15—9—1987-ல் நிகழ்ந்த அறங்காவலர்குழுவின் தலைவர் தேர்தல் கூட்டத்தில் அறங்காவலர்குழுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பெற்றார். அன்றுமுதல் அறங்காவலர்குழுத் தலைவராக (அதுவரை தக்காராயிருந்த நம்மிடமிருந்து) பொறுப்பேற்று நிர்வாகத்தை நன்கு நடத்திவருகிறார். சத்திய தருமச் சாலைத் திருப்பணிக்குழு திருத்தியமைக்கப் பெற்றபோதும் அதன் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பெற்று அப்பொறுப்பையும் ஏற்றுள்ளார்.

எம். எல். ஏ. பதவி, உள்ளூர்ச் செல்வாக்கு, சுற்றுப்புறத்திலும் அரசியல் தலைவர்களிடத்திலும் நல்ல பெயர், செயல் திறன், சுறுசுறுப்பு, அதிகம் பேசாது கருமமே கண்ணாயிருத்தல், அனைவரையும் அரவணைத்துச் செல்லும் குணம் ஆகிய இவை அனைத்தையும் பெற்றுள்ள இவர் அறங்காவலர் குழுத் தலைவராகவும் திருப்பணிக் குழுத் தலைவராகவும் இருக்கும் காலத்தில் வடலூர் வள்ளலார் தெய்வநிலையங்கள் சிறப்புற்றோங்கும் என்பதில் ஐயமில்லை.

---

# திரு. C. நடேசன்

## செயற்குழு உறுப்பினர்

பெயர் : சி. நடேசன்

முகவரி : கிராஸ்ரோடு, வடலூர்-607 303, தென்னார்க்காடு மாவட்டம்

தொலைபேசி : இல்லம் - வடலூர் 12. அலுவலகம் - குறிஞ்சிப்பாடி 55.

தந்தையார் : சின்னு படையாட்சி

பிறப்பு : 14—4—1930

முன்பு வகித்த பதவி : தலைவர், பார்வதிபுரம் ஊராட்சி (1970-77)

தற்போது வகிக்கும் பதவிகள் :

1. தலைவர், குறிஞ்சிப்பாடி ஊராட்சி ஒன்றியம்
2. தலைவர், பெற்றோர் ஆசிரியர் கழகம், வள்ளலார் குருகுலம் உயர்நிலைப்பள்ளி, வடலூர்.
3. துணைத்தலைவர், சத்திய தருமச்சாலைத் திருப்பணிக்குழு, வள்ளலார் தெய்வநிலையங்கள், வடலூர்.

பொதுப்பணி : இவர் ஊருக்கே ஒரு செல்லத் தலைவர். (செல்லப்பிள்ளை என்பது போலச் செல்லத் தலைவர்). சிலருக்குப் பதவியிலிருந்தால்தான் பெருமை. ஆனால் இவருக்கோ பதவியில் இருந்தாலும் பெருமை; இல்லாவிட்டாலும் பெருமை. யாரா யிருந்தாலும் சி.என் - சி.என் - சி.என். என்று இவரிடம்தான் போவார்கள். இவரைத் தான் கூப்பிடுவார்கள் அப்படி ஓர் அன்புச் செல்வாக்கு இவருக்கு. அதனால்தான் ஊரில் செல்லத் தலைவர் என்று சொன்னோம். ஓ.பி.ஆர். வடலூருக்கு வந்து ஸ்தாபனங் களை அமைத்த புதிதில் எப்போதாவது சில சமயங்களில் தமக்கு உதவிக்கு ஆள் வேண்டுமென்றால் அப்போது இளைஞராக இருந்த இவரைத்தான் அழைப்பார். சில பல பெரிய சிறிய வேலைகளை இவரைக் கூப்பிட்டுச் சொல்வார். இப்படி ஓ.பி ஆர். அவர்களால் அழைத்துப் பணி கொள்ளப் பெற்றதை ஒரு பெருமையாகவே இவர் கருதுகிறார். ஓ. பி. ஆருக்குப்பின் நம்மிடமும் அப்படியே.

பார்வதிபுரம் பஞ்சாயத்து பிரசிடெண்டாக இருந்த இவர் இப்போது குறிஞ்சிப்பாடி யூனியன் சேர்மனாக இருக்கிறார். இவர் பஞ்சாயத்துத் தலைவராக இருந்த காலத்தில் இரண்டு தொடக்கப் பள்ளிகளைக் கொண்டு வந்தார். தெருக்களையெல்லாம் தார் சாலை களாக மாற்றினார். வடலூரில் முதன்முதலாக ஏற்பட்ட வங்கி ஐ. ஓ. பி. (I. O. B.) இவர் பஞ்சாயத்துத் தலைவராயிருந்த காலத்தில் ஏற்பட்டது. ஊருக்கு ஒரு வங்கி வேண்டும் என்று முயன்று தீர்மானமே நிறைவேற்றினார். பார்வதிபுரம், ஆபத்தாரண புரம், சேராக்குப்பம் ஆகிய மூன்று கிராம பஞ்சாயத்துகளையும் ஒன்றாக இணைத்து ஒரே பேரூராட்சியாக மாற்றத் தீர்மானம் நிறைவேற்றிய பெருமை இவருக்குண்டு.

குறிஞ்சிப்பாடி பஞ்சாயத்து யூனியன் பரந்த அளவுடையது. 51 ஊராட்சிகளைக் கொண்டது. அதற்கு நல்ல திட்டங்களைத் தீட்டி இவர் செயற்படுத்தி வருகிறார். வடலூர்க்கு அடுத்து வடக்கே உள்ள வடகுத்து கிராமத்தில் வீராணம் திட்டத்தின் கீழ்க் கட்டப்பட்டு செயற்படாமல் வீணாகக் கிடக்கும் ராட்சச பம்ப் ஹவுஸ், டேங்க் முதலியவற்றைப் பயன்படுத்தி, நெய்வேலி நிலக்கரி நிறுவனச் சுரங்கத்திலிருந்து வெளியேறும் உபரி நீரை அவற்றில் நிரப்பி யூனியன் முழுவதற்குமே குடிநீர் வினியோகம் செய்து இப்பகுதியில் குடிநீர்ப் பஞ்சத்தை அடியோடு ஒழிக்கலாம் என்ற ஒரு திட்டத்தைத் தயாரித்துத் தமிழக முதல்வர், உள்ளாட்சித்துறை அமைச்சர், குடிநீர் வடிகால் வாரியத் தலைவர், மாவட்ட ஆட்சியர் ஆகியோர் கவனத்திற்கு அனுப்பியுள்ளார்.

**சன்மார்க்கப் பணி:** எம்.எல்.ஏ. அறங்காவலர் குழுத் தலைவராகவும் திருப்பணிக் குழுத் தலைவராகவும் இருக்கிறார். பஞ்சாயத்து பிரசிடெண்ட் அறங்காவலர்களுள் ஒருவராக இருக்கிறார். இந்நிலையில் யூனியன் சேர்மனுக்கு வள்ளலார் தெய்வநிலையங்களில் ஏதேனும் பொறுப்பு இல்லாதிருந்தது ஒரு குறைபோலத் தோன்றிற்று. அக்குறையை நீக்க இவர் சத்திய தருமச்சாலைத் திருப்பணிக்குழுவின் துணைத்தலைவர்களுள் ஒருவராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றுள்ளார். பொதுவாகவே வள்ளலார் தெய்வநிலையங்களுக்கு எப்போதுமே உதவியாக இருக்கும் இவர் திருப்பணித் துணைத்தலைவராகியிருப்பது மேலும் பேருதவியாக இருக்கும் என்பதில் ஐயமில்லை.

---

# திரு. து. இராமலிங்கம்

**செயற்குழு உறுப்பினர்**

பெயர் : து. இராமலிங்கம்

முகவரி : பார்வதிபுரம், வடலூர் - 607 303. தென்னார்க்காடு மாவட்டம்.

தொலைபேசி : இல்லம்-வடலூர் 13, அலுவலகம்-வடலூர் 32.

தந்தையார் : துரைசாமி படையாட்சி

பிறப்பு : 24—5—1936 - தாது, வைகாசி, 11.

**வகிக்கும் பதவிகள் :**

1. தலைவர், வடலூர் பேரூராட்சி, வடலூர்.
2. அறங்காவலர், வள்ளலார் தெய்வநிலையங்கள். வடலூர்.
3. தலைவர், தெ. ஆ. மாவட்ட பேரூராட்சிகள் சங்கம்.
4. தலைவர், எஸ்.ஐ.எல். காண்ட்ராக்டர்கள் சங்கம், வடலூர்.

**பொதுப்பணி :** 13 சதுர கிலோமீட்டர் பரப்பளவோடும் 17000 மக்கள் தொகையோடும் பெரிய பேருந்து நிலையம், வாரச் சந்தை, சோடியம் ஆவி விளக்குகள், புதிய புதிய கடைகள், புதிய புதிய குடியிருப்புகள், புதிய புதிய அலுவலகங்கள், கூட்டுறவு பாங்க், சூப்பர் மார்க்கெட் என விரைந்து வளர்ந்து வரும் வடலூர்க்கு இவ்வளர்ச்சிக் காலத்தில் இவர் ஊராட்சி மன்றத் தலைவராகப் பதவியேற்றுள்ளார். மேலும் வளர்ச்சிப் பணிகளில் ஆர்வங்காட்டிப் பணியாற்றி வருகிறார்.

**சன்மார்க்கப்பணி :** வைகாசி 11 வடலூரில் விழா நாள். வள்ளற்பெருமான் சத்திய தருமச்சாலையைத் தொடங்கிய நாள். ஒரு வைகாசி 11-ல் இவர் பிறந்தார். அதனால் இராமலிங்கம் எனப் பெயரிடப் பெற்றார். பிறந்த நாளும், பெயரும் சன்மார்க்கத் தொடர்புடையதாகப் பிறப்பாலேயே அமைந்துவிட்டன. இது இவருக்கு ஒரு சிறப்பு. இன்னொரு சிறப்பு இவரது தந்தையார் துரைசாமி படையாட்சி 1936 - 38ல் வள்ளலார் தெய்வநிலையங்களின் அறங்காவலராக நியமிக்கப் பெற்றதாகும். வள்ளலார் தெய்வநிலையங்களை ஞானசபையின் பூசகரது குடும்பப் பரம்பரை நிர்வாகத்திலிருந்து அரசாங்கம் எடுத்துக்கொண்டபோது அறநிலையத்துறை முதன்முதலாக நியமித்த அறங்காவலர்களுள் துரைசாமி படையாட்சியும் ஒருவர். அவர் மூன்று முறை அறங்காவலராக இருந்திருக்கிறார். அந்நாளில் துரைசாமி படையாட்சி என்றால் ஊரில் நல்ல மதிப்பு உண்டு என்று சொல்லக் கேட்டிருக்கிறோம். தந்தையார் முன்பு அறங்காவலராக இருந்தார். மகன் இப்போது அறங்காவலராக வந்திருக்கிறார். இதுவும் து. இரா. வுக்கு ஒருபேறு. அக்காலத்தில் தந்தையார் பெற்ற நற்பெயரை இப்போது இவரும் பெறுவதற்கேற்பச் செவ்வனே பணியாற்றுவார் என்பதில் ஐயமில்லை.

---

# திரு அருட்பா இசைச் சங்கம் ஏன்?

டாக்டர். நெய்வேலி. A. இராசேந்திரன்

அமைதியான இரவு; வானில் சரியும் நிலவு; பாரவண்டிகள் வரிசையாகச் சிற்றூரின் குறுகிய நீண்ட சாலையில் அணி வகுக்கின்றன. பழக்கத்தின் அடிப்படையில் மாடுகள் தாமே நடக்கின்றன. நகரத்தில் நெல்மூட்டைகளின் சுமையை இறக்கி விட்டு வெற்றுவண்டியை மென்மையாய் அதட்டலின்றி அடி எடுத்து வைக்கும் நிம்மதி. கயிறுகள் மட்டும் வண்டிக்காரர்கள் கையில். மல்லாந்து விண்ணை நோக்கிப் படுத்துவிட்டவர்கள். ஒருவனுக்குப் பாட்டில் விருப்பம்; பாடவும் வரும். சிலருக்குக் கேட்பதில் விருப்பம், அவன் பாடுகிறான். அரிச்சந்திர நாடகத்தில் கண்டு கேட்ட மயானகாண்டத்துப் பாட்டு. 'ஐயோ வீரபாகுக்கே — நான் அடிமையாகிப் போனேனே'. அவன் இரவின் அமைதியைக் கிழிக்கும் குரலில் கத்துகிறான். அடுத்த வண்டிக்காரனும் அதற்கு அடுத்த வண்டிக்காரனும் அதற்கு அடுத்தவனும் அந்தப் பாட்டைக் கேட்டுக் கண் முன்னால் நாடகம் பார்க்கும் கற்பனைக்கே சென்றுவிட்டனர்.

பின்னால் ஒரு வண்டிக்காரன்; அவனுக்குக் கிட்டப்பாவின் பாட்டினை கிராமபோன் பெட்டியில் கேட்டுப் பழக்கம்; பலமுறை. அவன் குரலெடுத்துப் பாடுகிறான்: 'கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும் வகை கிடைத்த குளிர்தருவே, தருநிழலே நிழல் கனிந்த கனியே —' இசை ஊறுகின்றது. நாவில் தேன் ஊறுகின்றது.

முழுமையான பாட்டு அவனுக்குத் தெரியவில்லை. அவனுக்கு முன்னால் செல்லும் வண்டிக்காரன் அதே பாடலினை டி. ஆர். மகாலிங்கம் திரைப்படத்தில் பாடியதைக் கேட்டிருக்கிறான். பாட்டுப் புத்தகம் வாங்கிப் படித்திருக்கின்றான். அவனும் பாடுகிறான், பாடி முடிக்கிறான் 'ஆடையிலே எனை மணந்த மணவாளா பொதுவில் ஆடுகின்ற அரசே! என் அலங்கல் அணிந்தருளே'

பாடலைப் பாடியவர் யார், இசை அமைத்தவர் யார், எதுவும் தெரியாது அவர்களுக்கு. ஆயினும் பாடலை இயற்றியவரின் வெற்றி அங்கே செங்கோலோச்சுகிறது. சமுதாயத்தின் கடைசி மனிதனுக்கு, தாழ்ந்த நிலை மனிதனுக்கு எந்தக் கலை போய்ச் சேர்கின்றதோ அதுவே வெற்றி பெறுகின்றது. எந்தப் பாடல் போய்ச் சேர்கின்றதோ அந்தப் பாடலின் ஆசிரியர் வெற்றிபெறுகின்றார். அந்தப் பாடலின் கருத்து அந்த மனிதனின் நெஞ்சத்தை நெருடுகின்றபோது ஆசிரியரின் எண்ணம் முழுமை அடைகின்றது.

பாரதியாரின் பாடலைவிட, பாரதிதாசனின் பாடலைவிடக் கண்ணதாசனின் பாடல்கள் பெருவெற்றி பெற்றன என்பதே உண்மை. பாடலோடு கருத்தும் வாழ்வின் நோக்கமும் கலந்துசெல்லும் பொழுதே ஆசிரியர் மறைந்தும் வாழ்கிறார் எனலாம்.

அவ்வாறு சமுதாயத்தின் கடைசி மனிதனைச் சென்றடைய, அரிய பாடல்களான அருட்பாப் பாடல்களை ஆடுமேய்க்கும் முதியவனும் பாடி உணர்ந்திட எடுத்துக் கொள்ளும் கடுமையான முயற்சியே திருஅருட்பா 'இசைச் சங்கத்தின்'

குறிக்கோளாகும் என்பது தகும். ஒரு காலத்தில் 'வானத்தின்மீது மயிலாடக் கண்டேன்' என்று சிற்றூரில் சிறுவன் பாடிச் சென்றதைக் கேட்டோர் உண்டு. பஜனை மடங்களில் பஜனை ஊர்வலங்களில் அருட்பாப் பாடல்கள் பாடப்பெற்று மக்கள் செவி வழியே பரவின.

இன்று பழைய நடைமுறைகள் பட்டுப் போய்விட்டன. புதுமையாய் வானொலி, தொலைக்காட்சி, நாடாப்பதிவு வழிமுறைகளில் இசைப் பாடல்கள் மக்களிடையே விரைவில் பரவுகின்றன. அவற்றுக்கு அடிப்படையாக இசைச் சங்கங்கள் அமைகின்றன. அருட்பா இசைச் சங்கம் அமைந்திருப்பதன் நோக்கமும் அதுவே.

திருஅருட்பாவை இசையாக நீட்டி முழக்கிப் பாடுதல் தகுமா என்றொரு கேள்வி எழுதல் இயற்கை. பிடில், மத்தளம் போன்ற இசைக் கருவிகள் மன நெகிழ்ச்சியையும், உள்ளத்தின் ஈடுபாட்டினையும் குறைத்துவிடும் எனவும், கருத்தில் மனம் ஊன்றாமல் இசையில் மனம் ஊசலாடும் எனவும் கூறுவோர் உண்டு. பிடில், மத்தளம் போன்ற இசைக் கருவிகள் இல்லாமல் மனநெகிழ்ச்சியோடு, உள் உணர்வோடு தோத்திரம் செய்தல் வேண்டும் என்பது வள்ளலார் கருத்தாகும் எனவும் கூறுவோர் உண்டு.

வள்ளலார் கருத்துக்குப் புறம்பாகத் 'திருஅருட்பா இசைச் சங்கம்' தோற்றுவிக்கப் பெறவில்லை என்பதை முதற்கண் வலியுறுத்தக் கடமைப் பட்டுள்ளேன்.

இயல் இசை நாடகம் என்பது தமிழின் தனிப் பாகுபாடு. இசைத்தமிழ் இன்றேல் தமிழில் பெரும்பகுதி இல்லை என ஆகும். இசைக்கு உயிரைத் துளிர்க்கச் செய்யும் பண்பு உண்டு. இசைக்கு மயங்காதார் இல்லை. மரம் செடி கொடிகளும் இசையில் வளரும் என்பது ஆய்வுத் துறை. இறைவன் இசை வடிவானவன் என்பர் சமயச் சார்புடையோர். 'ஏழிசைச் சூழல் புக்கோ இறைவா தடவரைத் தோட்கென் கொலாம் புகுந்து எய்தியதே'—என்பது திருக்கோவையார். 'மாசில் வீணையும்'— என்று ஈசன் இணையடி நிழலை உவமையாக்குவார் திருநாவுக்கரசர். 'ஏழிசையாய் இசைப் பயனாய்' என்பார் சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

இசையால் உணர்வு குன்றும் என்பது தவறு. இசை உணர்வைத் தூண்டும் என்பதும் நினைவை வளர்க்கும் என்பதும் உண்மை.

'இசையின் நுண்ணிய பொருள் உட்கருத்தையும் உணர்ச்சியையும் வெளிப்படுத்தி அறிவித்தலேயாகும்' என்பார் ஹென்ரிச் ஹேன் என்ற அறிஞர்.

எனவே, இயல் தமிழின் உட்கருத்தினைத் தனது சிறப்பான வகையில் உணர்ந்து அனுபவிக்க, தன்னுயிராய் இயலினை ஆக்கிக் கொள்ள இசை வழி அமைக்கிறது.

இக்கருத்துப்படச் சேக்கிழாரும், 'மெய்யன்பர் மனத்தன்பின் விளைத்த இசைக் குழலோசை வையந்தன்னையும் நிறைத்து வானந் தன் வயமாக்கிப் பொய்யன்புக்கு எட்டாத பொற்பொதுவில் நடம்புரியும் ஐயன்' என்பார்.

வள்ளலார் இசை இன்பத்தை நுகர்ந்தவர் என்பதற்கும், இசை இன்ப நுகர்ச்சி ஆன்ம நேய நுகர்ச்சி எனக் கண்டார் என்பதற்கும் அவருடைய பாடல்களிலும் கட்டுரைகளிலும் எடுத்துக்காட்டுகள் பல கிடைக்கின்றன.

இசைப் பயனைத் துய்த்த வள்ளலார் திருவாசகத்தை இசையோடு பாடும் இயல்பினர் என்பதை அவரே கூறுகின்ருர்.

''வான் கலந்த மாணிக்க வாசக நின் வாசகத்தை

நான் கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே

தேன் கலந்து பால்கலந்து செழுங்கனித் தீஞ் சுவைகலந்துஎன்

ஊன் கலந்து உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே''

என்கின்ருர்.

ஆகவே, அருட்பாவின் பாடல்களை இசை நுட்பங்களோடு இசையாளர்கள் பாடினுல், பாடல்கள் பரவினுல் தமிழ் மக்களின் உள்ளங்களில் 'ஊன் கலந்து உயிர் கலந்து உவட்டாமல் இனித்துக்' கருத்து மழை பொழியும் என்பது உறுதி.

திருஅருட்பாவில் இடம் பெற்றிருக்கும் ஏராளமான நாமாவளிகள், கண்ணிகள், சிந்துகள், ஆடற்பாடல்கள், கீதங்கள், பதங்கள், கீர்த்தனங்கள் முதலானவைகளைத் தமிழ்நாட்டு இசைக் கலைஞர்கள் மேடைகளில் இசையோடு பாடுதல் வேண்டும். அதன் பயனுவன :- 1. தமிழ் இசை வளர்ச்சி. 2. தமிழ் மொழி உணர்வின் வளர்ச்சி, 3. வள்ளலாரின் கொள்கைகள் பரவவிடும் முயற்சி. 4. வள்ளலாரின் ஆன்மநேய ஒருமைப்பாடும் சுத்தசன்மார்க்க நெறியும் தமிழ் மக்களிடம் மறுமலர்ச்சி பெறும்.

வள்ளலார் இயல் தமிழில் புலமை பெற்றிருந்தது போன்றே இசைத் தமிழிலும் சிறப்புற்று விளங்கினுர் என்பது தெளிவு. இசைப் பாடல்களாகவே ஆயிரத்திற்கு மேற்பட்ட பாடல்களை வள்ளலார் வழங்கியுள்ளார்கள்.

'அம்பலப் பாட்டே அருட்பாட்டு

அல்லாத பாட்டெல்லாம் மருட்பாட்டு'

என்ருர் அவர்.

'சங்க மொலித்தது தாழ்கடல் விம்மிற்று'

எனவும்,

வீணை முரன்றது வேதியர் சூழ்ந்தனர்'

எனவும்,

'பக்தர்கள் சூழ்ந்தனர் பாடல் பயின்றனர்'

எனவும்,

'தொண்டர்கள் நாடினர் தோத்திரம் பாடினர்'

'அம்பரமான சிதம்பர நாடகம்

ஆடல் வல்லீரிங்கு வாரீர்

பாடல் உவந்தீரே வாரீர்

எனவும்,

'ஆடல் கொண்டீர் திருவம்பலத்தே என்றன்

பாடல் கொண்டீர் இங்கு வாரீர்

கூடல்வல்லீரி ங்கு வாரீர்'

எனவும்,

'பாடல் மறைகளோர் கோடி-அருட்

பாத உருவ சொருபங்கள் பாடி'

எனவும்,

'வள்ளா லுன்னைப் பாடப் பாட

வாய் மணக்குதே'

எனவும்,

பல்வேறு அருட்பாக்களில் பாடலைப் பற்றியும், ஆடலைப் பற்றியும் இசை மயமான இறைவனைப் பற்றியும் வள்ளலரர் இசையாகவே வழங்கியுள்ளார்.

எனவே, அருட்பா இசைச் சங்கம் வள்ளலார் வழிகாட்டும் நெறியிலேயே தொடங்கப் பெற்றது என்பதே உண்மை.

சீர்காழி நாராயணசாமி பிள்ளை என்பவர் பிடில் வாசிப்பதில் சிறந்த நிலையை அடைந்து பிறநாட்டு இசைக் கருவியான அதனை இந்நாட்டில் பரவச் செய்தவர்களில் ஒருவராக விளங்கியவர். அவர் பலகால் வடலூர் வந்து வள்ளலாரைக் கண்டு வணங்கி இங்கேயே தங்கியும் இருந்தார். வள்ளலாரிடம் தமிழ் இசை நுட்பங்களை அவர் கற்றுக் கொண்டார். பல தடவை வள்ளலார் பாட நாராயணசாமி பிள்ளை பிடில் வாசித்து மகிழ்ந்தார். வள்ளலாருக்கு ஒப்புயர்வற்ற 'கின்னரஸ்வரம்' இருந்தது. தாம்கண்ட மற்றைய பாடல்களில் சிறந்தவை மனம்உருக்கும் தன்மையனவாக இருக்க வள்ளலாரின் பாடல்கள் மனத்தை உருக்குவதோடு நில்லாது என்பையும் உருக்கும் தன்மையன என்றும் சொல்லி மகிழ்ச்சியடைவார். இதனை அவரே நேரில் சொல்லக் கேட்ட சி. ஆர். சீனுவாசய்யங்கார் சொல்லத் தமக்குத் தெரிந்ததாகத் திரு. ஆ. பாலகிருஷ்ண பிள்ளை தம்முடைய நூலில் தெரிவிக்கின்ருர்.

எனவே வள்ளலார் பிடில், மத்தளம் போன்ற இசைக் கருவிகளைப் புறக்கணித்தாரில்லை. மேலும் இசை வல்லுனர்கள் பலர் அவர் திருமுன் பாடியுள்ளனர் என்பதனையும் அறிகின்ரேம்,

திருஅருட்பாவை இசையாகப் பாடுதலும் மேடை அமைத்துப் பல்லாயிரம் மக்கள் முன்னர் பாடுதலும் அருட்பாத் தொண்டு எனவே கருதுதல் வேண்டும்.

தேவாரம் திருவாசகம் திருப்பாவை முதலானவை பொருளுணர எங்கணும் பாடி மகிழ்தல் போலவும், பாடல்கள் பரப்பப்படுதல் போலவும் கருத்துச் செறிந்த திருஅருட்பாவைத் தமிழகம் எங்கணும் இசை வாயிலாகப் பரப்பினுல் தமிழகம் உய்வடையும். திருந்தும். வாழ்க்கை மலரும்.




'சாதியிலே மதங்களிலே சமயநெறிகளிலே
சாத்திரச் சந்தடிகளிலே கோத்திரச் சண்டையிலே
ஆதியிலே அபிமானித்து அலைகின்ற உலகீர்
அலைந்தலைந்து வீணேநீர் அழிதல் அழகலவே'

என்று இசையோடு பாடிக்கொண்டு தெருவோடு செல்கின்ற மாடு மேய்க்கின்றவன் சென்றால் இந்த நாடு திருந்தாதா?

ஏட்டிலே மட்டும், அறிவாளர் மேடையிலே மட்டும் பாடல்கள் ஒலிப்பதால் மட்டும் வள்ளலார் நோக்கம் நிறைவேறுமா?

எனவே, வள்ளலாரின் நோக்கம் நிறைவேறத் திருஅருட்பா இசைச் சங்கம் முயற்சி மேற்கொள்ளும்.

இன்று தென்னாடு முழுமையும் மேடைகளில் பாடப்பெறுகின்ற தியாகராயரின் கீர்த்தனைகள், வானொலி, தொலைக்காட்சிகளின் வழியே சில நாடுகளில் ஒலிக்கின்ற அந்தப் பாடல்கள் ஒரு காலத்தில் பஜனை மடங்களில் பாடப்படும் வெறும் பக்திப் பாடல்களாக மட்டுமே மதிக்கப்பட்டன - கையாளப்பட்டன.

காலப்போக்கில் காஞ்சீபுரம் நயினாப்பிள்ளை என்பவர் தியாகராயரின் பாடல்களுக்கு இராகம் தாளம் பல்லவி முதலான இசை அமைப்புகளைப் பிரித்துப் பாகுபடுத்திப் பாடிக்காட்டினார்.

நயினாப்பிள்ளை செய்த மாறுதல் இசைத் துறையிலே மாறுதலை உண்டாக்கி விட்டது. இன்று தியாகராயரின் பாடல்கள் இல்லை எனில் இசை மேடை 'தரம்' குறைந்ததாகக் கருதப் படுகின்றது. தமிழ் அல்லாத, புரியாத, பொருள் அறியாத பாடலுக்கே தமிழ்நாட்டில் இந்த நிலை.

திருஅருட்பாப் பாடல்களைப் பொருளோடு மனம் உருக, மகிழ, உணரப் பாடினால் உண்மையில் இசை மேடைகளின் 'தரம்' தமிழ்நாட்டில் உயரும் என்பதே உண்மை.

பயன்கருதிச் செய்யப்படும் எந்த மாறுதலும் மறுமலர்ச்சியும் அதற்கான முயற்சியும் தொடக்கத்திலே 'தரம்' தாழ்ந்தவைகளாகக் கருதப்பட்டாலும் அவை தம் பயனுள்ள விளைவுகளால் பலவகை நன்மைகள் உறுதியாய் ஏற்படும். இசைத்துறையில் பழைமையை நீக்கிப் புதுமை எண்ணங்களையும் நல்வாழ்வுக் கருத்துகளையும் அளிக்கின்ற திருஅருட்பாவை இசையுடன் பாடிடவே திருஅருட்பா இசைச் சங்கம் முயல்கின்றது.

தமிழறிந்தோர் ஆதரவு நல்குதல் கடமையாகும்.

**

# பாட்டுவித்தால் பாடுகின்றேன்

**டாக்டர். சு. சிவகாமசுந்தரி,**
தமிழ்ப் பேராசிரியர் — துறைத்தலைவர்
திரு அவினாசிலிங்கம் மனையியல் கல்லூரி,
கோவை,

''இசைய வைப்பது இசை'' என்பது **வேதம்**. ''இசைப்பு இசையாகும்'' இது **தொல்காப்பிய நூற்பா**. ''ஏழிசை நூற்சங்கம் இருந்த'' பெருமையைப் பேசுகின்றது **சங்க இலக்கியம்**. தமிழின் பெருமை இசையாய்ப் பரவ இசைத்த சிறப்பை இசைவாணர் இசைக்கலை, கருவிவகைகள் பற்றி உரைக்கின்றனர் **உரையாசிரியர்கள்**. மனக்கருத்தாய் அரும்பி, இசையாய்ப் பூத்துப் பூரித்த உரையிடையிட்ட பாட்டின் பெருமையைக் கூறுகின்றன **காப்பியங்கள்**. இசை மணக்க வசை நீங்கி அறம் வென்ற இசையை **மாக்கதைகள்** மறவாமல் சொல்லுகின்றன. அறிவரிய சோதியன் ஆலின்கீழ் அறமுரைத்துச் சாமகீதனுய் மிகநல்ல வீணை தடவி இன்பக் கூத்தாடி அடியவர்களிடம் கேட்டது ''நம்மை சொற்றமிழால் பாடுக'' என்பதுதான் என்பதைச் சுட்டிக் காட்டுகின்றுர் **சேக்கிழார்**. ''ஏழிசையாய் இசைப்பயனுய் இன்னமுதாய் என்னுடைய தோழனுமாய்'' எனத் தனக்கும் இறைவனுக்குமுள்ள இசைந்த பொருத்தத்தைச் சுந்தரமாய் இசைக்கின்றுர் **சுந்தரர்**. அன்பர்கள் பாடும் இடத்தில் இறைவன் நீங்காது எழுந்தருளியிருப்பார் என்பதனைச் **சம்பந்தர்**

தமிழின் நீர்மை பேசித் தாளம் வீணை பண்ணி நல்ல
முழவம் மொந்தை மல்கு பாடல்செய்கையிட மோவார்''

என்று கூறுவார். இறைத் தொண்டில் திருவலகிடுதல், மெழுகுதல், மலர் தொடுத்தல் திருவிளக்கிடுதல் எனும் தொண்டுகள் ஒன்றுக்கொன்று உயர்ந்ததெனினும், எல்லாவற்றினும் உயர்ந்தது இறைவனைக் குறித்துப் பாடுதலே என்பது **திருநாவுக்கரசரின்** உறுதியான வாக்கு.

''விளக்கினுர் பெற்ற இன்பம் மெழுக்கினுற் பதிற்றி யாகும்
துளக்கில்நன் மலர் தொடுத்தால் தூயவிண் ணேறலாகும்
விளக்கிட்டார் பேறு சொல்லின் மெய்ந்நெறி ஞானமாகும்
**அளப்பில கீதம் சொன்னுர்க் கடிகள்தாம் அருளுமாறே''**

என்பது பாடல்.

பதினோராம் திருமுறையில் கபிலதேவ நாயனுர் தாம் பாடிய சிவபெருமான் திருஅந்தாதியுள் ''நூறு ஆவின் பாலை இறைவன் திரு முடிக்கு ஆட்டி நூறு மலரைக் கொண்டு இறைவன் திருப்பெயர்களைக் கூறிக்கொண்டு பூச்சொரிதலைக் காட்டிலும் சிறந்ததாகும் அச்சிவன்மேல் ஒரு பாடல் பாடி வணங்குவது என்பார்.

''நூருன் பயன் ஆட்டி நூறு மலர் சொரிந்து
நூரு நொடிவதனின் மிக்கதே - நூரு
உடையான் பரித்தவெரி உத்தமனை வெள்ளேறு
உடையானைப் பாடலால் ஒன்று''

என்பது பாடலாகும்.

நாளும்இனிய இசைத் தமிழ் பாடிய சம்பந்தருக்கு இறைவனும் துணையாக இருந்து 'தாளம்' எனும் இசைக்கருவியைத் தந்து. உதவி, பாட்டுக்கு இரங்கி அருள்புரிந்ததைச் சுந்தரர் பாடுவார்.

''நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தனுக்குலகவர்முன்
தாளம் ஈந்தவன் பாடலுக்கு இரங்கும் தன்மையாளனை''

என்பது பாடலாகும். சமண, பௌத்த மதத்தவர்கள் தமிழிசைக்கு மண்டியிட்டவர் களே. இறைவன் வருவிக்க உற்று அருளைப் பெற்ற இராமலிங்க அடிகள்

''வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபினில் யான் ஒருவன்''

என்பதை மறவாது கூறி இறைவனிடம் தன்பணி அமைய வேண்டுகின்ருர்.

''இறையவனே! எனை நீ பாடுக! என்னேடு கலந்தாடுக
என்றெனக்கே பணியிட்டாய் நான் செய் பெரும் பாக்கியம் என்றுவந்தேன்
கோடு தவருது உனை நான் பாடுதற்கு இங்கேற்ற
குணப்பொருளும், இலக்கியமும் கொடுத்து மகிழ்ந்தருளே''

எனவேண்டித் ''திருஅருட்பா'' பாடல்களைப் பாடினுர். 'பா'—அதாவது ''பாட்டு'' என அறிவித்துப் பாடிய முதற்பெருமை, முழுப் பெருமை பத்தொன்பதாம் நூற்ருண்டில் தோன்றிய இராமலிங்க அடிகள் எனும் வள்ளல் பெருமானுக்கே உண்டு. பாட்டிலே தன்னைக் கலந்து, ஊன் கலந்து, உயிர் கலந்து, உவட்டாமல் பாடும் ரசவாத வித்தையைத் தனக்குக் கொடுக்குமாறு இறைவனை வேண்டுகின்ருர்.

இசையால் மட்டுமே இறைவனைத் தான் இருக்குமிடத்திற்கு அழைக்க முடியும். இறைவன் தோழனுவான். தூதனுவான், எலும்பு பெண்ணுகும். சாம்பரும் தெய்வ மாகும். முதலை, கட்டுப்படும். தான் உண்டபிள்ளையை வெளியிலே உயிரோடு கொடுக் கும் நல்ல துணையாகும். கீழ்ப்பறவைச் சாதிகளும் வேட்டமுறும். பொல்லாத விலங்கு களும் கொலைத் தொழிலைக் கைவிடும். தயவு பிறக்கும். இரக்கம் தோன்றும். கருணை

உருவாகும். 'உயிர்க்கெலாம் அன்பு செயத்தோன்றும். தேனென இனிக்கும் திருப் பாட்டைத் தினந்தோறும் பாடிப் பரவினுல் அமுதநிலை பெற்ற அருள்வடிவு பெறலாம். இதனை மனதில் கொண்டு இவ்வாறு விண்ணப்பிப்பார்.

''தேன் படிக்கும் அமுதாம் உன் திருப்பாட்டைத் தினந்தோறும்
நான் படிக்கும் போதென்னை நானறியேன் நா ஒன்ருே
ஊன் படிக்கும் உளம்படிக்கும் உயிர்படிக்கும் உயிர்க்குயிரும்
தான் படிக்கும் அநுபவங்காண் தனிக்கருணைப் பெருந்தகையே''

''நானும், என்மனமும், என் உடலும், என் உயிரும் இணைந்து செயல்பட வைத்து மற்றவர்களையும் ஈர்க்கும் திறன் இசைக்கு மட்டுமே உண்டு'' என்பது இந்திய இசையைப் பற்றி நூல் எழுதியுள்ள மேனுட்டு அறிஞர் காப்டன் டே (Captain Day என்பவரது கருத்தாகும். மனிதனது உள்ளத்தின் நரம்பை மீட்டி உயிரை விழிப் படையச் செய்யும் ஆற்றல் இசைக்கு உண்டு என்பதை மனித நேயத்தோடு உணர்ந்து உணர்த்தியவர் வள்ளல் பெருமான்.

பத்தொன்பதாம் நூற்ருண்டில் மேனுட்டார் ஆட்சி, ஆட்சிமொழி, நாகரிகம் இவை பெற்ற செல்வாக்கின் விளைவாக நம்மவர்கள் பலர் மேனுட்டார் கருத்துக்களைத் தமதாக் கிக் கொண்டனர். சமய வாழ்விலும் ஆங்கிலேயரது தலையீடு தவருமல் சென்றது. இதனுல் மக்களிடையே குழப்பங்கள், வேறுபாடுகள், மாறுபாடுகள் ஏற்பட்டன. ஆங் கிலக்கல்வி முறை, பண்பாடு,சமயநோக்கு, பழக்கவழக்கங்களை ஏற்றுக்கொள்ள ஒரு சிலரும், பழமையை விரும்பித் தமிழகமரபிலேயே செல்லவேண்டுமென்று வேறுசிலரும் எண்ண, ஒரு பண்பாட்டுப் போராட்டமும் நடந்தது. சாதியின் பெயராலும்' மொழி யின் பெயராலும் சில சிக்கல்கள் ஏற்பட்டன.

இந்தக் காலத்தின் நிலையை உணர்ந்து பணிசெய்யப் புறப்பட்ட சில சமுதாயப் புரட்சியாளர்களுள் வள்ளல் பெருமான் குறிப்பிடத் தக்கவராவார். தனிமனித வாழ்விலும், சமுதாயத்திலும் நிறைந்திருந்த சீர்கேடுகளைக் களைய வேண்டுமென்று வள்ளல் பெருமான் விரும்பினார். தனிமனிதன் திருந்தாதவரை சமுதாயம் திருந்தாது என்ற கொள்கையில் உறுதியாக இருந்தார்.

எல்லா மக்களும், எல்லா மதத்தினரும், எல்லா இனத்தவரும், எல்லா நாட்டி னரும் வேற்றுமையின்றி வாழவேண்டும். அருட்பெருஞ் ஜோதியே இறைவன், தெய்வத்தின் பெயரால் ஒற்றுமையும், அன்பும், தயவும், கருணையும்மட்டுமே நிலை நாட்டப்படுதல் வேண்டும். ,மனித உணர்விற்கு அடிப்படை இரக்கம். கருணை, இரக்கம், தயவுஇல்லாமல் கடவுள் இல்லை, இதனை உலகுக்கு உணர்த்த, சமரசம்

என்றபுதிய உணர்வை நினைந்து, உணர்ந்து, புனைந்துரையாமல், வனைந்துரைக்காமல் பொய்புகலாமல் மக்களுக்கு உணர்த்த நினைத்துச் செயல்பட்டார். எண்ணத்தைக் காற்றிலே விட்டுவிடாமல் கட்டிப்பிடித்து இணைத்து எழுத்தால் எடுத்துக்கூறிய தொகுப்பிற்குத்தான் 'திரு அருட்பா' எனப் பேயர் கொடுத்தார்கள். திரு அருட்பாவை இசை நயம் ததும்பும் தோத்திரப் பாடலாகப் பாடி அமைத்தார்கள். கீர்த்தனைகளையுழ் கண்ணியையும் தெம்மாங்கையும் அருட்பாவில் அமைத்துக் கொடுத்தார்கள். இதற்குக் காரணம்? பிறந்த குழந்தைமுதல் தொண்டு வயதுக்காரர் வரை தூய வாயின் முழக்கமான இசைக்குக் கட்டுப்படுவதை அறிந்திருந்தார்கள், உணர்ந்திருந்தார்கள், இச்சை ஏதும் இல்லாதிருந்த தனக்கு ஏற்பட்ட சன்மார்க்க இச்சையை வெற்றியாக்கும் நல்ல சாதனம் 'இசை' என்று உணர்ந்தார்கள். ''பாடுகின்றோர் பாடப் பரிசளிக்கும் புண்ணியன்'' அருளால் 'பாட்டுவித்தால் பாடுகின்றேன்'' என்று இந்நாட்டுச் சாமான்ய மானவர்களுக்கும் புரியும்படியாகத் திருஅருட்பாவைப் பாடினார்கள். சங்கம் அமைத்து, தங்கமே அனையாரைக்கூட்டிச் சுத்த சன்மார்க்கக் கொள்கைகளை உலகுக்கு அறிவிக்க வள்ளல் பெருமான் இசையையும், கூத்தையுமே தேர்ந்தெடுத்தார்கள். இதனையே ''பாடல் நெறி'' ''ஆடல் நெறி'' என்று சம்பந்தர் குறிப்பிடுவார். சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கத்தை அமைப்பதிலும், அதன் செயல்பாட்டிலும் வள்ளல் பெருமானுக்கிருந்த பேரார்வம் பின்வரும் பாடலால் வெளிப்படுகின்றது.

''தங்கமே அனையார் கூடிய ஞான
சமரச சுத்தசன் மார்க்கச்
சங்கமே கண்டு களிக்கவும் சங்கம்
சார் திருக்கோயில்கண் டிடவும்
துங்கமே பெருஞ்சற் சங்கம்நீ டுழி
துலங்கவும் சங்கத்தில் அடியேன்
அங்கமே குளிர நின்றனைப் பாடி
ஆடவும் இச்சை காண் எந்தாய்''

''பாடிநின் திருச்சீர் புகழ்ந்திடவும்'' ''பண்ணார நின்றனையே பாடியுறவும் வள்ளல் பெருமான் வேட்கை கொண்டார். இதற்கான திறனும், வலிமையும்தர இறையை வேண்டிக் கேட்கின்றார்,

"நண்புடையாய் என்னுடைய நாயகனே எனது
நல்உறவே சிற்சபையில் நடம்புரியும் தலைவா
எண்புடையா மறைமுடிக்கும் எட்டாநின் புகழை
யாதறிவேன் பாடுக என் றெனக்கேவல் இட்டாய்
பண்புடை நின் மெய்யன்பர் பாடியபே ரன்பில்
பழுத்த பழம் பாட்டில் ஒரு பாட்டும் அறியேனே
தண்புடைநன் மொழித்திரளும் சுவைப் பொருளும் அவைக்கே
தக்க இயல் இலக்கியமும் தந்தருள்வாய் எனக்கே"

என்ற பாட்டில், மொழி, சுவை, இயல், இலக்கியம், பண்பு, அன்பு, அருள் அத்தனையும் அமுத இசையால் இம்மாநிலத்தின் மனித சமுதாயத்திற்குச் சொந்தமாக்க முடியுமென்ற யதார்த்த உண்மையை அறிவார் அறிய எடுத்துரைக்கின்றார்கள். "**பண்ணால் உண்ணடி உயிர்கள் உறும் துயர் தவிர்த்தல் முடியும்**" என்பது வள்ளல் பெருமானது அழுத்தமான கொள்கை. "பண் அளாவிய மொழியினால்" உலகமக்களை இணைக்க அருட்புகழைப் பாடிப் பரவுதலினால் மட்டுமே எளிதாக்க முடியும். இறைவனைப் "பண்ணே பண்ணிசையே; பண்ணின் பயனே" என வாய்த்திருப்பாட்டால் பாடுவதற்கு உலகோர் அனைவருக்கும் உரிமை உண்டு. கற்கோட்டை நெஞ்சத்தவரும் பாட்டின் சொற்கேட்டால் பாகாய் உருகுவார். பாடுகின்ற மறைகளெலாம் தயவை அடிப்படையாகக் கொண்டால் உலகில் அமைதி நிலவும் "என்ற அரவிந்தர்கூற்று இங்குசிந்தித்தற்குரியது. தொண்டாற்பொழுதளந்து இறைமையைக் கண்ட மேனாட்டறிஞர் **ஆல்பர்ட் ஷுவைசர்** இவ்வாறு கூறுவார். "தொண்டு செய்வதற்கும் இரக்கப்படுவதற்கும், மனிதனை நேசிப்பதற்கும் இசையை விட வேறு சாதனமில்லை. "இசைக்கு மொழி தேவையில்லை, இரக்கம்மட்டுமே **வேண்டும்**" என்பார் கலைஞர் **பீதோவான்**.

படித்தோர் பணமுடையோர் பதவியிலுள்ளோர் எனப்பாராது பாமரரையும் மனிதாபிமான உணர்வோடு நோக்கும் ஆற்றல் இசைக்கு உண்டு. எனவேதான் என் பிரார்த்தனை இசையோடு நடக்கிறது, இறைவன் ஒருவன், அவன்தான் ஒளி, அவன்தான் கருணை; அவன்தான் அமைதி, இதை அனைவருக்கும் எடுத்துக் கூறப் பாட்டுதான் மிகச்சிறந்த சாதனம் என்பார் **காந்தியடிகள்**. "கீதத்தால் அஞ்சலித்ததால் நோபல் பரிசு பெற்றேன்" என்று சொல்லுவார் **மகாகவி இரவீந்திரநாத் தாகூர்**. "சிம்மத்தைப்போல் குரலெடுத்துப் பேசுவதை விடக்கோகிலம் போல் பாடிப் பலரைத் திருத்தலாம்" என்றும் நம்பினார் **சுவாமி விவேகானந்தர்**. "பாட்டினில் அன்பு செய்" என்றான் பாட்டுப் பாட்டன் **பாரதி**. "பாட்டுக்கு உருகினேன்" என்றார் **புரட்சிக்கவிஞர் பாரதிதாசன்**. பெரிய இன்பம் பாட்டில் உண்டு என முழங்கினான் பட்டுக்கோட்டை கவிஞன் கலியாண சுந்தரம். பாட்டுப் பாடப் பாட பாசம் வளர்ந்தது என்றார் **கவியரசு கண்ணதாசன்**. பாடும் பணியே பணியாய் என அருணகிரியார் போன்றோரும் கேட்கத் தவற வில்லை. பாட்டுக்குள்ள சக்தியை இருபதாம் நூற்றாண்டுக்காரர்களும், அறிஞர்களும் ஆன்மீகவாதிகளும் அழுத்தமாகக் கூறியதற்கு அடியெடுத்துக் கொடுத்தவர் வள்ளல் பெருமான் எனில் அது மிகையில்லை.

இறைவா!

பாட்டாளர் பாடு தொறும் பரிசளிக்கும் துரையே

பன்னு மறைப் பாட்டே! மெய்ப் பாட்டினது பயனே''

என பாட்டியல் கொண்டு அன்பரெலாம் போற்றினால் ''மார்க்கமெலாம் ஒன்றாகும்'' என்பது வள்ளல் பெருமானது கருத்து. சீவகாருணியமென்கின்ற திறவுகோலைக் கொண்டுதான் மோட்சமாகிய மேல்வீட்டுக் கதவைத் திறக்கவும், எக்காலத்தும் அழியாத இன்பத்தை அனுபவித்து வாழவும், எல்லார்க்கும் பொதுவில் நடம் இடுகின்ற இறையை உணரவும் திரு அருட்பாட்டுதான் சிறந்த சாதனம் என்பதைத் தனது திரு அருட்பாவில் வள்ளல் பெருமான் பலநிலைகளில் வற்புறுத்து கின்றார்கள்.

தேன்பாடல் அன்புடையார் பாட, வானும், மறையும் கூடச்சேர்ந்துபாட பூம்பாடல் புனைந்தேத்திப் பலரும்பாட ''யான் பாட, நீ திருத்த என்ன தவம் செய்தேனோ'' என வள்ளல் பெருமான் பாடுவதன் உட்பொருள் உணர்ந்து நோக்கு தல் வேண்டும். ''அன்பினொடும் பாடிப் பாடி'' பரவுகின்ற அம்பலப் பாட்டைத்தான் பாடுதற்காகக் கொடி கட்டிக் கொண்டதாகப் பெருமான் கூறுவர். ''பாட்டைப் புனைந்து பரிசளித்த பரமஞான'' சன்மார்க்கக் கொடி இசையில் ஓங்கிப் பறக்கவேண்டும். ''பாடுஞ் சிறியேன் பாட்டனைத்தும்'' பசிபோக்கத் துணையாக வேண்டும், உலகர் அனைவரையும் சகத்தே திருத்திச் சன்மார்க்க சங்கத்து அடைவித்திடவேண்டும். மார்க்கமெலாம் ஒன்றாக வேண்டும். சன்மார்க்க சங்கத்தவர்களே வெற்றிபெறல் வேண்டும். இந்த வெற்றிக்குச் சாதனமாக இசையை வள்ளல் பெருமான் கருவியாகக் கொண்டார்கள். ஆருயிர்கட்கெல்லாம் அன்பு செய்ய இசையை திரு அருட்பா வழி உலகோர்க்கு வழங்கினார்கள். சமயக் கோட் பாட்டில் தாம் காண விரும்பிய சமரசம், சாதி, சமய பேதமற்ற சமுதாயம், பசியில்லா உயிர்க் குலம், தன் உளத்தே இறைவனைக் காணும் பெரும்ஞானம், மரணமிலாப் பெருவாழ்வு அனைத்தையும் புரிந்துகொண்டு புரியவைக்க 'வம்மின் உலகியலீர்' என விடுத்த அழைப்பு இசை அழைப்பு! அவர்கள் ஒரு சித்தரா! மருத்துவரா! கவிஞரா! தத்துவ வித்தகரா! சமரச ஞானியா! தனித்தனியாகக் கூறவியலாத சான் றோர். மனிதகுலத்தை நேசித்த மகத்தான தெய்வம். எல்லார்க்கும் பொதுவான குறிக் கோள்களை நன்கு உணர்ந்து காட்டிய நெறி இசை நெறியே என்பதனை ஆரவார மின்றி அடக்கமாகக் கூறியவர்கள். ''இசைத்திடவும், நினைத்திடவும் பெரிதரிதாம் தனித்தலைமை இறைவன்'' **''என் பாட்டை நயந்தான்''** என வள்ளல் பெருமான் அழுத்தமாகக் கூறி உலகிற்கு வழங்கிய ஞானப் பாடல்கள்தான்திரு அருட்பா பாடல்கள்.



# வள்ளலாரின் அருட்பாக்கள்

**Dr, சேலம் எஸ். ஜெயலட்சுமி**

என் தகப்பனார் சேலம் வக்கீல் திரு. ஆர். சுப்ரமணிய முதலியார் அவர்கள் வள்ளலாரின் அருட்பாக்களில் பெரிதும் ஈடுபாடு கொண்டவர்கள். என் தாயார் நீலாம்பிகை அம்மை அவர்களும் எங்களுக்குச் சிறு வயதிலிருந்தே இராமலிங்க சுவாமிகளின் அருட்பாடல்களைப் போதித்து வந்தார்கள். வங்காளத்தில் பிறந்த இராமகிருஷ்ண பரமஹம்சரின் சம காலத்தவரான வடலூர் வள்ளலார் இறையருள், இறைஞானத்தினை அனைவரும் பெற வேண்டும் என்ற பெருநோக்கோடு கடுமையான தத்துவங்களையும் எளிய முறையில் போதித்தார் என்று என் தந்தையார் எங்களுக்குக் கூறுவார். அவருடைய அருள் நிறைந்த நெறியில் பெரிதும் ஈடுபட்ட என் தந்தையார் இராமலிங்க வள்ளலாரின் பெயரால் எங்கள் கிராமமாகிய சூரமங்கலத்தில் (சேலம் ஜங்ஷன்) பள்ளிகளை நிறுவினார்கள். மதிய உணவு அளிக்கும் பழக்கத்தைப் பல ஆண்டுகளுக்கு முன்னரே எங்கள் குடும்ப அறக்கட்டளையின் மூலம் நிறுவினார்கள்.

என் அண்ணன் ''சைவ சித்தாந்த சிகாமணி'' ''அருட்பா மணி'' என்ற பட்டங்களைப் பெற்ற சேலம் திரு. S. இராமலிங்கம் Bsc (Ag) BL அவர்கள் வள்ளலாரின் திருவடிப் புகழ்ச்சி முதலிய நூல்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து வெளியிட்டுள்ளார்கள். இராமலிங்க சுவாமிகளின் பிறந்த நட்சத்திரத்தில் அவர் பிறந்ததால் எங்கள் பெற்றோர் இராமலிங்கம் என்ற பெயரை அவருக்குச் சூட்டினார்கள். பொதுவாக சைவ சித்தாந்தத்தில் ஈடுபட்டவர்கள் இராமலிங்கரின் அருட்பாக்களைப் போற்ற மாட்டார்கள். ஆனால் என் தமையனார் இராமலிங்க அடிகளார் தேவாரத் திருமுறைகளை முழுமையாகப் பின்பற்றி அவற்றையே நன்கு எளிய நடையில் விளக்குகின்றார்கள் என்று கூறுகிறார்கள். அடிகளார் எவ்விதத்திலும் சைவ சித்தாந்தக் கொள்கைகளுக்கு முரண்பட்டவர்கள் அன்று என்பது அவர் கருத்து

எங்கள் பெற்றோர்களின் தூண்டுதலால் முன்னரே அருட்பாக்கள் சிலவற்றைப் பாடி வந்தாலும் என்னை அருட்பாப் பாடல்களை அதிகமாகப் பாட வேண்டுமென்று வற்புறுத்தியவர் தென்னாப்பிரிக்காவைச் சேர்ந்த திருமதி. சகுந்தலா நாயுடு அவர்களே. ஏனெனில்தென்னாப்பிரிக்காவில் அருட்பாச் சங்கங்கள் குறைந்தது நாற்பதுசங்கங்கள் உள்ளன. சகுந்தலா நாயுடு 1973-ல் இந்தியாவுக்கு வந்த போது வள்ளலாரின் பாடல்களுக்கு இசையமைத்துப் பாடி நாடாப்பதிவு செய்து கொடுக்க வேண்டுமென்று மிகவும் வற்புறுத்தினார்கள். நானும் அருட்பாக்கள் கீர்த்தனை வடிவிலுள்ள பல பாடல்களை எடுத்துப் புதிய மெட்டுகள் அமைத்து அவர்களுக்கு டேப்பில் பதிவு செய்து கொடுத்தேன். பின்னர் சென்னை வானொலி நிலையத்திற்குக் காலை வந்தனை செய்வோம், என்ற நிகழ்ச்சிக்காகப் பல பாடல்களைப் பாடிப் பதிவு செய்தார்கள்.

ஒருமுறை சென்னை பெரம்பூரில் விவேகானந்த சபையில் மூன்று நாட்கள் தொடர்ந்து இசை நிகழ்த்த ஏற்பாடு செய்தார்கள். முதல் நாள் தேவாரத் திருமுறை இரண்டாம் நாள் திருப்புகழ், மூன்றாம் நாள் அருட்பா இசையரங்கு.

முதல் நாள் தேவார இசை நன்றாக அமைந்தது. இரண்டாம் நாள் திருப்புகழ் மிகவும் நன்ருக அமைந்தது. இப்பாடல்கள் முருகனுக்கே உரித்து என்று போற்றினார்கள். மூன்றாம் நாள் முற்றிலும் அருட்பா இசையரங்கு. நல்ல கூட்டமும் சேர்ந்தது. அருட்பாக்களைக் கேட்டவர்கள் அவற்றில் லயித்து நெஞ்சம் உருகினார்கள். அன்று முதல் இசையரங்குகளில் தக்க தருணம் வாய்க்கும் போது அருட்பா பாடல்களை நான் ஏராளமாகப் பாடுவது வழக்கம்.

1979 - டிசம்பர் மாதம் மொரிஷியஸ் தீவு சென்று பின்னர் 1980 ஜனவரியில் தென்னாப்பிரிக்கா சென்றேன். தென்னாப்பிரிக்கா இந்தியத் தமிழ் மக்கள் வள்ளலார் மீது அளவுகடந்த பற்றுதல் உள்ளவர்கள். அங்கு இசை நிகழ்ச்சிகளில் தேவாரத் திருமுறை, மற்ற தமிழ்ப் பாடல்களோடு அருட்பாக்களை நிறையப் பாடியது அவர் களுக்கு அளவற்ற மகிழ்ச்சியைக் கொடுத்தது. நான் HMV கிராமபோன் கம்பெனி மூலம் பாடிய சிவபுராணம், திருப்புகழ் முதலிய இசைத்தட்டுகள் அங்கு ஒவ்வொரு வீட்டிலும் இருப்பதைக் கண்டேன், திருமதி சகுந்தலா நாயுடுவும் மற்றோரும் எப்படியாவது என்னை அவர்களுடைய நாட்டிற்கு அழைத்துச் செல்ல வேண்டு மென்று படாத பாடு பட்டார்கள். அடிகளாரின் கருணையால் அந்த முயற்சி நல்ல முறையில் ஈடேறியது.

பின்னர் 82-ம் ஆண்டு நல்ல இசை அமைந்திருந்த பத்துப் பாடல்களைத் தொகுத்து கீதாஞ்சலி (Coney) நிறுவனத்தார் மூலம் ஒரு கேசட்டு வெளியிட்டோம். இசைத்தட்டு வடிவில் வந்திருந்தால் உலகமெல்லாம் அருட்பா இசைத்தட்டு பறந்து சென்றிருக்கும். இப்போது இசைத்தட்டுகளை யாரும் வாங்குவதற்கு முன் வராத தில் கேசட்டுகள் மட்டும் வெளிவந்துள்ளன.

அருட்பாக்கள் பாடப்பாடத் தேனாகத்தித்திக்கும் இனிமையாய் தெவிட்டாத சுவை கொண்டதாக இருப்பதால் அருட்பா இசைவிழா வெகு விரைவில் வளர்ந்து பெரிதாகி விடும் என்பதில் ஐயமொன்றுமில்லை,

அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி



# இராமலிங்க அடிகளும் இசையும்

டாக்டர் S. இராமநாதன்

சைவ சமயக்குரவர்களாகிய அப்பர், சம்பந்தர், சுந்தரர் என்ற மூவர் இயற்றிய பாடல்கள் தேவாரம் எனவும், மாணிக்கவாசகர் இயற்றிய பாடல்கள் திருவாசகம் எனவும், பேயாழ்வார், பூதத்தாழ்வார், பொய்கையாழ்வார், பெரியாழ்வார், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார், முதலான ஆழ்வார்களின் அருளிச்செயல்கள் திவ்வியப்பிரபந்தம் என்றும் அழைக்கப்பெறுகின்றன. பத்தொன்பதாம் நூற்றுண்டில் தமிழ் நாட்டில் வாழ்ந்த இராமலிங்க வள்ளலார் இயற்றியருளிய பாடல்கள் திருவருட்பா என்று அழைக்கப்படுகின்றன.

திருவருட்பாப் பாடல்கள் விருத்தங்களாகவும் கீர்த்தனைகளாகவும் நாமா வளிகளாகவும் கும்மி முதலிய இசை வடிவங்களிலும் காணப்படுகின்றன.

'கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும்வகை கிடைத்த
குளிர்தருவே, தருநிழலே நிழல்கனிந்த கனியே
ஓடையிலே ஊறுகின்ற தீஞ்சுவைத் தண்ணீரே
உகந்ததண்ணீர் இடைமலர்ந்த சுகந்தமண மலரே
மேடையிலே வீசுகின்ற மெல்லியபூங் காற்றே
மென்காற்றில் விளைசுகமே சுகத்தில்உறும் பயனே
ஆடையிலே எனை மணந்த மணவாளா பொதுவில்
ஆடுகின்ற அரசேயென் அலங்கல்அணிந் தருளே.

போன்ற விருத்தப்பாக்கள் நாடக மேடையிலும் இசைக்கச்சேரிகளிலும் முழங்கிவந்தன'

'அருட்பெருஞ்சோதி தனிப்பெருங்கருணை என்ற மந்திரத்தை உலகுக்களித்த வள்ளலார் 'அம்பலத்தரசே அருமருந்தே' போன்ற நாமாவளிகளைப் பலரும் சேர்ந்து ஒருங்கே பாடத்தக்க வகையிலும் யாத்துள்ளார்.

'தண்டனிட்டேன் என்று சொல்லடி, 'இது நல்ல தருணம்' போன்ற கீர்த்தனங்களை, தோடி, சப்பாணி, மோஹனம், உசேனி, பியாகடை, காபி, காம்போதி, நாத நாமக்ரியை, சிந்துபைரவி, ஆனந்தபைரவி, செஞ்சுருட்டி, புன்னுகவராளி போன்ற இராகங்களில் அமைத்துள்ளார்.

ஐம்பது ஆண்டுகட்கு முன்னர் வள்ளலாரின் கீர்த்தனங்களை கவிகுஞ்சர பாரதியாரின் பேரனுகிய கோடீஸ்வர அய்யரும், சி. ஆர். சீனுவாச அய்யங்காரும் சுரதாளக்குறிப்புடன் வெளியிட்டுள்ளார்கள். அதன் முன்னுரையில் இக்கீர்த்தனங்களுக்கு இசையமைப்பதில் சீர்காழி பிடில் நாராயணசாமிப்பிள்ளை உதவியதாகக் குறிப்பிட்டிருக்கிறர்கள். மேலும் சிதம்பரம் கிருஷ்ணய்யர் என்னும் மகாவித்வான் அருட்பாக்களை வள்ளலார் முன்னிலையிலேயே பாடி அவரது பாராட்டைப் பெற்றதாகவும் அறிகிறோம்.

கீர்த்தனங்களைத் தவிர நாட்டியத்திற்கேற்ற பதங்களையும் வள்ளலார் இயற்றியுள்ளார். எடுத்துக்காட்டாக பைரவியில் அமைந்துள்ள ஒரு பதத்தினைக் கீழே கொடுத்துள்ளேன்.

**இராகம்—பைரவி** **தாளம்—ரூபகம்**

பல்லவி

இவர்க்கும் எனக்கும்பெரு வழக்கிருக் கின்றதது
என்றும் தீரா வழக்குக் காணடி

அநு பல்லவி

எவர்க்கும் பெரியவர்பொன் னம்பலத் தேநடம்
இட்டா ரெனக்குமாலை இட்டாரிதோ வந்தார் (இ)

சரணம்

1. அன்றிதோ வருகின்றே னென்று போனவரங்கே
ஆர் செய்த தடையாலோ இருந்தாரென் கையிற்சங்கை
இன்று தங்கையிற் கொண்டே வந்துநிற் கின்றாரிங்கே
இந்தக் கதவைமூடு இவர்போவ தினியெங்கே (இ)

2. அவரவ ருலகத்தே அறிந்தலர் தூற்றப்பட்டேன்
அன்று போனவரின்று வந்துநிற்கின்றார் கெட்டேன்
இவர்சூதை யறியாதே முன்னம் ஏமாந்துவிட்டேன்
இந்தக் கதவைமூடு இனியெங்கும் போக வொட்டேன் (இ)

3. சின்ன வயதிலென்னைச் சேர்ந்தார் புன்னகையோடு
சென்றார் தயவாலின்று வந்தார் இவர்க்காரீடு
என்னைவிட் டினியிவர் எப்படிப் போவாரோடு
இந்தக் கதவைமூடு இரட்டைத்தாட் கோலைப்போடு (இ)

'கண்ணே கண்மணியே' போன்ற பாடல்களைப் பண்முறையிலும், 'நல்ல மருந்து இம்மருந்து' போன்ற பாடல்களை ஆனந்தக்களிப்பு என்ற இசையமைப்பிலும், அம்பலத்தில் ஆடுகின்றார் பாங்கிமாரே அவர் ஆட்டம் கண்டு நாட்டம் கொண்டேன் பாங்கிமாரே,' 'தன்னை அறிந்தின்பம் உற வெண்ணிலாவே ஒரு தந்திரம் நீ சொல்ல வேண்டும் வெண்ணிலாவே' போன்ற பாடல்களைக் கண்ணிகளாகவும், 'காம மகற்றிய தூயனடி சிவகாம சௌந்தரி நேயனடி' போன்ற பாடல்களைக் கும்மியாகவும் யாத்துள்ளார்.

'சூது மன்னும் இந்தையே சூடல் என்ன விந்தையே
கோது விண்ட சிந்தையே கோயில் கொண்ட தந்தையே

போன்ற பாடல்கள் இங்கிலீஷ் நோட்டு முறையிலும் அமைத்துள்ளார்.

இவ்வாறு பல்வேறு இசை வடிவங்களை யாத்து வழங்கியுள்ள வள்ளலாரின் இசைப் புலமையை எண்ணி எண்ணி இறும்பூது எய்துகிறோம். அவருடைய வாக்கிலேயே 'என்ன புண்ணியம் செய்தேனோ - அம்மா நான் என்ன புண்ணியம் செய்தேனோ, என்று கூறுவதன்றி வேறு என்ன கைமாறு செய்ய இயலும்.

# எண்ணாலும் எழுத்தாலும் ஏழின் எழில்

குங்கிலியம்

உலக மொழிகளில் உள்ள எழுத்துக்களைச் சிந்திக்கும் போது எழுத்தே எண்ணாக வழங்கும் ஒப்பற்ற தனிப்பெருமை தமிழ் மொழிக்குச் சிறப்பாக வுண்டு.

கீழ்க்கண்ட எழுத்துக்கள், எழுத்தாகவும் வரும். எண்ணாகவும் வரும்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| க | எழுத்து. | எண் | 1 | ஒன்றாகக்கருதப் பெறும். | | |
| உ | ,, | ,, | 2 | இரண்டாக | ,, | ,, |
| ரு | ,, | ,, | 5 | ஐந்தாக | ,, | ,, |
| எ | ,, | ,, | 7 | ஏழாக | ,, | ,, |
| அ | ,, | ,, | 8 | எட்டாக | ,, | ,, |
| ய | ,, | ,, | 10 | பத்தாக | ,, | ,, |
| இ | ,, | ,, | ½ | பாதி, அரை | ,, | ,, |

அரபு மொழி எழுத்துக்களுக்கு, எழுத்தின் எண் மதிப்புண்டு.

அதாவது. 'ஆ' என்ற எழுத்துக்கு எண்மதிப்பு -1 (ஒன்று)

,, 'லி.:ப்' என்ற எழுத்துக்கு எண் மதிப்பு. 30 (முப்பது) இவ்வாறு

அம்மொழி எழுத்துக்களுக்கு எண் மதிப்புத் தந்து நிற்கிறது ஒரு சிறப்பு.

தமிழ் மொழி அவ்வாறின்றி எழுத்தே எண்ணாக வழங்கப்பெறுகிறது. இந்நிலையில் மேற்கண்ட தமிழ் எழுத்துக்களை ஒன்றேயாகத் தனித்து எழுதினாலும் அது ஒவ்வொரு எண்ணைத்தருகிறது. இப்போது பெரும்பாலும் வழக்கொழிந்தாலும் பண்டைய நூல்களில் மேற்கண்ட எழுத்துகளே எணணிக்கைகளைச் சுட்டும்போதும் காணப்பெறுவது காணலாம். ''நூறு'' என்பதை ( 100 ) குறிக்க முன்பெல்லாம் ''ள'' இப்படி வழங்கியும் பின்னர் க00 (தமிழ் ஒன்றோடு இரண்டு பூஜ்யம் சேர்க்கப் பெற்றுமிருப்பதைக் காணமுடிகிறது. இந்த எழுத்துக்களைச் சேர்த்து எண் 15 குறிக்க எழுதினால் ''கரு'' இப்படி எழுத வேண்டும். இவ்வாறு எழுதும்போது இதை எழுத்தாக வாசித்தாலும் '' கருத் '' தரித்தது என்று சொல்லும்போதுள்ள, 'கரு' வையும் குறிக்கிறது, எண் 25 ஐ எழுத நேரில் 'உரு' என்று எழுத வேண்டும் இப்போது இந்த இரண்டெழுத்து வாசகம் 'வடிவம்' என்றபொருள் தரும் ''உரு'' ஆகிறது. இவ்வாறு எழுத்துக்கள் பிணையும் போதும் ஒரு சிறந்த பொருள்தரும் சொல்லாகவும் அமைகிறது. எனவே இந்த எழுத்துக்களை உற்று நோக்கும் போது எண் ஏழுக்குரிய எழுத்து ''எ'' ஆகிறது, இந்த ''எ'' எழுத்தை, இதன் ஆட்சியை உற்று நோக்கினால் விரிந்த பொருள்தருகிறது. சொல்லை எழுத்து வடிவமாக்கும் போதே முதல் எழுத்து ''எ'' வருகிறது, (எழுத்து வடிவம்) எனவே எழுதுதல் என்பதற்கு இந்த ஏழு (7) என்ற எண்ணைக்குறிக்கும் ''எ'' எழுத்தே முதல் நிற்க

வேண்டியதாகிறது. எழுதும் போதே முதற்றொடக்கமானுல் என்ணுக வரும்போது இந்த ஏழுக் குரிய சிறப்பு நோக்கிச் செல்கிறது அறிவு. அவ்வாறு எண்ணுகிய (7) இந்த ''எ'' (ஏழுக்கு) எண்ணுனது உலகையே ஆளும்பேராற்றல் எனத் தெரிகிறது

அப்படியென்ன இந்த ஏழாகிய எண் ?

வாரத்தின் நாட்கள் 7
மேகங்கள் 7
கடல்கள் 7
எழுநிலை-மாடம் 7
உலோகங்கள் 7
வருணங்கள் VIBGYOR என்ற 7
நோபல் பரிசு பெற்ற பெண்மணிகளில் அன்னை தெரெசா ஏழாவது பெண்மணி
பிறவி வகை 7
(நால்வகை யோனி, எழுவகைத் தோற்றம்)
(முவேழ் சுற்றம்) எவ்வேழு.
ஆதாரங்கள் ஆறுங்கடந்த நிலை 7 வது நிலை
கண்டங்கள் 7
வள்ளல்கள் 7
ரிஷிகள் (சப்தரிஷிகள்) 7
கன்னிகை (சப்தகன்னிகை) 7
பருவங்கள் 7

மேலே கூறியவாற்ருல் எண் 7 எந்தெந்த நிலையில் நம்மை ஊக்குகிறது, எவ்வாறு இதற்குள் கட்டுப்பட்டுள்ளோம் என்பதை விவரிக்க வேண்டுவதில்லை, 'எழுதல்' என்ற சொல்லில் உள்ள முதல் எழுத்து ''எ'' என்பதே மனிதனின் எழுச்சிக்கு முலமாயுள்ளது. எழுதல் என்பது இல்லாத போது எழுச்சியே இல்லை. எழுச்சியின்றேல் வாழ்வே இல்லை. எழுச்சி இயக்கத்தின் பாற்பட்டது, இவைகளை எல்லாம் கடந்து வள்ளற் பெருமான் சித்தி வளாகத்தில் கொடிகட்டிய மாதம் ஐப்பசி. இது ஏழாவது மாத மாகிறது. மாதம் ஏழு என்பதோடு மட்டு மல்லாது தேதியும் 7 ஆகிறது. எனவே இந்த ஏழு எண் மிகமிகத் தொடர்புடையதாகிறது. அருட்பாவைப் பொருத்த வரையில் இந்த ஏழு விரிக்கிற்பெருகும். இவையனைத்தையும் கடந்த 'ஏழு' ஒன்று சிறப்பாயிருக் கிறது. இயல் இசை நாடகம் என்ற முத்தமிழில் நடுவே உள்ள இசை இப்போது திரு வருட்பா இசைவளர்க்க திருவருட்பா இசைச்சங்கமெனவே தோன்றி வளருகிற நிலையில் இக்கட்டுரை தாங்கிய மலர் மலர்கிறது. சுரங்கள் 7 (ஏழு) இல்லாமல் இசையே இல்லை. வள்ளற்பெருமான் பலபல வண்ணங்களில் வெளிப்பட்டு ஒளி விடும் இந்நாளில் இசையினுல் ஏழு குரல்வகையாய் (சுரம்) வெளிப்படுவதில் எவ்வளவு ஆழ்ந்த உண்மைகள் வெளிப்படுகிற தென்பதைச் சிந்திப்போமாக. மேலே சொல்லப்பெற்ற ஏழுவகை அனைத்தையும் கடந்து வாயைத்திறந்தால் ஏழுவகை

குரல் வெளிப்படாமலிருக்க முடியுமா ? இசைவிக்க ( ஒன்றுவிக்க ) வருவது இசை. எதிலுமே இல்லை என்று சொல்ல முடியாத இறைவனை இசைவிப்பதே இசை.

''ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய் என்னுடைய தோழனு மாய்'' என்று ஆளுடைய நம்பிகள் பாடிய திருப்பாட்டை வள்ளற்பெருமான் அப்படியே ஏற்று ஒரு எழுத்துக்கூட மாற்றாமல் தலைப்பு வைத்து வள்ளற்பெருமான் பாடிமகிழ்வர் என்றால் இந்த ஏழாகிய ( சுர ) குரல் வகையில் நம் பெருமானாருக்குள்ள ஈடுபாட்டைத் தவறிவிடாது சிந்தித்து இசைச் சங்கத்தை ஊக்குவிப்போமாக! பெருமானிடத்தில் தம் வாழ்க்கையைக் காணிக்கையாக்கிய தவத்திருவாளர்கள், தியாகிகள், அருட்பாமணிகள் பெரியோர்கள் இதில் ஈடுபாடுகொண்டு வளர்ப்பது பெருமானின் தூண்டுதலே எனக் கொள்வதில் இம்மியும் தடையில்லை.

நிறைவாக—அருட்பாவின் தலையாய பகுதியான
அருட்பெருஞ்சோதி அகவலில் 1423; 24;

வரிகள் :

''யாழுறு மிசையே யினியவின் னிசையே
ஏழுறு மிசையே யியலரு ளிசையே''

என்று அகவுவதை நாமும் அகவி ஏழிசைவளர்த்து (இசைச் சங்கத்தை) பெருமானின் அருளுக்குப் பாத்திரமாவோமாக.

****

# திரு அருட்பா, கீர்த்தனைப் பகுதி

## பாலகிருஷ்ண பிள்ளை பதிப்பு, இரண்டாம் பதிப்பின் முன்னுரை

இசை என்பது ஓர் அற்புதமான விஷயம். அதை இன்னது என்று எல்லைப் படுத்துவது அருமை. ஆனால் நல்ல இசை இன்னது என்பதும் அல்லாத இசை இன்னது என்பதும் ஒருவாறு தெரிந்து கொள்வது அவ்வளவு அருமையன்று. நம் தமிழ் நாட்டில், இக்காலத்தில், நல்ல இசை குறைந்து அல்லாத இசை அதிகப்பட்டிருக்கிற தென்றே சொல்லலாம். அதற்குக் காரணம், இயற்கல்வியாளர் பெரும் பாலோர்க்கும் போதுமான இசை ஞானம் இல்லாதிருப்பதும், இசையாளர்களில். பெரும்பாலோர்க்கும் போதுமான இயற்றமிழ்க் கல்வி இல்லா திருப்பதுமே தான் தமிழிலுள்ள இன்னிசை உருப்படிகளை ஒரு வகுப்பினர் அபஸ்வரங்கள் மலியப் படிக்கிறார்கள்; மற்றொரு வகுப்பினர் எழுத்துப் பிழைகளும் சொற்பிழைகளும் மலியப் பாடுகிறார்கள், ஒரு வகுப்பினர் தமிழ் மிக இனிமையானதென்று சொல்லித் தமிழின் இன்னிசையை அனுபவிக்க அவாவும் இல்லாமலிருக்கிறார்கள்; மற்றொரு வகுப்பினர் இசைக்கும் தமிழுக்கும் வெகுதூரம் என்று சொல்லிப் பிற பாஷைகளிலுள்ள பாடல்களைப் பாடிச் சொற்குற்றம் பொருட்குற்றம் நேரிடுவதைப் பொருட் படுத்தாமலிருக்கிறார்கள்.

இந்த நிலைக்குக் காரண மென்னவென்றால், இசைக்கு இயல்பாகவே உள்ள பரந்த செல்வாக்கை இயற்கல்வியாளரும், இயலுக்கும் இசைக்குமுள்ள அந்யோந்யத்தை இசை வல்லார்களும் மறந்திருப்பதுதான்.

சிருஷ்டியில் அடங்கிய எல்லாப் பொருள்களையும் எல்லா உயிர்களையும் இசை தன் வசப்படுத்தி அவற்றின் சஞ்சலத்தை ஒழிக்கு மென்பதையும் இசையைச் செவி மடுத்தார்க்கு அது அமுத மெனச் சீரிய பயனளிக்கிறது என்பதையும் யோகிகளது தியான நிலையில் இசைமயமான நாதமே அநுபவப் படுகிறதென்பதையும் ஈசுவரனுக்கு உகந்த ஓர் ஆராதனையாக அது இருக்கிற தென்பதையும், ஈசுவரனது திருவடியின்பத்தைச் சம்பூர்ணமான வீணாகானத்தைச் சுட்டிப் பெரியோர்கள் விவரித்திருப்பதையும் ஈசுவரனையே இசைருபன் என்று மெய்யன்பர்கள் வழிபட்டிருப் பதையும் இசையின் இத்தன்மையவாய பிற சிறப்புக்களையும் இயற்கல்வியாளர் ஞாபகத்தில் பதியவைத்தல் வேண்டும்.

இயல் இசைகளுக்குள்ள நெருங்கிய சம்பந்தத்தைக் குறித்து, 'பல இயற் பாக்களுடனே நிறத்தை இசைத்தலால் இசையென்று பெயராம்' என்று அடியார்க்கு நல்லாரும் 'பருந்தோடு நிழல் சென்றன்ன இயலிசைப் பயன் துய்ப்பாரும்' என்று கம்பரும், இழுக்குடைய பாட்டிற்கு இசை நன்று' என்று ஔவையாரும், செய்யு ளோசை இசையோசை வழாமல்......பாடினார்' என்று பரஞ்சோதிமாமுனிவரும் நுட்பமாக சொல்லியிருக்கிறார்கள், இக்கருத்தே பிற தேசத்தாருக்கும் உடன்பா டென்பது 'இசையின் நுண்ணிய பொருள் உட்கருத்தையும் உணர்ச்சியையும் வெளிப்

படுத்தி அறிவித்தலேயாம்' என்று ஒரு ஜெர்மன் பேராசிரியர், கூறியிருப்பதிலிருந்து தெரிகிறது. இவ்வண்ணம், இயலின் உட்கருத்தைத் தனது சிறப்பானவகையில் அனுபவிக்க அல்லது அநுபவ பூர்வமாக விளக்க வந்த காரணத்தால், இயலினை அந்யோந்யமாய்ப் பற்றியே இசை விளங்குகிறது என்பதை இசையாளர்கள் ஞாபகத்தில் பதிய வைத்தல் வேண்டும்.

மேற்சொன்ன இரு பாகுபாடான உண்மைகளை, 'தென்னுவென் னுமுன்னம் தீசேர் மெழுகொப்பாய்' என்று அன்புருவமான ஆலாபனப்பயனை ஸ்ரீ மாணிக்க வாசக சுவாமிகளும்,

''வள்ளலார் வாசிக்கு மணித்துளைவாய் வேய்ங்குழலின்
உள்ளுறையஞ் செழுத்தாக ஒழுகியெழு மதுரவொலி
வெள்ளநிறைந் தெவ்வுயிர்க்கு மேலமரர் தருவிளைதேன்
தெள்ளமுதி னுடன்கலந்து செவிவார்ப்ப தெனத்தேக்க''

என்றும்,

''மெய்யன்பர் மனத்தன்பின் விளைத்தவிசைக் குழலோசை
வையந்தன் னையுநிறைத்து வானந்தன் வயமாக்கிப்
பொய்யன்புக் கெட்டாத பொற்பொதுவில் நடம்புரியும்
ஐயன்தன் திருச்செவியின் அருகணையப் பெருகியதால்.''

என்று பஞ்சாக்ஷர இசைப்பயனை ஸ்ரீசேக்கிழார் சுவாமிகளும்

''வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை
நான் கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே
தேன்கலந்து பால் கலந்து செழுங்கனித்தீஞ் சுவைகலந்தென்
ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே.''

என்று திருவாசகத்தைத் தாம் பாடுங்கால் உண்டான ஆன்மாநுபவத்தை ஸ்ரீ இராமலிங்க சுவாமிகளும் கூறியிருப்பதினின்றும் இன்னும் விளக்கமாகத் தெரிந்து கொள்ளலாம். ஆகையால், இவைபோன்ற இயலிசை நுட்பங்களை இயற்கல்வி மான்களும் இசையாளர்களும் மனத்தில் பதிய வைத்து, அவற்றிற்குத் தக ஒழுகினுல் நம் தமிழ் நாட்டில் வெற்றிசை மறைந்து, நல்ல இசை மறுபடியும் குடியேறி அதன் பெரும் பயனை நம் நாட்டினர்க்கு அடைவிக்கும் என்பதில் ஐயமில்லை.

பண்முறையில் பாடும் வழக்கம், பழைய இசையாளரது அஜாக்கிரதையால், இக்காலத்தில் இல்லை என்னும் படி அருகிப் போனமையின், தமிழில் உள்ள பரி பாடல்களையோ, வரிப்பாடல்களையோ, தேவார திருவாசக திருப்புகழ்களையோ அவை போன்ற பழைய பிற இன்னிசை உருக்களையோ அவை முன் இசைகொண்ட வகை தெரிந்து இப்போது பாடுவதற்கில்லை. திருப்புகழ் முதலிய சந்தப் பாடல்களில்

கண்ட தாள நுட்பங்களும் உணர்வாரற்று மறைவு பட்டுக் கொண்டிருக்கின்றன. இசை தாளங்களோடு அபிநயமுங் கொண்டு சம்பூர்ணமாய் விளங்கிய ஆடலும் அறிவாரற்று உரு'மாறி இழிவடைந்து இறக்குந் தருவாயிலிருக்கிறது.

எனினும், இசையும், பண்ணும், பாணியும், ஆளத்தியும், ஆடலும் முறையே ஸ்வரமும், இராகமும், தாளமும், ஆலாபனமும், நாட்டியமும் என வழங்கும். இந்நாளில் இப்புலமைகளில் வல்ல ஆராய்ச்சியாளர் இவ்விஷயங்களில் ஆர்வங்கொண்டு உழைத்தால், இப்பழைய இசை முதலியவற்றின் ஸ்வரூபங்கள் விளக்கமுறலாம். இவ் ஆராய்ச்சி ஒருபுறமிருக்க, மேற்சொன்ன - ஆயிரக்கணக்கில் உள்ள - பழைய இசை உருக்களுக்கு இக்காலத்தில் வழங்கும் இராக தாளங்களில் பொருத்தமானவற்றை ஆராய்ந்து அமைத்து, அவற்றின் உள்ளுறையோடு இசை நுட்பத்தையும் உணர்ந்து விளக்குவது இயற்கல்வியோடு கூடிய இசைப் புலவர்களுக்கு ஓர் அரிய காரியமன்று. இதுவும் போக, வழங்கும் இராக தாளங்களைப் பின்பற்றிப் பிற்காலத்து இசை ஆசிரியர்களால் தமிழில் ஏராளமாகச் செய்யப்பட்டிருக்கும் நாமாவளிகள், கண்ணிகள், சிந்துகள், ஆடற்பாடல்கள், கீதங்கள், பதங்கள், கீர்த்தனங்கள், கிருதிகள் முதலிய உருக்கள், தமிழ்நாட்டு இசைஞர்களாலும் இசைப் பிரியர்களாலும் புறக்கணிக்கப்பட்டு வருவது எல்லாவகையிலும் பிற்போக்கான ஓர் நிகழ்ச்சியேயாகும். இசை நலத்தையோ, பொதுநலத்தையோ, அல்லது ஸ்வாநுபவத்தையோ கோரும் இத்தமிழ்நாட்டுச் சங்கீதப் பிரமுகர்களும் தேசாபிமானிகளும் பக்தர்களும் சங்கற்பித்தால், இந்த விபரீதமான வழக்கம் ஒழிய நெடுநாளாகாது. சங்கீத வித்தையைப் பரிபாலிக்கச் சர்வகலா சாலையாரே முன் வந்திருக்கும் இக்காலமே இந்நய ஆராய்ச்சிகளுக்கும் சங்கற்பங்களுக்கும் எவ்வகையிலும் ஏற்ற காலமாகும்; இயற்கல்வியாளர் தெய்வத்தன்மை பொருந்திய இவ் இசைஞானம் பெறுவதற்கும் இதுவே நல்ல சமயம்; பிற பாஷைகளில் விளங்கும் இசை நுட்பங்களை நம் தாய்மொழியில் முடிந்தவரையில் பொருத்தம் பட அமைத்துத் தமிழின் இன்னிசையை வளர்ப்பதற்கும் இதுவே நல்ல சமயம்; கேள்வி முயலும் யாவரும் தமிழின் தனி இசையை உணர்ந்து பரவச் செய்வதற்கும் இதுவே நல்ல சமயம்.

மேற்சொன்ன பலதிறப்பட்ட பழைய உருக்களில் பொதிந்து கிடக்கும் இசை நுட்பங்களின் கதி இப்படியாக, அவற்றின் அரிய சொல் நுட்பமும் பொருள் நுட்பமும் இயல் அளவில் இன்றும் பெரிதும் போற்றப்பட்டு வருகின்றன. இப்படியே இக்காலத்தில் கீழ் நிலையில் உள்ள இசை உருக்களாகக் கருதப்படும் கண்ணிகள், சிந்துகள் முதலியவற்றிலும் - வெண்பார்த்தம், துறையார்த்தம், முதலியவற்றிலும் பழைய உரைப் பாட்டிலுமே கூட - இயல்அளவில் ஒருவகைச் சொல் நுட்பம் இருந்தே தீருவதுபோல, மேல் நிலையில் உள்ள இசை உருக்களாகக் கருதப்படும் கீர்த்தனைகள் கிருதிகள் முதலியவற்றிலும் மற்றொருவகைச் சொல் நுட்பத்தைக் காணலாம். ஆகவே, எல்லா உருக்களிலும் இசை நுட்பத்திற்கு அடிப்படையாக இருப்பது சொல் நுட்பம் எனத் தெரிகிறது. சொல்லிற்கு உயிரே பொருள். எனவே, சொல் நுட்பம் உள்ள விடத்தெல்லாம் பொருள் நுட்பமும் பெறப்படும். ஆதலால், எக்காலத்தும் பொருட் செறிவு இல்லாத உருக்களினின்றும் அரிய உணர்ச்சியும் இனிமையும் செறிந்த இசை பிறக்க முடியாதென்பது நிச்சயம்.

பொருளின் கூறுகிய கருத்தும் உணர்ச்சியும் பலதிறப்பட்டவையாயினும், புறத்தில் பரம ஜீவகாருண்ய ஒழுக்கத்தையும், அகத்தில் ஈசுவரானுபவத்தையும் அடிப் படையாகக் கொண்டு எழும் கருத்தும் உணர்ச்சியுமே முடிவான இன்பந் தரக் கூடியவை என்பதை நம் நாட்டில் சிறு பிள்ளைகள் கூட அறிவார்கள். ஆகையால்,

"ஓ மனமே! பக்தியில்லாத சங்கீத ஞானத்தினால்
நற்கதி உண்டாகுமா?"

என்று ஸ்ரீ ராம பக்த சிரேஷ்டரான ஸ்ரீ தியாகராஜசுவாமிகளும்,

"அம்பலப் பாட்டே அருட்பாட்டு
அல்லாத பாட்டெல்லாம் மருட்பாட்டு"

என்று ஸ்ரீ நடராஜ ஸ்வருபத்தில் முழுகித் திளைக்கும் ஸ்ரீ இராமலிங்க சுவாமிகளும் சொல்வதில் சங்கீதத்தில் வல்லவர்கள் ஆச்சரியப்படத் தக்கது ஒன்றுமில்லை.

எக்காலத்திலும், ஜீவகாருண்ய ஒழுக்கத்திலும் ஈசுவரானுபவத்திலும் இயல் இசைப் புலமைகளிலும் ஒருங்கே வல்ல பெரியோர்கள் சிலர் இருந்தே வருகிறார்கள் ஸ்ரீ இராமலிங்க சுவாமிகளும் ஜீவகாருண்ய ஒழுக்கத்திலும் ஈசுவரானுபவத்திலும் இயற்புலமையிலும் போலவே இசையிலும் சிறப்புற்று விளங்கினார்கள் என்பது இப் பகுதியிலடங்கிய நாமாவளி முதல் கீர்த்தனை வரையில் உள்ள ஆயிரத்துக்கு மேற்பட்ட பாடல்களைப் பார்ப்பவர்க்குத் தெரியாமற் போகாது. சீர்காழி ஸ்ரீ நாராயணசாமி பிள்ளை அவர்கள் பிடில் வாசிப்பதில் மஹோன்னத நிலையை அடைந்து அந்தப் பிறநாட்டு இசைக் கருவியை இந்நாட்டில் பரவச் செய்தவர்களில் ஒருவராவார். அவர்கள் பலகால் வடலூர் சென்று சுவாமிகளைத் தெரிசித்து அங்கே அப்போதப்போது சிற்சில காலம் வசித்து வந்தார்கள் என்றும், சுவாமிகளிடத்திலிருந்தே சங்கீத வித்தையின் நுட்பங் களை அவர்கள் கற்றுக்கொண்டார்கள் என்றும்; பலதடவை சுவாமிகள் பாட அவர்கள் பிடில் வாசித்து மகிழ்ந்தார்கள் என்றும்; சுவாமிகளுக்கு ஒப்புயர்வற்ற கின்னரஸ்வரம் என்றும் தாம் கண்ட மற்றைய பாடல்களில் சிறந்தவை மனமுருக்கும் தன்மையனவாக சுவாமிகளின் பாடல்கள் மனத்தை உருக்குவதோடு நில்லாது எலும்பையும் உருக்கும் தன்மையன என்றும் சொல்லி ஆனந்தமடைவார்கள் என்றும் அவர்களே நேரே சொல லக்கேட்ட கீர்த்தனுசாரியர் ஸ்ரீ (C.R.) ஸ்ரீநிவாசய்யங்கார் அவர்கள் (பி. ஏ. எல். டி.) சொல்ல எனக்குத் தெரிந்தது. மாயவரம் முன்சீபு ஸ்ரீ வேதநாயகம் பிள்ளை அவர்கள் தமது ஆசிரியராகிய மகாவித்வான் ஸ்ரீ வி. மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களோடு வடலூர் சென்று, சுவாமிகள் முன்பாகத் தாம் இயற்றிய 'சர்வ சமய சமரசக் கீர்த்தனைகளை' அரங்கேற்றிக் கொண்டு வந்தார்கள் என்று கர்ணபரம்பரைக்

கேள்வியாலும், ஸ்ரீ (K. V.) ஸ்ரீநிவாசய்யங்கார் அவர்கள் தமது 'சங்கீத சில்லரைக் கோவை' யில் எழுதியிருப்பதாலும் தெரியவருகிறது. மேலும் சிதம்பரம் கிருஷ்ணய்யர் முதலிய சங்கீத வித்துவான்கள் பலப்பலர் சுவாமிகளிடம் சென்று பாடி அவர்களால் பாராட்டப்படுவதை பெரிதாகக் கொண்டாடினார்கள் என்றும்; சுவாமிகள் வந்த வித்துவான்கள் பாடுவதைக் கேட்பதோடு, ஓரோர் சமயம் தாமும் வந்த வித்துவான் களின் வேண்டுகோட்கிணங்கி, அவர்கள் வித்யாகர்வம் கெட்டு, வியந்து தம்மை மறந்து கண்ணீரும் கம்பலையுமாக ஆகும்படி திருவாசகத்தினின்றே அல்லது தம்முள் எழுந்த பாடலினின்றே இரண்டொரு சொற்களைக் கொண்டே ஈசுவரானுபவத்தை விளக்கும் இசையை அனுபவ பூர்வமாக உபதேசிப்பார்கள் என்றும் கர்ணபரம்பரைக் கேள்வியாலும், ஸ்ரீ ச. மு. கந்தசாமி பிள்ளை அவர்களது சரித் திரக் குறிப்பாலும் தெரிகிறது.

எனக்குத் தெரிந்த வரையில் சங்கீத வித்துவான்களில் ஸ்ரீ ச.மு. கந்தசாமி பிள்ளை அவர்கள் ஒருவரே தமது ஆயுட்கால முழுவதையும் சுவாமிகளது திருப்பாடல்களைப் பாடிப் பயன்படுத்திக் கொண்டவராவர். அவர்கள் அவற்றை உணர்வோடு பாடுவதைக் கேட்போரில் பலர் செயலற்றுப் பதுமை போல் 'இருப்பர். பிள்ளை அவர்களை ஒரு வாறு பின்பற்றி இப்போது பாடி அன்பர்களை இன்புறச் செய்பவர்கள் சுவாமிமலை ஸ்ரீ ஸ்ரீநிவாச பிள்ளை உள்ளிட்ட இரண்டொரு சங்கீத வித்வான்களேயாவர். மயிலாப்பூரில் இயற்றமிழ் இசைத்தமிழ்ப் புலவரும் சிறந்த ஈசுவர பக்தருமான ஸ்ரீ (N.) கோடீசுவர ஐயரவர்கள் (பி. ஏ.) தாம் சுவாமிகளது பாடல்களை உணர்ச்சியோடு பாடுவதைக் கேட்டு, ஹைகோர்ட் ஜட்ஜ் ஸ்ரீ (Dr, Sir. S.) சுப்பிரமணிய ஐயரவர்கள், எக்ஸிக்யுடிவ் கௌன்சில் மெம்பர் ஸ்ரீ வி.கிருஷ்ணசாமி ஐயரவர்கள் முதலிய மகாமேதாவிகள் கண்ணீ ரும் கம்பலையுமாக அவற்றை அனுபவிப்பார்கள் என்று அவர்களே சொல்ல எனக்குத் தெரிந்தது. சுவாமிகளது பாடல்களில் பெரும்பாலன எல்லாச் சாதியரும் எல்லாச் சமயத்தாரும் எல்லா மதத்தாரும், கற்றவரோடு கல்லாதவருமே கூட ஒரு வகையில் அறிந்து போற்றும் பொதுத் தன்மை வாய்ந்தனவாக இருத்தலால் அவற்றைத் தாம் சங்கீதம் கற்பித்த கலாசாலைகளில் மாணவர்களுக்குக் கற்பித்தார்கள் என்றும்; அவை பாடவேண்டிய முறையில் இப்போது சங்கீத வித்வான்களால் பாடப்படுவதில்லை யென்றும் கீர்த்தனுச்சாரியர் ஸ்ரீ (C. R.) ஸ்ரீநிவாசய்யங்கார் அவர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். அவர்களது இந்த மனக்குறையை நீக்க, இந்நாளைய சங்கீத வித் வான்களில் பெரும் புகழ் எய்தி நிற்கும் ஸ்ரீ முசிரி சுப்பிரமணிய ஐயரவர்கள் முன் வந்திருக்கிறார்கள் என்று தெரியப் பெருமகிழ்ச்சி உண்டாகிறது. அவர்களைப் போன்ற மற்ற சங்கீத வித்வான்களும் சுவாமிகளின் அழகிய எளிய பாடல்களில் உள்ளும் புறத் தும் நிறைந்து பொங்கித் ததும்பும் பரம ஜீவகாருண்ய ஒழுக்கத்தையும் ஈசுவரானு பவத்தையும் தங்கள் தங்களுக்குக் கைவந்த சங்கீத வித்தையின் மூலம் தாம் தாம் உணர்ந்த வழி பிறரும் உணர்ந்துய்ய விளக்குவார்களாக.

இப்பகுதியின் முதற் பதிப்புப் பிரதிகளெல்லாம் அவை வெளிவந்த இரண்டொரு மாதத்திற்குள் செலவாய்ப்போனாலும் இப்பகுதியையும், இதற்குப்பின் வெளிவந்த மற்ற ஐந்து பகுதிகளைப் போல், கிடைக்கக்கூடிய எல்லா மூல ஆதாரங்களையும் ஆராய்ந்து

குறிப்புகளோடு வெளியிட வேண்டும் என்று தீர்மானித்ததால், இவ்விரண்டாம் பதிப்பு வெளிவர இத்தனை நாளாயிற்று. நான் முதலில் எண்ணியதற்கு மேலான சிறப்புக்களோடு இப்பதிப்பு விளங்குவதற்கு, உரியகாரணங்கள் இரண்டாகும். முதலாவது இவ் இசை நூலைக் குறித்த இரண்டொரு ஐயங்களைத் தீர்த்துக்கொள்ள நான் ஸ்ரீ (C. R.) ஸ்ரீநிவாசய்யங்கார் அவர்களிடம் போனபோது, அவர்கள், இத்திருப்பாடல்களை ஸ்வரப்படுத்தி அச்சிட்டால், அது சங்கீத வித்தையைப் பயிலும் பெரும்பாலார்க்கும் பயன் தரும் என்றுசொல்லி, ஸ்வரப்படுத்துவதில் நிபுணத்வம் வாய்ந்த தமது நண்பராகிய ஸ்ரீ (N.) கோடிஸ்வர ஐயரவர்களால் பெரும்பாலானவற்றிற்கு செய்வித்தும், எஞ்சிய வற்றைத் தாமே செய்தும் முடித்துக் கொடுத்தார்கள். ஸ்ரீ (N.) கோடிசுவர ஐயரவர்கள் ஸ்வரப்படுத்திய போது உடனிருந்து உதவியவரும், இயற்கல்வியோடு கூடிய இசைப் புலமையில் சக்கரவர்த்திகள் எனத்திகழும் இவ்விரு பேராசிரியர்கள் ஸ்வரப்படுத்திய தில் தவறு நுழையாதபடி, அச்சுக் காகிதங்களைச் சலிப்பில்லாமல் பார்த்துக் கொடுத்தவரும் எனது அருமை நண்பர் அட்வகேட் ஸ்ரீ (N.) இராமகிருஷ்ணய்யர் (எம்.ஏ., பி.எல்) அவர்கள் ஆவர். இம் முவரும் இங்ஙனம் செய்த இவ் இன் இசைத் திருத்தொண்டு சிறந்த வழிகாட்டியாக இருந்து, இசைப் புலமையில் சிறந்த மற்றைய அன்பர்களில் சிலரை யாவது இதில் ஊக்கங் கொண்டு உழைத்துப் பயன் தரும்படி செய்யும் என்பதில் சந்தேகமில்லை. மேற்சொன்ன மூவரும் இந்த விஷயத்தை தாம் தாம் எடுத்த சற்காரியம் போல் செய்து முடித்ததால், அதற்காக நான் அவர்களுக்கு நன்றி கூறுதலாவது அல்லது அவர்களைப் புகழ்தலாவது, அவர்களுக்கும் எனக்கும் இந்நூல் காரணமாக ஏற்பட்ட அந்யோந்ய நேயத்தின் பெருமையைக் குறைத்து, அதைப் புல்லியதாகக் காட்டும் என அஞ்ச வேண்டியிருக்கிறது.

இரண்டாவது காரணம்: முதல் ஆறுபகுதிகளை அடக்க விலைப் பதிப்பாக அச்சிட்டதில் நான் அடைந்த பொருள் நஷ்டத்தாலும் பிரதிநஷ்டத்தாலும் சினேக நஷ்டத்தாலும் சோர்வடைந்து நான் கொண்ட விரதம் எப்படி முடியப்போகிறது என்று திருவருளை இரவும் பகலும் நாடிக் கலங்கிக் கொண்டிருந்த போது, "மலங்கினேன் கண்ணினீரை மாற்றி மலங்கெடுத்த பெருந்துறை" என்றவாறு திருவருளின் துணைமை தோன்றி விளங்க உலக விவகாரங்களில் தேர்ச்சியடைந்ததோடு ஆன்மார்த்தங்களில் ஆழ்ந்த பற்றுடையவரும் எனது இளம்போதிய கலாசாலை நண்பருமான ஓர் அன்பர் நான் ஆராய்ந்து முடித்த இப்பகுதிகளைப் பொருள் நஷ்டமுண்டாகாத எல்லையில் அடக்க விலைப் பதிப்பாகவே வெளியிடுவதற்கு வேண்டிய ஓர் ஏற்பாட்டினைச் செய்து கொடுத்தார்கள். இங்ஙனம் அவர்கள் ஆடை இழந்தவன் கை போல் எனக்கு உதவி செய்ய முன்வந்ததால் நான் இது வரையில் செய்ய முடியாது வருந்தி விட்டிருந்த

வற்றில் சில்வற்றோடு கூடி இப்பதிப்பு வெளிவருகிறது. சுவாமிகளின் திருஉருவமும், அவர்கள் கை எழுத்தும், அவர்கள் கையெழுத்தில் உள்ளவாறே இரண்டு திருப்பாடல்களும் ஞானசபையின் உருவமும் இதில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. சுவாமிகள் திருக்காப்பிட்டுக் கொண்ட 60-வது ஆண்டில் இவை இங்ஙனம் வெளிவருவது அவர்களது திருக்குறிப்பு போலும்.

இவை நிற்க. இப்பகுதியை ஆராய்வதற்கு இன்றியமையாதனவாகிய ஆதாரங்களின் விவரமும், இதை அச்சிடுவதில் எனக்கு மனப்பூர்வமாய்த் துணை நின்று உதவிய இரண்டொரு ஆன்ம நேயர்களின் விவரமும் இவ் அடக்க விலைப் பதிப்பின் வரலாற்றில் குறிக்கப்படும் இவர்களுக்கு எனது வணக்கத்தையும் நன்றியறிதலையும் அன்பையும் இப்போது இங்கு தெரிவித்துக் கொள்கிறேன்.

சுபம்! சுபம்!! சுபம்!!

சென்னை. ஆ, பாலகிருஷ்ணன்

# திருஅருட்பா, பாலகிருஷ்ணபிள்ளை பதிப்பு

## கீர்த்தனைப் பகுதியின் பொருளடக்கம்

திருஅருட்பாவின் சிறந்த ஆராய்ச்சிப் பதிப்பாசிரியராகிய ஆ. பாலகிருஷ்ண பிள்ளை அவர்கள், திருஅருட்பா இசைப்பாடல்களை எவ்வாறு வகை தொகைப் படுத்தியிருக்கிருர் என்பதை அறிவதற்காக, அவருடைய பதிப்பு, கீர்த்தனைப் பகுதியின் பொருளடக்கத்தின் ஒரு பகுதி இங்கே தரப்பெறுகிறது.

---

| பிரிவு | எண் | உட்பிரிவு | பாடல்தொகை |
|---|---|---|---|
| **1** | **நாமாவளிகள்** | | **221** |
| | 1-52 | ''சிவசிவ''........''அம்பலவர்'' | 220 |
| | 53 | அருட்சோதி | 1 |
| **2** | **கண்ணிகள்** | | **144** |
| | 1 | பாங்கிமார் கண்ணி | 27 |
| | 2 | வெண்ணிலாக் கண்ணி | 23 |
| | 3 | முறையீட்டுக் கண்ணி | 69 |
| | 4 | திருவடிக் கண்ணி | 11 |
| | 5 | பேரன்புக் கண்ணி | 14 |
| **3** | **ஆடற் பாடல்கள்** | | **81** |
| | 1 | சிலதா ஸம்வாதம் | 6 |
| | 2 | விஞ உத்தரம் | 3 |
| | 3 | நடேசர் கொம்மி | 7 |
| | 4 | சண்முகர் கொம்மி | 15 |
| | 5 | பந்தாடல் | 12 |
| | 6 | திருஉந்தியார் | 10 |
| | 7 | உபதேச விஞ | 11 |
| | 8 | நெஞ்சொடு நேர்தல் | 10 |
| | 9 | மங்களம் | 7 |
| **4** | **வருகைப் பாடல்கள்** | | **141** |
| | 1 | சண்முகர் வருகை | 12 |
| | 2 | அம்பலவாணர் வருகை | 105 |
| | 3 | அம்பலவாணர் ஆட வருகை | 12 |
| | 4 | அம்பலவாணர் அணைய வருகை | 12 |

(இராக ஆலாபனம் உட்பட கீர்த்தனைப் பகுதியில் அடங்கிய பாடல்களின் தொகை 1040)

# திருஅருட்பா, இசைப் பாடல்கள்

## ஊரன் அடிகள் பதிப்பில் உள்ளபடி

| பதிக எண் | பதிகத்தின் பெயர் | பாடல் தொகை |
|---|---|---|
| | **முதல் திருமுறை :** | |
| 50 | சண்முகர் கொம்மி | 15 |
| 51 | சண்முகர் வருகை | 12 |
| | **மூன்றாம் திருமுறை :** | |
| 9 | நல்ல மருந்து | 30 |
| 27 | மங்களம் | 7 |
| | **நான்காம் திருமுறை :** | |
| 26 | பாங்கிமார் கண்ணி | 27 |
| 27 | வெண்ணிலாக் கண்ணி | 23 |
| 28 | முறையிட்டுக் கண்ணி | 69 |
| 29 | திருவடிக் கண்ணி | 11 |
| 30 | பேரன்புக் கண்ணி | 14 |
| 31 | நடேசர் கொம்மி | 7 |
| 32 | தோழியர் உரையாடல் | 6 |
| 33 | தெண்டனிட்டேன் | 9 |
| 34 | இன்னந் தயவு வரவிலையா | 7 |
| 35 | வினாவிடை | 3 |
| | **ஆறாம் திருமுறை :** | |
| 62 | சிவபதி விளக்கம் | 10 |
| 63 | ஞானோபதேசம் | 10 |
| 64 | ஆரமுதப் பேறு | 13 |
| 65 | உபதேச வினா | 11 |
| 66 | நெஞ்சொடு நேர்தல் | 10 |
| 67 | அஞ்சாதே நெஞ்சே | 23 |
| 68 | ஆடிய பாதம் | 17 |
| 69 | அபயம் அபயம் | 16 |
| 70 | அம்பலவாணர் வருகை | 105 |
| 71 | அம்பலவாணர் ஆடவருகை | 12 |
| 72 | அம்பலவாணர் அணையவருகை | 12 |
| 73 | வருவார் அழைத்துவாடி | 5 |
| 74 | என்ன புண்ணியம் செய்தேனோ | 8 |
| 75 | இவர்க்கும் எனக்கும் | 5 |
| 76 | இது நல்ல தருணம் | 6 |
| 77 | ஆனந்தப் பரிவு | 12 |
| 78 | ஞான மருந்து | 34 |
| 79 | சிவசிவ ஜோதி | 33 |
| 80 | ஜோதியுள் ஜோதி | 30 |
| 107 | திருஉந்தியார் | 10 |
| 108 | அருள் அற்புதம் | 9 |
| 109 | ஆணிப்பொன்னம்பலக்காட்சி | 33 |
| 110 | அருட்காட்சி | 4 |
| 111 | பந்தாடல் | 12 |
| 112 | மெய்யருள் வியப்பு | 101 |
| 113 | அம்பலத்தரசே | 90 |
| 114 | சம்போ சங்கர | 22 |
| 115 | சிவபோகம் | 40 |
| 116 | அம்பலத்தமுதே | 8 |
| 117 | திருநடமணியே | 15 |
| 118 | ஞானசபாபதியே | 10 |
| 119 | விரைசேர் சடையாய் | 4 |
| 120 | ஜோதி ஜோதி | 3 |
| 121 | கண்புருவப் பூட்டு | 11 |
| 122 | ஊதூது சங்கே | 16 |
| 123 | சின்னம்பிடி | 10 |
| 124 | முரசறைதல் | 1 |

ஆகப்பதிகங்கள் 51 ஆகப்பாடல்கள் 1011

# திருஅருட்பா, இசைப்பாடல்கள்

## சிறுகுறிப்பு முறையில் எழுதப்பெறும் சிற்றாராய்ச்சி.

ஊரன் அடிகள்

## 1. கொம்மி

திரு அருட்பா இசைப்பாடல்களுள் கொம்மிகள் இரண்டு.

1. சண்முகர் கொம்மி.
2. நடேசர் கொம்மி.

சண்முகர் கொம்மியும் சண்முகர் வருகையும் இசைப்பாடல்களுள் முதன் முதலாகப் பாடப்பெற்றவை. பாடப்பெற்ற காலம் பெருமான் சென்னையில் வசித்த காலம். கந்த கோட்ட வழிபாட்டுக் காலம்.

நடேசர் கொம்மி பாடப்பெற்ற காலம் கருங்குழியில் வதிந்த காலம். சிதம்பர வழிபாட்டுக்காலம்.

நடேசர் கொம்மி (பழைய) இரண்டாம் திருமுறையில் இடம் பெற்றுள்ளது. சண்முகர் கொம்மியும் சண்முகர் வருகையும் (பழைய) ஐந்தாம் திருமுறையில் சேரற்குரியன. ஆனால் அவ்வாறு சேரவில்லை. ஆறும் திருமுறை முதற்பதிப்பிலும் சேரவில்லை. பொன்னேரி சுந்தரம் பிள்ளை பதிப்பித்த ஆறு திருமுறைகளும் சேர்ந்த முதற்பதிப்பில் (1892) தான் சண்முகர் கொம்மியும் சண்முகர் வருகையும் முதன் முதலாக அச்சாகின்றன. ஆறுந் திருமுறையின் ஈற்றில் பல்வகைய தனிப்பாடல்கள் என்ற தலைப்பின் கீழ் இவற்றைப் பொன்னேரி சுந்தரம் பிள்ளை சேர்க்கிறார். அடுத்து வரும் பிருங்கிமாநகரம் இராமசாமி முதலியார், தம் பதிப்பில் (1896) இவற்றை ஐந்தாம் திருமுறையின் கடைசி இரு பதிகங்களாகச் சேர்க்கிறார். அது முதல் இவை ஐந்தாம் திருமுறைப் பதிகங்களாகின்றன. வரலாற்று முறையில் திருமுறைகளைப் புதிதாக வகுத்துப் பதிப்பித்துள்ள நம் பதிப்பில் சண்முகர் கொம்மியும் சண்முகர் வருகையும் முதல் திருமுறையில் இடம் பெறுகின்றன; நடேசர் கொம்மி நான்காம் திருமுறையில் இடம்பெறுகிறது.

சண்முகர் கொம்மியில் பல்லவி, அனுபல்லவி இல்லை. எல்லாம் சரணங்களே. 15 சரணங்கள். நடேசர் கொம்மிக்குப் பல்லவி அனுபல்லவி உண்டு. சரணங்கள் 5. 'பல்லவி', 'அனுபல்லவி', 'சரணங்கள்' என்ற குறிப்பு தொழுவூர் வேலாயுத முதலியாரின் முதல் நான்கு திருமுறை முதற்பதிப்பிலேயே (1867) அச்சிடப்பெற்றுள்ளது. பழம் பதிப்புகளில் இரண்டு கும்மிகளுக்குமே இராக தாளக் குறிப்புகள் இல்லை. சென்னை சன்மார்க்க சங்கப்பதிப்பில் இரண்டுக்குமே ஆனந்த பைரவி, ஆதி தாளம் என்ற குறிப்பு உள்ளது. பாலகிருஷ்ண பிள்ளை பதிப்பில் சண்முகர் கொம்மிக்கு ஆனந்த பைரவி, ஆதி தாளம்; நடேசர் கொம்மிக்கு உசேனி, மிச்ரசாபு என்று குறிக்கப்பட்டுள்ளது. சண்முகர் கொம்மியில் 'கொம்மி' என்ற சொல்லாட்சியே இல்லை. 'அடியுங்கடி', என்கிறாரே தவிர 'கொம்மி' என்ற சொல்லே வரவில்லை. ஆனால் நடேசர் கொம்மியிலோ 'கொம்மி' என்ற சொல் பல்லவியில் மூன்று முறையும் அனுபல்லவியில் இரண்டு முறையும் இடம் பெறுகிறது.

'கொம்மி' 'கும்மி என்னும் இருவகை வழக்கும் இலக்கிய உலகில் உள்ளன. 'கொம்மி' பழைய வழக்கென்றும் 'கும்மி 'புதிய வழக்கென்றும் கூறலாம். 'கொம்' என்னும் வேர்ச்சொல் லடியாகப் பிறந்தது கொம்மி. கொச்சை மொழி எனக்கருதி அதைக் கும்மியாக்குகிருர்கள் போலும். வள்ளலார்க்கு முன்னும் பின்னுமான காலத்தில் எழுந்த கும்மிகள் பல. சமயம் சமூகம் வரலாறு முதலிய பலவகைக்கும்மிகள் உண்டு. சமய உலகில் பக்திக்கும்மி பஜனைக்கும்மிகள் மட்டுமின்றி வேதாந்தக்கும்மி ஞானக் கும்மிகளும் உண்டு.

கொம்மியும், கோலாட்டமும்,சிறுமியர் விளையாட்டு. 'கொம்மியடிப் பெண்கள் கொம்மியடி – இருகொங்கை குலுங்கவே கொம்மியடி' என்பது நடேசர் கொம்மியின் பல்லவி. கொங்கை குலுங்கவே கொம்மியடி என்பதால் கொங்கைகள் அரும்பப் பெற்ற பெண்களும் கொம்மியடிக்கலாம் என்று தெரிகிறது. கொம்மியடித்தற்கு வயது சிற்றிற்பருவம் முதல் திருமணப்பருவம் வரை போலும். கொம்மியும் கோலாட்டமும் இந்நாளில் அருகிவருகின்றன. பரதநாட்டியம் பெருகிவருகிறது. பாமரர் உலகில் கொம்மி, கோலாட்டம். படித்தவர் உலகில் பரத நாட்டியம். இது இன்றைய நிலை. பரதநாட்டியத்திற்குரிய நெளிவு சுழிவுகள் நளினமான அம்சங்கள் பல கொம்மியடிப் பதிலும் உண்டு. வள்ளலார் கொம்மிப்பாடல்கள் மட்டும் பாடினுரா? பரதநாட்டியத்திற் கேற்கவும் பல பாடல்கள் பாடியிருக்கிருர், 'தெண்டனிட்டேனென்று சொல்லடி' 'வருவாரழைத்து வாடி' 'இவர்க்கும் எனக்கும் பெருவழக்கிருக்கின்றது' முதலிய பாடல்கள் பரத நாட்டிய மாடுதற்கேற்றவை. நெய்வேலி எஞ்சினீர் இராஜேந்திரன் அவர்களின் திருமகளும் ஈரோடு டாக்டர் இராஜமாணிக்கம் அவர்களின் செல்விகளும், திரு அருட்பா கீர்த்தனங்களுக்கும் பரதநாட்டியமாடப் பழகியுள்ளனர். வடலூரில் அரங்கேற்றமும் ஆகிவிட்டது. அனைவரது பாராட்டையும் பெற்றனர். எஞ்சினீர் டாக்டர் போன்று எல்லாரும் தம் குழந்தைகளுக்குப் பரதநாட்டியம் பயிற்ற இயலா விடினும் கொம்மி கோலாட்டமாவது பயிற்றுவிக்கலாகாதா? சன்மார்க்கக் குடும்பங்களிலெல்லாம் சிறுமியர்களிடம் பெண்களிடம் சண்முகர் கொம்மியும் நடேசர் கொம்மியும் கீர்த்தனங்களும் முழங்கவேண்டும். வரும் ஆண்டுகளில் திருஅருட்பா இசைவிழாவில் பரதநாட்டியத்தோடு கொம்மியும் இடம்பெற வேண்டும்.

## 2. கண்ணிகள்

பூமாலையில் ஓர் உறுப்பு, கண்ணி. அதுபோலப் பாமாலையிலும் ஓர் உறுப்பு கண்ணி. பல கண்ணிகளால் தொடுப்பது பூமாலை. பல கண்ணிகளால் தொடுப்பது பாமாலை. தாயுமானவர் பாடிய பராபரக்கண்ணி, பைங்கிளிக்கண்ணி, எந்நாட்கண்ணி முதலியவை புகழ் பெற்றவை. கண்ணிகளில் கிளிக்கண்ணி பேர் பெற்றது. அது 'கிளியே' என்று கிளியை விளித்துப் பாடுவது. கிளிக்கண்ணி மெட்டு என்று ஒரு வகை இசையே அமைந்துவிட்டது.

வள்ளலாரும் ஐந்து கண்ணிகள் பாடியிருக்கிருர். பெருமான் பாடிய கண்ணிகள் பல எனினும் இவ்வைந்து கண்ணிகள் 'கண்ணிகள்' என்றே தலைப்புப் பெயர் பெற்றவை.

1. பாங்கிமார் கண்ணி.
2. வெண்ணிலாக் கண்ணி.
3. முறையீட்டுக் கண்ணி.
4. திருவடிக் கண்ணி.
5. பேரன்புக் கண்ணி.

முதல் இரண்டும் (பழைய) இரண்டாம் திருமுறையில் உள்ளவை. பின்னைய மூன்று ஆறும் திருமுறையின்பாற் பட்டவை.

## 1. பாங்கிமார் கண்ணி

அம்பலத்தில் ஆடுகின்றார் பாங்கிமாரே - அவர்
ஆட்டங் கண்டு நாட்டங் கொண்டேன் பாங்கிமாரே

இப்படி 27 கண்ணிகள். ஒவ்வொன்றிலும் 'பாங்கிமாரே' என்ற விளி இருமுறை வருகிறது.

## 2. வெண்ணிலாக் கண்ணி

தன்னையறிந் தின்பமுற வெண்ணிலாவே - ஒரு
தந்திர நீ சொல்லவேண்டும் வெண்ணிலா வே

இப்படி 23 கண்ணிகள். ஒவ்வொன்றிலும் 'வெண்ணிலாவே' என்றவிளி இரு முறைவந்தது.

## 3. முறையீட்டுக் கண்ணி

பற்று நினைத்தெழுமிப் பாவிமனத் தீமையெலாம்
உற்று நினைக்கிலெனக் கூடுருவிப் போகுதடா. 1

| | | |
|---|---|---|
| ஊடுருவிப் போகுதடா | என்று | 10 |
| உள்ளம் உருகுதடா | என்று | 10 |
| அஞ்சுங் கலங்குதடா | என்று | 15 |
| வாளிட்டறுக்குதடா | என்று | 16 |
| நாடி நடுங்குதடா | என்று | 8 |
| தாது கலங்குதடா | என்று | 4 |
| என்னை விழுங்குதடா | என்று | 2 |
| பகீரென்றலைக்குதடா | என்று | 1 |
| திடுக்கிட் டழுங்குதடா | என்று | 1 |
| பயமாயிருக்குதடா | என்று | 1 |
| வெந்து வெதும்புதடா | என்று | 1 |

ஆக 69 கண்ணிகள். முறையிடுவதால், முறையீட்டுக் கண்ணி. ஆறுந்திருமுறை முதற் பதிப்பிலும் பொன்னேரி சுந்தரம் பிள்ளை பதிப்பிலும் திருவருள் முறையீட்டுக் கண்ணி என்பது பெயர்.

பிருங்கிமாநகரம் இராமசாமி முதலியார் பதிப்பில் 'திருப்புலம்பல்.' ச.மு.க. பதிப்பில் திருவருள் முறையீட்டுக் கண்ணிபுலம்பல் கண்ணி என்ற இரண்டுபெயருமே உள்ளன. புலம்பல் என்பது பொருத்தமானதே.

**4. திருவடிக் கண்ணி**

மின்னிடையாள் காண விளங்குமன்றி லாடுகின்றாய்
என்னுடையாய் உன்றன் இணையடிதான் நோவாதா

இப்படி 11 கண்ணிகள். எல்லாப் பதிப்புகளிலும் திருவடிக்கண்ணி என்றே பெயர். ச.மு.க பதிப்பில் மட்டும் 'நடனக் காட்சி' என்றிருப்பது பொருந்தாது.

**5. பேரன்புக் கண்ணி**

கற்றதென்றுஞ் சாகாத கல்வியென்று கண்டுகொண்டுன்
அற்புதச் சிற்றம் பலத்தி லன்பு வைத்தேன் ஐயாவே

இவ்வாறு 14 கண்ணிகள். அன்பை எடுத்துரைப்பதால் இப்பெயர் பெற்றது.

# 3. பண்கள்

இவ்வகையில் 3 பதிகங்கள் இடம் பெறும். இம்மூன்றும் ஆறுந்திருமுறையைச் சேர்ந்தவை.

1. சிவபதி விளக்கம்
2. ஞானோபதேசம்
3. ஆரமுதப்பேறு

**1. சிவபதி விளக்கம்**

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் 10 பாடல்கள். முதலிரண்டு பாடல்கள் கீழ்வருவன :

உரைவளர் கலையே கலைவளர் உரையே உரைகலை வளர்தரு பொருளே
விரைவளர் மலரே மலர்வளர் விரையே விரைமலர் வளர்தரு நறவே
கரைவளர் தருவே தருவளர் கரையே கரைதரு வளர்கிளர் கனியே
பரைவளர் ஒளியே ஒளிவளர் பரையே பரையொளி வளர்சிவ பதியே 1

ளிவளர் உயிரே உயிர்வளர் ஒளியே ஒளியுயிர் வளர்தரும் உணர்வே
வெளிவளர் நிறைவே நிறைவளர் வெளியே வெளிநிறை வளர்தரு விளைவே
வளிவளர் அசைவே அசைவளர் வளியே வளியசை வளர்தரு செயலே
அளிவளர் அனலே அனல்வளர் அளியே அளியனல் வளர்சிவ பதியே. 2

பாடல்தோறும் 'சிவ பதியே' என்பது மகுடம். பழம் பதிப்புகளிலும் சென்னை பதிப்பிலும் 'பதி விளக்கம்' என்பது பதிகப் பெயர், ஆ. பா. மட்டும் வளர்பதி விளக்கம் எனக் கொள்கிறார். 'வளர் சிவ பதியே' என்று இருக்கும்போது சிவத்தை விட்டு விட்டு வளர்பதி விளக்கம் எனக் கொள்வது பொருந்துமாறில்லை. நம் பதிப்பில் 'சிவபதி விளக்கம்' எனக் கொண்டோம். பதிவிளக்கம், வளர்பதிவிளக்கம் என்பனவற்றிலும் சிவபதிவிளக்கம் என்பதே பொருத்தம் என்பது தெளிவு. வளர்சிவபதி விளக்கம் எனக் கொள்வோமெனின் அ..தும் பொருந்தாது. 'பதி' எனலாம். 'சிவபதி' எனலாம். 'வளர்பதி' எனலும் 'வளர் சிவபதி' எனலும் இலக்கிய இலக்கண சாத்திரங்களுக்கு முரண். இங்கு 'வளர்' என்பது சிவத்தைச் சேராது. முன்னுள்ள சொல்லைச் சேரும். பரையொளிவளர், அளியனல் வளர் என்று சேரும். ஆதலின் பதிகப் பெயர் சிவபதி விளக்கம் என்றே கொள்க.

இப்பதிகப் பாடல்கள் பத்திலும் ஒவ்வோரடியிலும் எடுத்தசொல்லே, மாறியும் மடக்கியும் வருவது ஓர் அழகு.

உரை, கலை
உரை வளர் கலை. இதை மாற்றினால்
கலை வளர் உரை. இரண்டையும் (உரை, கலை இரண்டையும்) சேர்த்தால்.
உரை கலை வளர்

விரை, மலர்
விரை வளர் மலர். இதை மாற்றினால்
மலர் வளர் விரை. இரண்டையும் சேர்த்தால்
விரை மலர் வளர்

ஒளி, உயிர்
ஒளி வளர் உயிர். இதை மாற்றினால்
உயிர் வளர் ஒளி. இரண்டையும் சேர்த்தால்
ஒளி உயிர் வளர்

இவ்வாறு எல்லாப்பாடல்களுக்கும் கண்டு கொள்க. இப்பாடல்கள் சிலப்பதிகாரம் கானல்வரியில் ''பொழில் தரு நறு மலரே'' முதலிய வரிப்பாடல்களை ஒத்திருக்கின்றன என ஆ. பா. கூறுவது பொருத்தமே. ''பொழில்தரு நறுமலரே'' முதலிய மூன்று கானல்வரிப்பாடல்களைக் கீழே கொடுக்கிறோம். அன்பர்கள் ஒப்பிட்டுப் பார்ப்பார்களாக

பொழில் தருநறு மலரே, புதுமணம் விரிமணலே,
பழுதறு திருமொழியே, பணை இளவன முலையே,
முழுமதி புரைமுகமே, முரிபுருவில் இணையே,
எழுதரு மின்னிடையே - எனையிடர் செய்தவையே.

திரைவிரிதரு துறையே, திருமணல் விரியிடமே,
விரை விரி நறுமலரே மிடைதரு பொழிலிடமே,
மருவிரி புரிகுழலே, மதிபுரை திருமுகமே,
இருகய லிணைவிழியே, எனையிடர் செய்தவையே.

வளை வளர் தரு துறையே, மணம் விரிதரு பொழிலே,
தளை அவிழ் நறு மலரே, தனியவள் திரிஇடமே,
முலை வளர் இள நகையே, முழுமதி புரை முகமே,
இளையவள் இணை முலையே, எனையிடர் செய்தவையே.

—சிலப்பதிகாரம், கானல் வரி, (முகவரி) 14; 15; 16

இச்சிலப்பதிகாரக் கானல்வரிப் பாடல்களோடு வள்ளற்பெருமானின் சிவபதிவிளக்கப் பாடல்களை ஒத்துணர்க.

## 2. ஞானோபதேசம்

10 பாடல்கள். முதற்பாடலும் 10 ஆம் பாடலும் வருமாறு :

கண்ணே கண்மணி யே - கருத் - தே கருத் தின்கனி வே
விண்ணே விண்ணிறை வே - சிவ - மேதனி மெய்ப்பொரு ளே
தண்ணேர் ஒண்மதி யே - எலைத் - தந்த தயாநிதி யே
உண்ணேர் உள்ளொளி யே - எனக் குண்மை உரைத்தரு ளே. 1

நந்நா லுங்கடந்தே - ஒளிர் - ஞானச பாபதி யே
பொன்னு ருஞ்சபை யாய் - அருட் - பூரண புண்ணிய னே
என்னால் ஆவதொன் றும் - உனக் - கில்லையெ னினுமெந் தாய்
உன்னால் வாழுகின் றேன் - எனக் - குண்மை உரைத்த ருளே. 10

## 3. ஆரமுதப்பேறு

13 பாடல்கள். முதற்பாடல் வருமாறு :

விரைசேர் பொன்மல ரே - அதில் - மேவிய செந்தே னே
கரைசேர் முக்கனி யே - கனி - யிற்சுவை யின்பய னே
பரைசேர் உள்ளொளி யே - பெரும் - பற்றம்ப லநடஞ் செய்
அரைசே தந்தனை யே - அரு ளாரமு - தந்தனை யே. 1

ஞானோபதேசம் பத்துப் பாடல்களிலும் 'எனக் குண்மை உரைத்தருளே' என்பது மகுடம். பழம்பதிப்புகளில் உபதேச உண்மை என்பது பதிகப் பெயர். ஆ.பா. பதிப்பில் ஞானோபதேசம். நாமும் அதனையே கொண்டோம்.

ஆரமுதப்பேறு 13 பாடல்களிலும் 'தந்தனையே அருளாரமுதந் தனையே 'என்பது மகுடம். பழம் பதிப்புகளில் இதற்குத் தனித் தலைப்பு இல்லை. முன்பதிகத் தலைப்பாகிய திருவருட்பெருமையையே இதற்கும் கொண்டு 'இதுவுமது' என்று குறித்தனர். சென்னை சன்மார்க்க சங்கப் பதிப்பில் இராசமாணிக்கம் பிள்ளை திருவருட்பெருமை-2 என்றார். தந்தனையே அருளாரமுதந் தனையே' என்பதைப் பாடல் தோறும் மகுடமாகக் கொண்ட இப் பதிகத்திற்கு'ஆரமுதப்பேறு' என்னும் பொருத்தமான பெயரைச் சூட்டினார் ஆ. பா. அதனையே நாமும் கொண்டோம்.

ஆறுந்திருமுறை முதற் பதிப்பில் 'ஞானோபதேசம்' 'ஆரமுதப்பேறு' இவ்விரு பதிகங்களுக்குமே 'பண்-நட்டராகம்' என்று அவ்வவற்றின் தலைப்பிற் குறிப்பிடப் பெற்றுள்ளது. பின் பதிப்புகளும் அதையே பின்பற்றின. ஆ. பா. மட்டும் ஞானோப தேசத்திற்கு நீலாம்பரி, ரூபகம் என்றும் ஆரமுதப்பேறுக்கு சங்கராபரணம், ரூபகம் என்றும் இராக தாளங் குறிக்கிறார்.

நட்டராகம் பழைமையான பண். அதில் வள்ளலார் இருபதிகங்களைப் பாடியுள்ளார். இக்காலத்தில் இசையை இராகம் என வழங்குகிறோம். முற்காலத்தில் பண் என்றே வழங்கினர். தேவாரம் முழுவதும் பண்களே. 'பண்ணால் உன் அருட்புகழைப் பாடுகின்றார்' என்று கூறும் வள்ளலார், தாமும் பண்ணால் அவன் அருட்புகழைப் பாடுகின்றார். சன்மார்க்க உலகம் பண் பாடி மகிழ்க.

# 4. வருகை

வருகைப் பாடல்கள் 4

1. சண்முகர் வருகை
2. அம்பலவாணர் வருகை
3. அம்பலவாணர் ஆட வருகை
4. அம்பலவாணர் அணைய வருகை

சண்முகர் வருகை (பழைய) ஐந்தாம் திருமுறையைச் சேர்ந்தது. நம் பதிப்பில் முதல் திருமுறை. ஏனைய மூன்று வருகைகளும் ஆறாந் திருமுறையைச் சேர்ந்தவை.

சண்முகர் வருகை, எல்லாமே சரணங்கள். பல்லவி அனுபல்லவி இல்லை. அம்பலவாணர் வருகை, ஆட வருகை, அணைய வருகை, இம்மூன்றிற்கும் பல்லவி உண்டு. அனுபல்லவி இல்லை. சரணங்கள் முறையே, 104; 11; 11;

**1. சண்முகர் வருகை**

வாரும் வாரும் தெய்வ வடிவேல் முருகரே
வள்ளி மணாளரே வாரும்
புள்ளி மயிலோரே வாரும் 1

சங்கம்ஒலித்தது தாழ்கடல் விம்மிற்று
சண்முக நாதரே வாரும்
உண்மை விநோதரே வாரும் 2

பொழுது விடிந்தது பொற்கோழி கூவிற்று
பொன்னுன வேலரே வாரும்
மின்னூர் முந்நூலரே வாரும் 3

இப்படிப் 12 கண்ணிகள். 'சங்கம் ஒலித்தது', 'பொழுது விடிந்தது பொற்கோழி கூவிற்று,' 'காகம் கரைந்தது காலையும் ஆயிற்று,' 'செங்கதிர் தோன்றிற்று,' அருணன் உதித்தனன்,' 'சூரியன் தோன்றினன்,' 'சேவல் ஒலித்தது' எனக் காலை நேர நிகழ்ச்சிகள் இதனுட் கூறப்பெறுவதால் இது காலைப்பாட்டாயிற்று. பழம் பதிப்புகளில் இதற்குச் சண்முகர் காலைப்பட்டு என்றே பெயர். சென்னை சங்கப் பதிப்பிலும் அப்படியே. ஆ. பா. பதிப்பில் இதனை ஐந்தாம் திருமுறையிலும் சேர்த்திருக்கிறார்' கீர்த்தனைப் பகுதியிலும் சேர்த்திருககிறார். ஐந்தாம் திருமுறையில் சண்முகர் காலைப் பாட்டு என்ற பெயரையே கொண்டிருக்கிறார், கீர்த்தனைப் பகுதியில் சண்முகர் வருகை என்ற புதிய பெயரைச் சூட்டுகிறார். இரண்டுமே பொருத்தம் என்றாலும் வாரும் வாரும் என்று தொடங்குவதாலும் கண்ணிகள் தோறும் வாரும் வாரும் என்று அழைப்பதாலும் வருகை என்பதே மிகப்பொருத்தம். மேலும் அம்பலவாணர் வருகை, ஆடவருகை, அணையவருகை என்பனவற்றை நோக்க, இதற்குச் சண்முகர் வருகை என்பதே மிகப் பொருத்தம் என்பது தெளிவு.

பழம் பதிப்புகளில் இராக தாளக் குறிப்புகள் இல்லை. சென்னை சங்கப் பதிப்பில் காபி—சாபு என்று இராக தாளக் குறிப்புகள் காணப்படுகின்றன. ஆ. பா. ஐந்தாம் திருமுறையில் இதற்குக் காபி—சாபு என்றே இராக தாளங் குறிக்கிறார். ஆனால் கீர்த்தனைப்பகுதியில் ஷூரடி—சாபு என்று இராகத்தை மட்டும் மாற்றியிருக்கிறார்.

## 2. அம்பலவாணர் வருகை

வாரீர் சிதம்பர வல்லி சிவகாம
வல்லி மணாளரே வாரீர்
மணிமன்ற வாணரே வாரீர்

இது பல்லவி.

அருட்பெரும் ஜோதிஎன் ஆண்டவ ரேதிரு
அம்பல வாணரே வாரீர்
அன்புடை யாளரே வாரீர்

இப்படி 104 சரணங்கள் (கண்ணிகள்)

# திருஅருட்பா, இசைப்பாடல்கள்

## சிறுகுறிப்பு முறையில் எழுதப்பெறும் சிற்றுராய்ச்சி.

ஊரன் அடிகள்

## 1. கொம்மி

திரு அருட்பா இசைப்பாடல்களுள் கொம்மிகள் இரண்டு.

1. சண்முகர் கொம்மி.
2. நடேசர் கொம்மி.

சண்முகர் கொம்மியும் சண்முகர் வருகையும் இசைப்பாடல்களுள் முதன் முதலாகப் பாடப்பெற்றவை. பாடப்பெற்ற காலம் பெருமான் சென்னையில் வசித்த காலம். கந்த கோட்ட வழிபாட்டுக் காலம்.

நடேசர் கொம்மி பாடப்பெற்ற காலம் கருங்குழியில் வதிந்த காலம். சிதம்பர வழிபாட்டுக்காலம்.

நடசேர் கொம்மி (பழைய) இரண்டாம் திருமுறையில் இடம் பெற்றுள்ளது, சண்முகர் கொம்மியும் சண்முகர் வருகையும் (பழைய) ஐந்தாம் திருமுறையில் சேரற் குரியன. ஆனுல் அவ்வாறு சேரவில்லை. ஆரும் திருமுறை முதற்பதிப்பிலும் சேர வில்லை. பொன்னேரி சுந்தரம் பிள்ளை பதிப்பித்த ஆறு திருமுறைகளும் சேர்ந்த முதற் பதிப்பில் (1892) தான் சண்முகர் கொம்மியும் சண்முகர் வருகையும் முதன் முதலாக அச்சாகின்றன. ஆரும் திருமுறையின் ஈற்றில் பல்வகைய தனிப்பாடல்கள் என்ற தலைப்பின் கீழ் இவற்றைப் பொன்னேரி சுந்தரம் பிள்ளை சேர்க்கிருர். அடுத்து வரும் பிருங்கிமாநகரம் இராமசாமி முதலியார், தம் பதிப்பில் (1896) இவற்றை ஐந்தாம் திருமுறையின் கடைசி இரு பதிகங்களாகச் சேர்க்கிருர். அது முதல் இவை ஐந்தாம் திருமுறைப் பதிகங்களாகின்றன. வரலாற்று முறையில் திருமுறைகளைப் புதிதாக வகுத்துப் பதிப்பித்துள்ள நம் பதிப்பில் சண்முகர் கொம்மியும் சண்முகர் வருகையும் முதல் திருமுறையில் இடம் பெறுகின்றன; நடேசர் கொம்மி நான்காம் திருமுறை யில் இடம்பெறுகிறது.

சண்முகர் கொம்மியில் பல்லவி, அனுபல்லவி இல்லை. எல்லாம் சரணங்களே. 15 சரணங்கள். நடேசர் கொம்மிக்குப் பல்லவி அனுபல்லவி உண்டு. சரணங்கள் 5. 'பல்லவி', 'அனுபல்லவி', 'சரணங்கள்' என்ற குறிப்பு தொழுவூர் வேலாயுத முதலியாரின் முதல் நான்கு திருமுறை முதற்பதிப்பிலேயே (1867) அச்சிடப்பெற்றுள் ளது. பழம் பதிப்புகளில் இரண்டு கும்மிகளுக்குமே இராக தாளக் குறிப்புகள் இல்லை. சென்னை சன்மார்க்க சங்கப்பதிப்பில் இரண்டுக்குமே ஆனந்த பைரவி, ஆதி தாளம் என்ற குறிப்பு உள்ளது. பாலகிருஷ்ண பிள்ளை பதிப்பில் சண்முகர் கொம் மிக்கு ஆனந்த பைரவி, ஆதி தாளம்; நடேசர் கொம்மிக்கு உசேனி, மிச்ரசாபு என்று குறிக்கப்பட்டுள்ளது. சண்முகர் கொம்மியில் 'கொம்மி' என்ற சொல்லாட்சியே இல்லை. 'அடியுங்கடி', என்கிருரே தவிர 'கொம்மி' என்ற சொல்லே வரவில்லை. ஆனுல் நடேசர் கொம்மியிலோ 'கொம்மி' என்ற சொல் பல்லவியில் மூன்று முறையும் அனுபல்லவியில் இரண்டு முறையும் இடம் பெறுகிறது.

'கொம்மி' 'கும்மி என்னும் இருவகை வழக்கும் இலக்கிய உலகில் உள்ளன. 'கொம்மி' பழைய வழக்கென்றும் 'கும்மி 'புதிய வழக்கென்றும் கூறலாம். 'கொம்' என்னும் வேர்ச்சொல் லடியாகப் பிறந்தது கொம்மி. கொச்சை மொழி எனக்கருதி அதைக் கும்மியாக்குகிறார்கள் போலும். வள்ளலார்க்கு முன்னும் பின்னுமான காலத்தில் எழுந்த கும்மிகள் பல. சமயம் சமூகம் வரலாறு முதலிய பலவகைக்கும்மிகள் உண்டு. சமய உலகில் பக்திக்கும்மி பஜனைக்கும்மிகள் மட்டுமின்றி வேதாந்தக்கும்மி ஞானக் கும்மிகளும் உண்டு.

கொம்மியும், கோலாட்டமும், சிறுமியர் விளையாட்டு. 'கொம்மியடிப் பெண்கள் கொம்மியடி - இருகொங்கை குலுங்கவே கொம்மியடி' என்பது நடேசர் கொம்மியின் பல்லவி. கொங்கை குலுங்கவே கொம்மியடி என்பதால் கொங்கைகள் அரும்பப் பெற்ற பெண்களும் கொம்மியடிக்கலாம் என்று தெரிகிறது. கொம்மியடித்தற்கு வயது சிற்றிற்பருவம் முதல் திருமணப்பருவம் வரை போலும். கொம்மியும் கோலாட்டமும் இந்நாளில் அருகிவருகின்றன. பரதநாட்டியம் பெருகிவருகிறது. பாமரர் உலகில் கொம்மி, கோலாட்டம். படித்தவர் உலகில் பரத நாட்டியம். இது இன்றைய நிலை. பரதநாட்டியத்திற்குரிய நெளிவு சுழிவுகள் நளினமான அம்சங்கள் பல கொம்மியடிப் பதிலும் உண்டு. வள்ளலார் கொம்மிப்பாடல்கள் மட்டும் பாடினாரா? பரதநாட்டியத்திற் கேற்கவும் பல பாடல்கள் பாடியிருக்கிறார், 'தெண்டனிட்டேனென்று சொல்லடி' 'வருவாரழைத்து வாடி' 'இவர்க்கும் எனக்கும் பெருவழக்கிருக்கின்றது' முதலிய பாடல்கள் பரத நாட்டிய மாடுதற்கேற்றவை. நெய்வேலி எஞ்சினீர் இராஜேந்திரன் அவர்களின் திருமகளும் ஈரோடு டாக்டர் இராஜமாணிக்கம் அவர்களின் செல்விகளும், திரு அருட்பா கீர்த்தனங்களுக்கும் பரதநாட்டியமாடப் பழகியுள்ளனர். வடலூரில் அரங்கேற்றமும் ஆகிவிட்டது. அனைவரது பாராட்டையும் பெற்றனர். எஞ்சினீர் டாக்டர் போன்று எல்லாரும் தம் குழந்தைகளுக்குப் பரதநாட்டியம் பயிற்ற இயலா விடினும் கொம்மி கோலாட்டமாவது பயிற்றுவிக்கலாகாதா? சன்மார்க்கக் குடும்பங்களிலெல்லாம் சிறுமியர்களிடம் பெண்களிடம் சண்முகர் கொம்மியும் நடேசர் கொம்மியும் கீர்த்தனங்களும் முழங்கவேண்டும். வரும் ஆண்டுகளில் திருஅருட்பா இசைவிழாவில் பரதநாட்டியத்தோடு கொம்மியும் இடம்பெற வேண்டும்.

## 2. கண்ணிகள்

பூமாலையில் ஓர் உறுப்பு, கண்ணி. அதுபோலப் பாமாலையிலும் ஓர் உறுப்பு கண்ணி. பல கண்ணிகளால் தொடுப்பது பூமாலை. பல கண்ணிகளால் தொடுப்பது பாமாலை. தாயுமானவர் பாடிய பராபரக்கண்ணி, பைங்கிளிக்கண்ணி, எந்நாட்கண்ணி முதலியவை புகழ் பெற்றவை. கண்ணிகளில் கிளிக்கண்ணி பேர் பெற்றது. அது 'கிளியே' என்று கிளியை விளித்துப் பாடுவது. கிளிக்கண்ணி மெட்டு என்று ஒரு வகை இசையே அமைந்துவிட்டது.

வள்ளலாரும் ஐந்து கண்ணிகள் பாடியிருக்கிறார். பெருமான் பாடிய கண்ணிகள் பல எனினும் இவ்வைந்து கண்ணிகள் 'கண்ணிகள்' என்றே தலைப்புப் பெயர் பெற்றவை.

1. பாங்கிமார் கண்ணி.
2. வெண்ணிலாக் கண்ணி.
3. முறையீட்டுக் கண்ணி.
4. திருவடிக் கண்ணி.
5. பேரன்புக் கண்ணி.

முதல் இரண்டும் (பழைய) இரண்டாம் திருமுறையில் உள்ளவை. பின்னைய மூன்று - ஆறும் திருமுறையின்பாற் பட்டவை.

## 1. பாங்கிமார் கண்ணி

அம்பலத்தில் ஆடுகின்றார் பாங்கிமாரே - அவர்
ஆட்டங் கண்டு நாட்டங் கொண்டேன் பாங்கிமாரே

இப்படி 27 கண்ணிகள். ஒவ்வொன்றிலும் 'பாங்கிமாரே' என்ற விளி இருமுறை வருகிறது.

## 2. வெண்ணிலாக் கண்ணி

தன்னையறிந் தின்பமுற வெண்ணிலாவே - ஒரு
தந்திர நீ சொல்லவேண்டும் வெண்ணிலா வே

இப்படி 23 கண்ணிகள். ஒவ்வொன்றிலும் 'வெண்ணிலாவே' என்றவிளி இரு முறைவந்தது.

## 3. முறையீட்டுக் கண்ணி

பற்று நினைத்தெழுமிப் பாவிமனத் தீமையெலாம்
உற்று நினைக்கிலெனக் கூடுருவிப் போகுதடா. 1

| | | |
|---|---|---|
| ஊடுருவிப் போகுதடா | என்று | 10 |
| உள்ளம் உருகுதடா | என்று | 10 |
| அஞ்சுங் கலங்குதடா | என்று | 15 |
| வாளிட்டறுக்குதடா | என்று | 16 |
| நாடி நடுங்குதடா | என்று | 8 |
| தாது கலங்குதடா | என்று | 4 |
| என்னை விழுங்குதடா | என்று | 2 |
| பகீரென்றலைக்குதடா | என்று | 1 |
| திடுக்கிட் டழுங்குதடா | என்று | 1 |
| பயமாயிருக்குதடா | என்று | 1 |
| வெந்து வெதும்புதடா | என்று | 1 |

ஆக 69 கண்ணிகள். முறையிடுவதால் முறையீட்டுக் கண்ணி. ஆறுந்திருமுறை முதற் பதிப்பிலும் பொன்னேரி சுந்தரம் பிள்ளை பதிப்பிலும் திருவருள் முறையீட்டுக் கண்ணி என்பது பெயர்.

பிருங்கிமாநகரம் இராமசாமி முதலியார் பதிப்பில் 'திருப்புலம்பல்.' ச.மு.க பதிப்பில் திருவருள் முறையீட்டுக் கண்ணிபுலம்பல் கண்ணி என்ற இரண்டுபெயருமே உள்ளன. புலம்பல் என்பது பொருத்தமானதே.

**4. திருவடிக் கண்ணி**

மின்னிடையாள் காண விளங்குமன்றி லாடுகின்றாய்
என்னுடையாய் உன்றன் இணையடிதான் நோவாதா

இப்படி 11 கண்ணிகள். எல்லாப் பதிப்புகளிலும் திருவடிக்கண்ணி என்றே பெயர். ச.மு.க பதிப்பில் மட்டும் 'நடனக் காட்சி' என்றிருப்பது பொருந்தாது.

**5. பேரன்புக் கண்ணி**

கற்றதென்றுஞ் சாகாத கல்வியென்று கண்டுகொண்டுன்
அற்புதச் சிற்றம் பலத்தி லன்பு வைத்தேன் ஐயாவே

இவ்வாறு 14 கண்ணிகள். அன்பை எடுத்துரைப்பதால் இப்பெயர் பெற்றது.

# 3. பண்கள்

இவ்வகையில் 3 பதிகங்கள் இடம் பெறும். இம்மூன்றும் ஆறுந்திருமுறையைச் சேர்ந்தவை.

1. சிவபதி விளக்கம்
2. ஞானோபதேசம்
3. ஆரமுதப்பேறு.

**1. சிவபதி விளக்கம்**

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் 10 பாடல்கள். முதலிரண்டு பாடல்கள் கீழ்வருவன :

உரைவளர் கலையே கலைவளர் உரையே உரைகலை வளர்தரு பொருளே
விரைவளர் மலரே மலர்வளர் விரையே விரைமலர் வளர்தரு நறவே
கரைவளர் தருவே தருவளர் கரையே கரைதரு வளர்கிளர் கனியே
பரைவளர் ஒளியே ஒளிவளர் பரையே பரையொளி வளர்சிவ பதியே 1

ளிவளர் உயிரே உயிர்வளர் ஒளியே ஒளியுயிர் வளர்தரும் உணர்வே
வெளிவளர் நிறைவே நிறைவளர் வெளியே வெளிநிறை வளர்தரு விளைவே
வளிவளர் அசைவே அசைவளர் வளியே வளியசை வளர்தரு செயலே
அளிவளர் அனலே அனல்வளர் அளியே அளியனல் வளர்சிவ பதியே. 2

பாடல்தோறும் 'சிவ பதியே' என்பது மகுடம். பழம் பதிப்புகளிலும் சென்னை பதிப்பிலும் 'பதி விளக்கம்' என்பது பதிகப் பெயர். ஆ.பா. மட்டும் வளர்பதி விளக்கம் எனக் கொள்கிறார். 'வளர் சிவ பதியே' என்று இருக்கும்போது சிவத்தை விட்டு விட்டு வளர்பதி விளக்கம் எனக் கொள்வது பொருந்துமாறில்லை. நம் பதிப்பில் 'சிவபதி விளக்கம்' எனக் கொண்டோம். பதிவிளக்கம், வளர்பதிவிளக்கம் என்பனவற்றிலும் சிவபதிவிளக்கம் என்பதே பொருத்தம் என்பது தெளிவு. வளர்சிவபதி விளக்கம் எனக் கொள்வோமெனின் அஃதும் பொருந்தாது. 'பதி' எனலாம். 'சிவபதி' எனலாம். 'வளர்பதி' எனலும் 'வளர் சிவபதி' எனலும் இலக்கிய இலக்கண சாத்திரங்களுக்கு முரண். இங்கு 'வளர்' என்பது சிவத்தைச் சேராது. முன்னுள்ள சொல்லைச் சேரும். பரையொளிவளர், அளியனல் வளர் என்று சேரும். ஆதலின் பதிகப் பெயர் சிவபதி விளக்கம் என்றே கொள்க.

இப்பதிகப் பாடல்கள் பத்திலும் ஒவ்வோரடியிலும் எடுத்தசொல்லே, மாறியும் மடக்கியும் வருவது ஓர் அழகு.

உரை, கலை
உரை வளர் கலை. இதை மாற்றினால்
கலை வளர் உரை. இரண்டையும் (உரை, கலை இரண்டையும்) சேர்த்தால்
உரை கலை வளர்

விரை, மலர்
விரை வளர் மலர். இதை மாற்றினால்
மலர் வளர் விரை. இரண்டையும் சேர்த்தால்
விரை மலர் வளர்

ஒளி, உயிர்
ஒளி வளர் உயிர். இதை மாற்றினால்
உயிர் வளர் ஒளி. இரண்டையும் சேர்த்தால்
ஒளி உயிர் வளர்

இவ்வாறு எல்லாப்பாடல்களுக்கும் கண்டு கொள்க. இப்பாடல்கள் சிலப்பதிகாரம் கானல்வரியில் ''பொழில் தரு நறு மலரே'' முதலிய வரிப்பாடல்களை ஒத்திருக்கின்றன என ஆ. பா. கூறுவது பொருத்தமே. ''பொழில்தரு நறுமலரே'' முதலிய மூன்று கானல்வரிப்பாடல்களைக் கீழே கொடுக்கிறோம். அன்பர்கள் ஒப்பிட்டுப் பார்ப்பார்களாக

பொழில் தருநறு மலரே, புதுமணம் விரிமணலே,
பழுதறு திருமொழியே, பணை இளவன முலையே,
முழுமதி புரைமுகமே, முரிபுருவில் இணையே,
எழுதரு மின்னிடையே - எனையிடர் செய்தவையே.

திரைவிரிதரு துறையே, திருமணல் விரியிடமே,
விரை விரி நறுமலரே மிடைதரு பொழிலிடமே,
மருவிரி புரிகுழலே, மதிபுரை திருமுகமே,
இருகய லிணைவிழியே, எனையிடர் செய்தவையே.

வளை வளர் தரு துறையே, மணம் விரிதரு பொழிலே,
தளை அவிழ் நறு மலரே, தனியவள் திரிஇடமே,
முளை வளர் இள நகையே, முழுமதி புரை முகமே,
இளையவள் இணை முலையே, எனையிடர் செய்தவையே.

—சிலப்பதிகாரம், கானல் வரி, (முகவரி) 14; 15; 16

இச்சிலப்பதிகாரக் கானல்வரிப் பாடல்களோடு வள்ளற்பெருமானின் சிவபதிவிளக்கப் பாடல்களை ஒத்துணர்க.

## 2. ஞானோபதேசம்

10 பாடல்கள். முதற்பாடலும் 10 ஆம் பாடலும் வருமாறு :

கண்ணே கண்மணி யே - கருத் - தே கருத் தின்கனி வே
விண்ணே விண்ணிறை வே - சிவ - மேதனி மெய்ப்பொரு ளே
தண்ணேர் ஒண்மதி யே - எனைத் - தந்த தயாநிதி யே
உண்ணேர் உள்ளொளி யே - எனக் குண்மை உரைத்தரு ளே. 1

நந்நா லுங்கடந்தே - ஒளிர் - ஞானச பாபதி யே
பொன்னு ருஞ்சபை யாய் - அருட் - பூரண புண்ணிய னே
என்னால் ஆவதொன் றும் - உனக் - கில்லையெ னினுமெந் தாய்
உன்னால் வாழுகின் றேன் - எனக் - குண்மை உரைத்த ருளே. 10

## 3. ஆரமுதப்பேறு

13 பாடல்கள். முதற்பாடல் வருமாறு :

விரைசேர் பொன்மல ரே - அதில் - மேவிய செந்தே னே
கரைசேர் முக்கனி யே - கனி - யிற்சுவை யின்பய னே
பரைசேர் உள்ளொளி யே - பெரும் - பற்றம்ப லநடஞ் செய்
அரைசே தந்தனை யே - அரு ளாரமு - தந்தனை யே. 1

ஞானோபதேசம் பத்துப் பாடல்களிலும் 'எனக் குண்மை உரைத்தருளே' என்பது மகுடம். பழம்பதிப்புகளில் உபதேச உண்மை என்பது பதிகப் பெயர். ஆ.பா. பதிப்பில் ஞானோபதேசம். நாமும் அதனையே கொண்டோம்.

ஆரமுதப்பேறு 13 பாடல்களிலும் 'தந்தனையே அருளாரமுதந் தனையே 'என்பது மகுடம். பழம் பதிப்புகளில் இதற்குத் தனித் தலைப்பு இல்லை. முன்பதிகத் தலைப்பாகிய திருவருட்பெருமையையே இதற்கும் கொண்டு 'இதுவுமது' என்று குறித்தனர். சென்னை சன்மார்க்க சங்கப் பதிப்பில் இராசமாணிக்கம் பிள்ளை திருவருட்பெருமை-2 என்றார். தந்தனையே அருளாரமுதந் தனையே' என்பதைப் பாடல் தோறும் மகுடமாகக் கொண்ட இப் பதிகத்திற்கு'ஆரமுதப்பேறு' என்னும் பொருத்தமான பெயரைச் சூட்டினார் ஆ. பா. அதனையே நாமும் கொண்டோம்.

ஆறாந்திருமுறை முதற் பதிப்பில் 'ஞானோபதேசம்' 'ஆரமுதப்பேறு' இவ்விரு பதிகங்களுக்குமே 'பண்-நட்டராகம்' என்று அவ்வவற்றின் தலைப்பிற் குறிப்பிடப் பெற்றுள்ளது. பின் பதிப்புகளும் அதையே பின்பற்றின். ஆ. பா. மட்டும் ஞானோப தேசத்திற்கு நீலாம்பரி, ரூபகம் என்றும் ஆரமுதப்பேறுக்கு சங்கராபரணம், ரூபகம் என்றும் இராக தாளங் குறிக்கிறார்.

நட்டராகம் பழைமையான பண். அதில் வள்ளலார் இருபதிகங்களைப் பாடியுள்ளார். இக்காலத்தில் இசையை இராகம் என வழங்குகிறோம். முற்காலத்தில் பண் என்றே வழங்கினர். தேவாரம் முழுவதும் பண்களே. 'பண்ணால் உன் அருட்புகழைப் பாடுகின்றார்' என்று கூறும் வள்ளலார், தாமும் பண்ணால் அவன் அருட்புகழைப் பாடுகின்றார். சன்மார்க்க உலகம் பண் பாடி மகிழ்க.

# 4. வருகை

வருகைப் பாடல்கள் 4

1. சண்முகர் வருகை
2. அம்பலவாணர் வருகை
3. அம்பலவாணர் ஆட வருகை
4. அம்பலவாணர் அணைய வருகை

சண்முகர் வருகை (பழைய) ஐந்தாம் திருமுறையைச் சேர்ந்தது. நம் பதிப்பில் முதல் திருமுறை. ஏனைய மூன்று வருகைகளும் ஆறாந் திருமுறையைச் சேர்ந்தவை.

சண்முகர் வருகை, எல்லாமே சரணங்கள். பல்லவி அனுபல்லவி இல்லை. அம்பலவாணர் வருகை, ஆட வருகை, அணைய வருகை, இம்மூன்றிற்கும் பல்லவி உண்டு. அனுபல்லவி இல்லை. சரணங்கள் முறையே, 104; 11; 11;

**1. சண்முகர் வருகை**

வாரும் வாரும் தெய்வ வடிவேல் முருகரே
வள்ளி மணாளரே வாரும்
புள்ளி மயிலோரே வாரும் 1

சங்கம்ஒலித்தது தாழ்கடல் விம்மிற்று
சண்முக நாதரே வாரும்
உண்மை விநோதரே வாரும் 2

பொழுது விடிந்தது பொற்கோழி கூவிற்று
பொன்னுன வேலரே வாரும்
மின்னூர் முந்நூலரே வாரும் 3

இப்படிப் 12 கண்ணிகள். 'சங்கம் ஒலித்தது', 'பொழுது விடிந்தது பொற்கோழி கூவிற்று,' 'காகம் கரைந்தது காலையும் ஆயிற்று,' 'செங்கதிர் தோன்றிற்று,' அருணன் உதித்தனன்,' 'சூரியன் தோன்றினன்,' 'சேவல் ஒலித்தது' எனக் காலை நேர நிகழ்ச்சிகள் இதனுட் கூறப்பெறுவதால் இது காலைப்பாட்டாயிற்று. பழம் பதிப்பு களில் இதற்குச் சண்முகர் காலைப்பட்டு என்றே பெயர். சென்னை சங்கப் பதிப்பிலும் அப்படியே. ஆ. பா. பதிப்பில் இதனை ஐந்தாம் திருமுறையிலும் சேர்த்திருக்கிறார்' கீர்த்தனைப் பகுதியிலும் சேர்த்திருககிறார். ஐந்தாம் திருமுறையில் சண்முகர் காலைப் பாட்டு என்ற பெயரையே கொண்டிருக்கிறார், கீர்த்தனைப் பகுதியில் சண்முகர் வருகை என்ற புதிய பெயரைச் சூட்டுகிறார். இரண்டுமே பொருத்தம் என்றாலும் வாரும் வாரும் என்று தொடங்குவதாலும் கண்ணிகள் தோறும் வாரும் வாரும் என்று அழைப்பதாலும் வருகை என்பதே மிகப்பொருத்தம். மேலும் அம்பலவாணர் வருகை, ஆடவருகை, அணையவருகை என்பனவற்றை நோக்க, இதற்குச் சண்முகர் வருகை என்பதே மிகப் பொருத்தம் என்பது தெளிவு.

பழம் பதிப்புகளில் இராக தாளக் குறிப்புகள் இல்லை. சென்னை சங்கப் பதிப்பில் காபி—சாபு என்று இராக தாளக் குறிப்புகள் காணப்படுகின்றன. ஆ. பா. ஐந்தாம் திருமுறையில் இதற்குக் காபி—சாபு என்றே இராக தாளங் குறிக்கிறார். ஆனால் கீர்த்தனைப்பகுதியில் ஷுரடி—சாபு என்று இராகத்தை மட்டும் மாற்றியிருக்கிறார்.

## 2. அம்பலவாணர் வருகை

வாரீர் சிதம்பர வல்லி சிவகாம
வல்லி மணாளரே வாரீர்
மணிமன்ற வாணரே வாரீர்

இது பல்லவி.

அருட்பெரும் ஜோதிஎன் ஆண்டவ ரேதிரு
அம்பல வாணரே வாரீர்
அன்புடை யாளரே வாரீர்

இப்படி 104 சரணங்கள் (கண்ணிகள்)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| முதற் | 10 | கண்ணிகள் | 'அ'கரத்தில் | தொடங்குகின்றன | ( 1 - 10 ) |
| அடுத்த | 11 | ,, | 'ஆ'காரத்தில் | ,, | (11 - 21 ) |
| ,, | 10 | ,, | 'இ' கரத்தில் | ,, | (22 - 31 ) |
| ,, | 10 | ,, | 'ஈ' காரத்தில் | ,, | (32 - 41 ) |
| ,, | 10 | ,, | 'உ'கரத்தில் | ,, | (42 - 51 ) |
| ,, | 10 | ,, | 'ஊ'காரத்தில் | ,, | (52 - 61 ) |
| ,, | 10 | ,, | 'எ' கரத்தில் | ,, | (62 - 71 ) |
| ,, | 10 | ,, | 'ஏ' காரத்தில் | ,, | (72 - 81 ) |
| ,, | 4 | ,, | 'ஐ' காரத்தில் | ,, | (82 - 85 ) |
| ,, | 6 | ,, | 'ஒ' கரத்தில் | ,, | (86 - 91 ) |
| ,, | 9 | ,, | 'ஓ' காரத்தில் | ,, | (92 - 100) |
| ,, | 1 | கண்ணி | 'ஔ' காரத்தில் | தொடங்குகிறது | (101) |
| இறுதி | 3 | கண்ணிகள் | 'க' கரத்தில் | தொடங்குகின்றன. | (102 - 104) |

இவ்வாறு முதலெழுத்துகள் அகர வரிசையில் அமையத் தொடர்ந்து பாடப்பெறுவது 'வர்க்கமாலை' எனப்படும். எழுத்து வர்க்கம் வரிசையாகக் காணப்படுவதால். இப்படி வர்க்கமாலையாக வள்ளற்பெருமான் பாடியன இன்னும் சில உள. பி. இரா. பதிப்பிலும் சென்னைப் பதிப்பிலும் இதற்கு 'வர்க்கமாலை என்னும் காலைப்பாட்டு' என்பதே பெயர். சண்முகர் காலைப்பாட்டு போல இதையும் காலைப்பாட்டாகவே இவர்கள் கொண்டனர்.

104 கண்ணிகளாலும் 1 பல்லவியாலும் அமைந்த இந்த வர்க்கமாலை நீண்ட மாலைதான்; பெரியமாலைதான். அளவாலும் பெரிய மாலை. பொருளாலும் (விஷயத்தாலும்) பெரியமாலை. முதற்கண்ணியே **அருட்பெருஞ்ஜோதி என் ஆண்டவரே** என்று தொடங்குகிறது.

அருட்பெருஞ்ஜோதி என் ஆண்டவரே (1)
அருட்பெருஞ்ஜோதியீர் (3)
அரும்பெருஞ்ஜோதியீர் (11;17;18)

என இதனுள் வருவதே இது அருட்பெருஞ்ஜோதி வழிபாட்டுக்காலத்தில் - ஆறுந் திருமுறைக் காலத்தில் - பாடப்பெற்ற தென்பதைக் காட்டும்.

**ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும்**
ஜோதிய ரேஇங்கு வாரீர்
வேதிய ரேஇங்கு வாரீர்

என்னும் இதன் 18 ஆம் கண்ணி.

ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும்
சோதியை யாம்பாடக் கேட்டேயும்

என்னும் திருவெம்பாவை முதற்பாட்டின் முதலடியை நினைவு படுத்தும். மாணிக்க வாசகரின் அரும்பெருஞ்சோதியிலிருந்துதான் வள்ளலாரின் அருட்பெருஞ்ஜோதி உதயமாயிற்று.

சன்மார்க்கத்தை ஏற்காத சைவர் (சிலர், பலர்) இதனை அறியார். சைவத்தை வெறுக்கும் தீவிர சன்மார்க்கிகள் (சிலர், பலர்) இதனை ஏலார். ஆனால் இதுதான் உண்மை.

ஓங்காரம், எட்டும் இரண்டும், ஐந்தெழுத்து ஆகியவற்றின் நுட்பங்கள் பல இதனுட் கூறப்பெறுகின்றன.

ஊமை எழுத்தினுள் ஆமை எழுத்துண்டென்
றேமை அறிவித்தீர் வாரீர் (59)
ஏசாத தந்திரம் பேசாத மந்திரம்
ஈசான மேலென்றீர் வாரீர் (80)
ஓங்கார நாடகம் பாங்காகச் செய்கின்ற
ஓங்கார நாடரே வாரீர் (92)
ஓமத்தி லேநடுச் சாமத்தி லேஎனை
ஓமத்தன் ஆக்கினீர் வாரீர் (99)
ஓமென்ப தற்குமுன் ஆமென் றுரைத்துடன்
ஊமென்று காட்டினீர் வாரீர் (100)

எனவரும் இடங்களைக் காண்க.

எட்டும் இரண்டுமென் றிட்டு வழங்குதல்
எட்டும் படி செய்தீர் வாரீர் (66)
ஏடா யிரமென்னை கோடா மொழி ஒன்றே
ஏடா என்றீர் இங்கு வாரீர் (79)
ஐந்து மலங்களும் வெந்துவிழ எழுத்
தைந்துஞ் செயும் என்றீர் வாரீர் (82)

என்பன, எட்டும் இரண்டும், ஒருமொழி, ஐந்தெழுத்து - இவற்றைக் கூறுமிடங்களாம். ஓங்காரம், ஒருமொழி, எட்டும் இரண்டும், ஐந்தெழுத்து ஆகியவற்றின் விளக்கங்களை 'வள்ளலார் வாக்கில் ஓங்காரமும் பஞ்சாக்கரமும்' என்னும் எமது நூலிற்காண்க. இவண் எடுத்துக்காட்டப் பெறின் பெருகும். ஆதலின் விடுத்தாம்.

ஆக்கம் தூக்கம் (20)
உறக்கம் இறக்கம் (48)
ஊக்கம் ஏக்கம் (58)

என்னும் இடங்கள் பெருமான் வாழ்வில் அனுபவிக்கத்தக்க (சுவைக்கத்தக்க) இடங்கள். நம் வாழ்வில் அனுசரிக்கத்தக்க இடங்கள்.

தூக்கம் போனால் ஆக்கம் வரும்
உறக்கம் இறக்கம் தரும்
ஊக்கம் உண்டாயின் ஏக்கம் நீங்கும்.

ஒன்று கொடுத்தது (69) கதவு திறந்து ஓலக்கங்காட்டியது. (97) என்பன பெருமான் பெற்ற பெரும்பேரனுபவங்கள். 'ஒன்றே சிவம் அதை ஒன்று சன்மார்க்கமும், ஒன்றே' (86) என்பது தீர்மானமான ஓர் உபதேசம்.

ஆறுந்திருமுறை முதற் பதிப்பிலும் பொ.சு., யி. இரா பதிப்புகளிலும் சென்னைப் பதிப்பிலும் இதன் இராக தாளம், காம்போதி - அடதாளம், ச.மு.க. பதிப்பில் சாமா அடதாளம் ஆ.பா. பதிப்பில் கல்யாணி-மிச்ரசாபு

**3. அம்பலவாணர் ஆட வருகை**

**4. அம்பலவாணர் அணைய வருகை**

இவ்விரண்டும் பல வகையில் ஒத்தன.

'ஆடவாரீர்' என்று பாடியது ஆடவருகை.

'அணையவாரீர்' என்று பாடியது அணையவருகை.

இரண்டிலுமே ஒவ்வொரு பல்லவி. பதினாறு, பதினாறு சரணங்கள்.

ஆடவா ரீர் என்னோ டாடவா ரீர்
அம்பலத்தில் ஆடுகின்றீர் ஆடவா ரீர்,

— ஆடவருகை, பல்லவி.

அணையவா ரீர் என்னை அணையவா ரீர்
அணிவளர்சிற் றம்பலத்தீர் அணையவா ரீர்

— அணைய வருகை - பல்லவி

தன்மைபிறர்க் கறிவறியீர் ஆடவா ரீர்
தனித்தலைமைப் பெரும்பதியீர் ஆடவா ரீர்
வன்மை மனத் தவர்க்கறியீர் ஆடவா ரீர்
வஞ்சமிலா நெஞ்சகத்தீர் ஆடவா ரீர்

தொன்மை மறை முடியமர்ந்தீர் ஆடவாரீர்
துரியபதங் கடந்தவரே ஆடவாரீர்
இன்மை தவிர்த்தெனைமணந்தீர் ஆடவாரீர்
**என்னுடைய நாயகரே ஆடவாரீர்**

— ஆடவருகை, சரணம் 1

**இயற்கைஉண்மை** வடிவினரே அணையவாரீர்
எல்லாம் செய் வல்லவரே அணையவாரீர்
**இயற்கை விளக்கத்** தவரே அணையவாரீர்
எல்லார்க்கும் நல்லவரே அணையவாரீர்
**இயற்கைஇன்ப** மானவரே அணையவாரீர்
இறைமையெலாம் உடையவரே அணையவாரீர்
**இயற்கைநிறை** வானவரே அணையவாரீர்
**என்னுடைய நாயகரே அணையவாரீர்**

— அணையவருகை, சரணம் 1

ஆடவருகையின் பல்லவி ஆடவாரீர் என்று தொடங்குகிறது.
அணையவருகையின் பல்லவி அணையவாரீர் என்று தொடங்குகிறது.

ஆடவருகையின் சரணங்கள் 'என்னுடைய நாயகரே ஆட வாரீர்' என்று முடிகின்றன. அணையவருகையின் சரணங்கள் 'என்னுடைய நாயகரே அணைய வாரீர்' என்று முடிகின்றன. என்னுடைய நாயகரே என்பது இரண்டிற்கும் பொதுவாக இருக்கிறது. இரண்டிலுமே ஆடவாரீரும், அணையவாரீரும் வரிக்கு வரி வருகின்றன அதாவது வரி தோறும் - வரிக்கு ஒருமுறை, அடிக்கு இருமுறை - வருகின்றன.

இயற்கை உண்மை, இயற்கை விளக்கம், இயற்கை இன்பம், இயற்கை நிறைவு இந்நான்கும் அணையவருகையின் முதற் சரணத்தின் நான்கு அடிகளிலும் முறையே கூறப்பெறுகின்றன. இங்கு செய்யுளிற் கூறப்பெறும் இவை, உரைநடை விண்ணப்பங்கள் நான்கிலும் கூறப்பெறுகின்றன.

இயற்கை உண்மை — சத்து,
இயற்கை விளக்கம் — சித்து.
இயற்கை இன்பம் — ஆனந்தம்.
இயற்கை நிறைவு ... சத்து, சித்து, ஆனந்தம் ஆகிய மூன்றும் நிறைவது.
சத், சித், ஆனந்தம், மூன்றும் சேர்ந்தது சச்சிதானந்தம்.

இறைவன் சச்சிதானந்தமாய் விளங்குகிறன்.

**சச்சிதானந்தமயமாகி அமர்ந்த தேவே** — மகாதேவமாலை 2

சத்தாகி சித்தாகி இன்பமாகி — மகாதேவமாலை — 3
என் தனிச்சத்தே,
என் தனிச்சித்தே
என் தனி இன்பே — அகவல் 1201 — 54

(விளக்கம், சன்மார்க்க விவேக விருத்தி தொகுதி 10, பகுதி 2, 1-2-1978 இதழில் சச்சிதானந்தம் என்னும் கட்டுரையிற் காணலாம்.)

ஆறுந்திருமுறை முதற்பதிப்பு பொ. சு. பதிப்பு, பி. இரா. பதிப்புகளில் இவற்றின் பெயர் 'வருகை' எனக்குறிக்கப்பெற்றுள்ளது. ச. மு. க. ஆடலமுதக் கண்ணி, வேட்கைக்கண்ணி எனப்புதிய பெயர்களையிட்டார். சென்னை சங்கப் பதிப்பில் இராசமாணிக்கம் பிள்ளையும் ச.மு.க வைத்த பெயர்களையே கொண்டார். ஆ.பா தான் அம்பலவாணர் ஆட வருகை, அணையவருகை எனப்பெயரிட்டார் நம்பதிப்பில் நாமும் அதனையே கொண்டோம். ஆடலமுதக் கண்ணி என்பதை விட அம்பலவாணர் ஆடவருகை என்பதே பாட்டின் நடைக்கும்பொருளுக்கும் பொருந்துவதோடு தெளிவும் ஆகும். அதுபோல் வேட்கைக்கண்ணி என்பதினும் அம்பலவாணர் அணைய வருகை என்பதே பொருத்தமும் தெளிவுமாகும்.

இனி இவற்றின் இராகதாளங்கள் ஆடவருகைக்கு முதற் பதிப்பு முதல் சென்னை பதிப்பு வரை மோகனம், ஏகாதள சாப்பு. ஆ.பா. மட்டும் மோகனம், ஆதி. அணைய வருகைக்கு ஆனந்தபைரவி, ஆதி தாளம் ஆ. பா. மட்டும் சாவேரி, மிச்ர சாபு

## 5, கீர்த்தனங்கள்

1. தெண்டனிட்டேன்
2. இன்னந் தயவு வரவிலையா
3. அஞ்சாதே நெஞ்சே
4. ஆடிய பாதம்
5. அபயம் அபயம்
6. வருவார் அழைத்துவாடி
7. என்ன புண்ணியம் செய்தேனோ
8. இவர்க்கும் எனக்கும்
9. இது நல்ல தருணம்...

இவற்றுள் முதல் இரண்டும் (பழைய) இரண்டாம் திருமுறையைச் சேர்ந்தவை. ஏனைய ஏழும் ஆறும் திருமுறையைச் சேர்ந்தவை.

**1. தெண்டனிட்டேன்**

''தெண்டனிட்டேனென்று சொல்வீர் — நடேசர்க்கு நான்
தெண்டனிட்டேனென்று சொல்வீர்.''

என்னும் முத்துத்தாண்டவர் கீர்த்தனை (பதம்) அந்நாளில் பெருவழக்காயிருந்தது. வள்ளற்பெருமானும் முத்துத்தாண்டவரின் பல்லவியை அப்படியே கொண்டு அதன் இருசொற்களை மட்டும் மாற்றித்தாமும் ஒரு கீர்த்தனையைச் செய்தார் (பதம் பாடினார்)

தெண்டனிட்டே னென்று சொல்வீர் — நடேசர்க்குநான்
தெண்டனிட்டே னென்று சொல்வீர்

- முத்துத்தாண்டவர் கீர்த்தனையின் பல்லவி

தெண்டனிட்டே னென்று சொல்லடி — சுவாமிக்குநான்
தெண்டனிட்டே னென்று சொல்லடி.

— வள்ளலார் கீர்த்தனையின் பல்லவி.

இரண்டும் எவ்வளவு ஒத்திருக்கிறது என்று பாருங்கள். ''தெண்டனிட்டேனென்று **சொல்வீர்**' என்று முத்துத்தாண்டவர் பாட, 'தெண்டனிட்டே னென்று **சொல்லடி**' என்று வள்ளலார் பாடுகின்றார். ''சொல்வீர்'' ''சொல்லடி'' என்பதே வேறுபாடு. அது பன்மை விளி. இது ஒருமை விளி. அது தோழியர் சிலரை அல்லது பலரை நோக்கிச் சொன்னதால் ''சொல்வீர்'' எனப்பன்மையில் அமைந்தது. இது தோழி ஒருத்தியையே நோக்கி உரைத்ததால் 'சொல்லடி' என ஒருமையில் அமைந்தது. 'நடேசர்க்கு நான் தெண்டனிட்டேன்' என்கிறார் முத்துத்தாண்டவர். 'சுவாமிக்கு நான் தெண்டனிட்டேன் என்கிறார் வள்ளலார். 'நடேசர்க்கு' 'சுவாமிக்கு' என்பதே வேறுபாடு. 'சொல்வீர்' 'சொல்லடி', 'நடேசர்க்கு', 'சுவாமிக்கு' என்னும் மாற்றங்களைத் தவிர மற்றவை ஒன்றாகவே இருக்கின்றன. பாடுவதற்கு மட்டும் உரிய இசைப் பாடல்களுக்குக் கீர்த்தனை என்றும், பாடுவதோடு ஆடுவதற்கும் உரிய இசைப்பாடல்களுக்குப் பதம் என்றும் பெயர். ஆனால் வழக்கில் கீர்த்தனை என்பது இரண்டுக்குமே பொதுப் பெயராக வழங்குகிறது. தெண்டனிட்டேனென்று சொல்வீர் என்ற முத்துத்தாண்டவர் கீர்த்தனையும் தெண்டனிட்டேனென்று சொல்லடி என்ற வள்ளலார் கீர்த்தனையும் பதங்களே, பாடுவதற்கு மட்டுமின்றி நாட்டியமாக ஆடுவதற்கும் உரிய பாடல்களே.

இனி, வள்ளற் பெருமானின் கீர்த்தனைக்கு வருவோம்.

தெண்டனிட்டே னென்று சொல்ல டி — சு வாமிக்குநான்
தெண்டனிட்டே னென்று சொல்ல டி

என்பது பல்லவி.

தண்டலே விளங்கும் தில்லைத் தலத்திற்பொன் னம்பலத்தே
கண்டவர் மயங்கவேடங் கட்டியாடு கின்றவர்க்கு — தெண்ட

என்பது அனுபல்லவி.

கற்பூர வாசம்வீசும் பொற்பாந்தி ருமுகத்தே
கனிந்தபுன் னகையாடக் கருணைக்க டைக்கணுட
அற்பார்பொன் னம்பலத்தே ஆனந்தத் தாண்டவம்
ஆடிக்கொண் டேயென்னை ஆட்டிங்கண் டாருக்கு — தெண்ட

இப்படி ஏழு சரணங்கள்.

1 பல்லவி, 1 அனுபல்லவி, 7 சரணங்கள். பல்லவியும், அனுபல்லவியும் 'தெண்டனிட்டேன், 'தண்டலே விளங்கும்' எனத் தொடங்குவதாய் எதுகை பெற்று இனிதாக அமைந்துள்ளன.

கடவுளை மட்டுமின்றிக் கணவரையும் சுவாமி என்றழைப்பது பண்டைய வழக்கம். அவ்வழக்குப் பற்றியே பெருமானும் சுவாமிக்கு நான் தெண்டனிட்டேனென்று சொல்லடி என்கிறார். இங்கு சுவாமி நடராஜர். அவர் கடவுளுக்குக் கடவுளாகவும் கணவருக்குக் கணவராகவும் விளங்குகிறார். கடைசிக் கண்ணியில் என் பிராண நாயகர்க்கு என்பதனாலும் இதனை அறிக. சொல் நயமும் பொருள் நயமும் மிகுந்த பாட்டு இது.

'ஏற்றுவார் போலே பின்னும் இழிய வைப்பாருக்கு'
'பசப்பிப் பசப்பி அன்பர் பண்டம் பறிப்பவர்க்கு'
'வாழ்ந்தாரை மேன்மேலும் வாழச் செய்பவருக்கு'
'தாழ்ந்தாரை அடிக்கடி தாழக் காண்பவருக்கு'
'தொண்டர் குடிகெடுக்கவே துஜங் கட்டிக் கொண்டவர்க்கு'
'வீட்டுக் காசைப் படுவாரை வீட்டை விட்டுத்துரத்தியே
வேட்டாண்டியாய் உலகில் ஓட்டாண்டி யாக்குவார்க்கு'
'ஏமாந்தவரை யெல்லாம் ஏமாத்தும் ஈசருக்கு'

என இதில் வரும் தொடர்கள் அடியாரை ஆண்டவன் சோதிக்கும் வண்ணங்களைக் கூறுவனவாம்.

1867 - ல் தொழுவூர் வேலாயுத முதலியாரால் பதிப்பிக்கப் பெற்ற முதல் நான்கு திருமுறை முதற்பதிப்பில் இதற்கு, 'இராகம் தோடி, ஆதிதாளம்' என இராக தாளக் குறிப்புகள் அச்சிடப்பெற்றுள்ளன. பின் வந்த பதிப்புகள் அனைத்தும் இவ்விராகதாளங்களையே கொண்டன.

## 2. இன்னந் தயவு வரவிலையா

தெண்டனிட்டேன் என்பதை அடுத்து (பழைய) இரண்டாம் திருமுறையில் உள்ளது இது. 1 பல்லவி. 6 கண்ணிகள்.

இன்னந் தயவுவர விலையா - உனக்கென்மீதில்
என்ன வர்மஞ் சொலையா

என்பது பல்லவி.

அன்னம் பாலிக்குந் தில்லைப் பொன்னம் பலத்திலாடும்
அரசே - அரசே - அரசே யென்றலறவும். — இன்ன

இப்படி 6 கண்ணிகள், 'அலறவும்' என்பது கண்ணிகள் தோறும் வருகிறது. இவ்வாறு எல்லாம் அலறுகிறேனே, இன்னும் தயவு வரவில்லையா? உனக்கு என் மீது என்ன வர்மம்? சொல் ஐயா! என்று கேட்கும் இப்பாடலுக்கு இராகம் காம்போதி ஆதி தாளம் என தொ. வே. முதற்பதிப்பில் (1867) குறிப்பிடப்பெற்றுள்ளது. பின் பதிப்புகளும் இதனையே பின்பற்றின.

## 3. அஞ்சாதே நெஞ்சே

இதுவும் இனிவரும் கீர்த்தனங்களும் ஆறும் திருமுறையிலுள்ளவை.

அஞ்சாதே நெஞ்சே அஞ்சாதே
அஞ்சாதே நெஞ்சே அஞ்சாதே

என்பது பல்லவி· அனுபல்லவி இல்லை.

வஞ்ச மிலார் நாம் வருந்திடில் அப்போதே
அஞ்சலென் பார் இதோ அம்பலத் திருக்கின்றார்

இப்படி 22 கண்ணிகள். ஒவ்வொரு கண்ணியும் அம்பலத்திருக்கின்றார் என்ற முடிவை யுடையது. "அருட்பெருஞ்சோதியார்" என்ற பெயர் இரண்டு கண்ணிகளில் (2; 6) வருவதால் இது அருட்பெருஞ்ஜோதி வழிபாட்டுக் காலத்திற் பாடப்பெற்றது என்பது தெளிவு. ஆறும் திருமுறை முதற்பதிப்பில் (1885) இதன் இராகதாளம் 'இராகம் — இந்துஸ்தான் காபி, ஏகதாளம்' எனக் குறிக்கப்பெற்றுள்ளது. பின்பதிப்புகள் அனைத்தும் இதே இராகத்தைக் கொண்டன. ச. மு. க., இராசமாணிக்கம்பிள்ளை ஆ. பா. ஆகிய மூவர் பதிப்பிலும் சாப்பு தாளம் எனத் தாளம் மட்டும் மாறியுள்ளது.

## 4. ஆடிய பாதம்

1 பல்லவி. 16 கண்ணிகள்.

ஆடிய பாதமன் றாடிய பாதம்
ஆடிய பாதநின் றாடிய பாதம்

இதுபல்லவி, மன்றாடிய, நின்றாடிய என்ற வேறுபாட்டைக் **கவனிக்க.**

பாடிய வேதங்கள் தேடிய பாதம்
பத்திசெய் பத்தர்க்குத் தித்திக்கும் பாதம்

நாடிய மாதவர் நேடிய பாதம்
நாதாந்த நாட்டுக்கு நாயக பாதம். —ஆடிய

இப்படிப் 16 கண்ணிகள். 'அருட்பெருஞ்ஜோதிய தாகிய பாதம்' என ஒரு கண்ணியில் (15) வருவதால் இது அருட்பெருஞ்ஜோதி வழிபாட்டுக் காலத்திற் பாடப்பெற்ற தென்பது போதரும். ஆறும் திருமுறை முதற்பதிப்பில் இராகம்: தன்யாசி, ரூபக தாளம். பின் பதிப்புகள் அனைத்திலும் அப்படியே. ஆ. பா. மட்டும் சாபு தாளம்.

## 5. அபயம் அபயம்

1 பல்லவி. 15 கண்ணிகள்.

அபயம் அபயம் அபயம்

இது பல்லவி.

உபயம தாய்என் உறவாய்ச் சிதம்பரச்
சபையில் நடஞ்செயும் சாமி பதத்திற்கே —அபயம்

இப்படி 15 கண்ணிகள். கண்ணிகளோடு பல்லவியும் சேர்ந்தே பொருள் முடிவதாக அமைந்துள்ளன. முதல் 10 கண்ணிகள் பதத்திற்கே அபயம் எனக்கூற, பின் 5 கண்ணிகள் போதுக்கே அபயம் என்று கூறுவன. ஆறும் திருமுறை முதற்பதிப்பு முதல் எல்லாப்பதிப்புகளிலுமே இதன் இராக தாளம். தோடி ஆதி.

## 6. வருவார் அழைத்து வாடி

இது வடலூரில் உறைந்த காலத்திற் பாடியது. சிதம்பரம் நடராசனை வடலூர்க்கு அழைத்துப் பாடியது.

1 பல்லவி. 1 அனுபல்லவி. 3 கண்ணிகள்.

இதன் முழுமையான அச்சுவடிவத்தையும், பெருமான் எழுதியருளிய கையெழுத்து வடிவத்தையும் இம்மலரின் முன்பக்கங்களிற் காண்க.

வருவார ழைத்துவாடி வடலூர் வடதிசைக்கே
வந்தாற் பெறலாம் நல்ல வரமே.

என்பது பல்லவி. இப்பல்லவியை முதலிலும், அனுபல்லவியை அடுத்தும், சரணங்கள் மூன்றில் ஒவ்வொன்றின் ஈற்றிலும் ஆக ஐந்து முறை வள்ளற் பெருமான் எழுதிய ருளியுள்ளார். மேலே பிள்ளையார்சுழி யிட்டு, அடுத்து "சிவமயம் சிவமயம்" எனச் சிவமயத்தை இரு முறை எழுதிப் பாடலை எழுதத் தொடங்குகிறார் பெருமான். பல்லவி, அனுபல்லவி, சரணங்கள் என்ற தலைப்புகளோ இராகதாளக் குறிப்புகளோ வள்ளற் பெருமான் கொடுக்கவில்லை. பல்லவி இது, அனுபல்லவி இது, சரணங்கள் இவை என நன்கு பிரித்தறியுமாறு பெருமான் எழுதிய அமைப்பு அமைந்துள்ளது. முதல் சரணத்தில் (கண்ணியில்) வரும் "பவுரி" என்பது ஒருவகைக் கூத்து (பவுரிக் கூத்து).

சிதம்பரத்தை விட வடலூரில் பெருவெளியிருக்கிறது, சிதம்பரந்தில் ஓர் அம்பலம், வடலூரில் எட்டு அம்பலம், இடுக்கில்லாமல் ஒடுக்கில்லாமல் ஆடலாம். இங்கேயே வந்துவிடவேண்டும் என்பதில்லை, அங்கும் இங்குமாகக் கூட நடமாடி இருக்கலாம் என்றெல்லாம் சொல்லிச் சிதம்பரநாதரை வடலூர்க்கு அழைக்கின்றார் வள்ளற்பெருமான்.

திரு அருட்பா இசைப்பாடல்களுள் மிகுதியும் பயிற்சியிலுள்ள - வழக்கிலுள்ள பாடல் இது. இதன் பல்லவி மட்டுமே கூட வடலூர்ச்சிறப்பை உணர்த்தும் ஒரு தனிப் பாடலாக அழைப்பிதழ்களிலும் அறிவிப்புகளிலும் இவைபோன்ற சிறு வெளியீடு களிலும் அச்சிடப்பெறும் வழக்கம் உள்ளது. ஆறும் திருமுறை முதற்பதிப்பு முதலாக எல்லாப் பதிப்புகளிலுமே இதன் இராக தாளம் பியாகடை அட்தாளசாப்பு. ஆ. பா. பதிப்பில் மட்டும் தாளம் மிச்ரசாபு என வேறுபடுகிறது. இராகத்தில் மாற்ற மில்லை.

### 7. என்ன புண்ணியம் செய்தேனோ

அம்பலவர் வருகையைத் திருச்சின்னநாதம், எக்காளநாதம், ஓங்காரநாதம், வேணுநாதம் முதலிய நாதங்கள் சொல்கின்றன. இதற்கு நான் என்ன புண்ணியம் செய்தேனோ என்று பாடியது இப்பாட்டு. 1 பல்லவி. 1 அனுபல்லவி. 7 கண்ணிகள். எல்லாப் பதிப்புகளிலும் இராகம் உசேனி, அடதாளம். ஆ. பா. பதிப்பில் மட்டும் தாளம் ருபகம்.

### 8. இவர்க்கும் எனக்கும்

1 பல்லவி. 1 அனுபல்லவி. 3 கண்ணிகள்.

இவர்க்கும் எனக்குப்பெரு வழக்கிருக் கின்றதது
என்றும் தீரா வழக்குக் காண டி

என்பது பல்லவி.

எவர்க்கும் பெரியவர்பொன் னம்பலத் தேநடம்
இட்டார் எனக்குமாலை இட்டார் இதோவந்தார் — இவர்க்கும்

என்பது அனுபல்லவி.

அன்றிதோ வருகின்றேன் என்று போனவர்அங்கே
யார்செய்த தடையாலோ இருந்தார்என் கையிற்சங்கை
இன்றுதம் கையிற்கொண்டே வந்துநிற் கின்றார்இங்கே
இந்தக் கதவைமூடு இவர்போவ தினிஎங்கே. — இவர்க்கும்

இப்படி 3 கண்ணிகள். இந்தக் கதவை மூடு இரட்டைத் தாட்கோலைப் போடு, என்பது மூன்ருவது கண்ணியின் முடிவு. 'இந்தக்கதவைமூடு,' மூன்று கண்ணியிலும் இடம் பெறுகிறது. 'இரட்டைத் தாட்கோலைப் போடு,' கடைசிக் கண்ணியில் மட்டும். கதவை சும்மா மூடச்சொல்லாமல் தாழ்க்கோலைப் போடச் சொல்லுவது அதுவும் இரட்டைத் தாழ்க்கோலைப் போடச் சொல்லுவது நயம். பெருவழக்கு - தீராவழக்கு - என்றும் தீராவழக்கு என மேலே மேலே போவதும் நயம். எல்லாப்பதிப்புகளிலுமே இராக தாளம், பைரவி, ருபகம். ஆ பா. பதிப்பில் மட்டும் தாளம் மிச்ரசாபு.

**9. இது நல்ல தருணம்.**

1 பல்லவி. 1 அனுபல்லவி. 4 கண்ணிகள்

இது நல்ல தருணம் - அருள்செய்ய
இது நல்ல தருணம்

என்பது பல்லவி.

பொதுநல்ல நடம்வல்ல புண்ணிய ரேகேளும்
பொய்யேதும் சொல்கிலேன் மெய்யே புகல்கின்றேன் — இதுநல்ல

என்பது அனுபல்லவி.

மதித்த சமயமத வழக்கெல்லா மாய்ந்தது
வருணச் சிரமம்எனும் மயக்கமும் சாய்ந்தது
கொதித்த லோகாசாரக் கொதிப்பெல்லாம் ஒழிந்தது
கொலையும் களவுமற்றைப் புலையும் அழிந்தது. — இது நல்ல

என்பது முதலாவது கண்ணி, இப்படி 3 கண்ணிகள். வேதாகமக் கூச்சலும் அடங்கிற்று என இரண்டாவது கண்ணியிற் சொல்லப்படுகிறது. இப்படிப்பல சீர்திருத்தங்களைச் சொல்லியும், தத்துவங்களெல்லாம் தன்வசம் நிற்பதைச் சொல்லியும் அருள் செய்ய இது நல்ல தருணம் என்று அம்பலவாணரை அழைக்கும் பாடல் இது. இதன் இராக தாளம் எல்லாப் பதிப்புகளிலும் கல்யாணி, அடதாளம். ஆ. பா பதிப்பில் மட்டும் தாளம், மிச்ரசாபு.

# 6. ஆடற்பாடல்கள்

1. தோழியர் உரையாடல்
2. வினுவிடை
3. உபதேசவினு
4. நெஞ்சொடு நேர்தல்
5. திருஉந்தியார்
6. பந்தாடல்

இவற்றுள் முதல் இரண்டும் (பழைய) இரண்டாம் திருமுறையைச் சேர்ந்தவை. நம் வரலாற்று முறைப்பதிப்பில் நான்காம் திருமுறை. ஏனைய நான்கும் ஆரும் திருமுறையைச் சேர்ந்தவை.

### 1. தோழியர் உரையாடல்

6. கண்ணிகள். ஒவ்வொரு கண்ணியிலும் முதல் அடி தோழி வினு. இரண்டாவது அடி தலைவியின் விடை. இவ்வாறு அமைந்தவை இவ் வாறு கண்ணிகளும்.

தண்மதி யொண்முகப் பெண்மணியே - உன்னைத்
தான்கொண்ட நாயக ராரே டி (இது தோழியின் வினு)
அண்மையிற் பொன்னணி யம்பலத் தாடல்செய்
ஐய ரமுத ரழக ரடி. (இது தலைவியின் விடை)

இவ்வாறு 6 கண்ணிகள். தொ. வே. முதற்பதிப்பு முதல் ஆ. பா. பதிப்பு வரை எல்லாப்பதிப்புகளிலும் இதற்குப்பெயர் சிலதாஸம்வாதம். சிலதி - தோழி. ஸம்வாதம் - உரையாடல். சிலதா ஸம்வாதம் - தோழியர் உரையாடல். சிலதாஸம்வாதம் என்னும் வடமொழிப்பெயர் இந்நாளில் பலர்க்கும் புரிந்து கொள்ள இயலாததாதலின் தோழியர் உரையாடல் என்னும் நல்ல தமிழ்ப்பெயர் நம் பதிப்பிற் கொடுக்கப் பெற்றது. முதற்பதிப்பிலும் பழம்பதிப்புகளிலும் இதற்கு இராக தாளக் குறிப்புகள் இல்லை. சிலதாஸம்வாதம் என்ற பதிகப் பெயரின் கீழ் கண்ணிகள் என்று மட்டுமே அச்சிடப்பெற்றுள்ளது. சென்னைப் பதிப்பில்தான் இராசமாணிக்கம் பிள்ளை சிந்து பைரவி ஆதிதாளம் என முதன் முதலாக இராக தாளங் குறிக்கிருர். ஆ. பா. பதிப்பில் ஹுஸானி, மிச்ரசாபு.

### 2. வினு விடை

3 கண்ணிகள். 'ஆகமமும் ஆரணமும்,' 'அருளாலே அருளிறை,' 'அறிவாலே அறிவினை' என்பன கண்ணித்தொடக்கங்கள். யாப்பமைதியிலும் கண்ணிகளின் எண்ணிக்கையிலும் பதிப்புகளிடையே வேறுபாடு காணப்படுகிறது. அவ்வாராய்ச்சி ஈண்டு வேண்டா. ஏனைய பதிப்புகளில் 'வினு உத்தரம்' என்பது பெயர். நம் பதிப்பில் 'வினு விடை'. உத்தரம் - விடை. ஆ. பா. பதிப்புக்கு முந்திய பதிப்புகள் அனைத்திலும் இராக தாளக் குறிப்பு இல்லை. ஆ. பா. பதிப்பில் இராகம் மோகனம். தாளம்: கண்ணி 1, ஆதி தாளம். கண்ணி 2, 3, ஜம்பை.

### 3. உபதேச வினு

கலித்தாழிசை. 11 பாடல்கள். முதற்பாடல் 'வேதாந்த நிலையொடு' என்று தொடங்குவது. உபதேச வினு என்ற பெயர் ஆ. பா. இட்டது. முதற்பதிப்பிலும் பழம் பதிப்புகளிலும் பெயர் 'தலைவி பாங்கிக் குரைத்தல்.' தலைவி தோழியை வினவும் கூற்றாகப் பாடப்பெற்றவை.

வேதாந்த நிலையொடு சித்தாந்த நிலையும்
மேவும் பொதுநடம் நான்காணல் வேண்டும்
நாதாந்தத் திருவீதி நடப்பாயோ தோழி
நடவாமல் என்மொழி கடப்பாயோ தோழி.

என்பது முதற்றாழிசை. இதில் இறைவனின் திருநடம் வேதாந்த சித்தாந்தப் பொது நடம் என்று வேதாந்த சித்தாந்த சமரசம் கூறப்படுகிறது. வேதாந்திகளும் சித்தாந்திகளும் சண்டையிட்டுக் கொண்டது பழையகாலம். வள்ளலார் வேதாந்தத்தையும் சித்தாந்தத்தையும் சமரசப்படுத்திக் காண்கிறார். வள்ளலாரின் சன்மார்க்கம் ஷடாந்த சமரச சுத்த சன்மார்க்கம். வேதாந்த சித்தாந்தங்களை மட்டுமன்றி ஆறந்தங்களையுமே சமரசப்படுத்திக் காண்கிறார் வள்ளலார். வள்ளலாருக்குமுன் வேதாந்த சித்தாந்த சமரசங் கண்டவர் தாயுமானவர். வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலை என்பது அவர் வாக்கு. தாயுமானார்க்கு முன் வேதாந்த சித்தாந்த சமரசங்கண்டவர் திருமூலர். 'மூலன் மரபில் வரு மௌனகுரு'விடம் உபதேசம் பெற்றவர் தாயுமானவர். திருமூலர் தாயுமானவர் வள்ளலார் என்பது ஒருவகை வழிமுறை. நிற்க, இனி உபதேசவினாவைக் காண்போம். இறைவனின் திருநடனம் தத்துவமசி நடனம் என இரண்டாம் தாழிசையிலும் (தொம்பத உருவொடு தத்பத வெளியில் தோன்றசிபத நடம்) சி கார வ கார ம கார நடனம் என ஆறும் தாழிசையிலும் (வகாரவெளியில் சிகார உருவாய் மகாரத்திருநடம்) கூறப்படுகின்றன. 11 தாழிசைகளிலும் ஒவ்வொன்றில் ஒவ்வொரு வகையாக இறைவனின் திருநடம் வருணிக்கப்பெறுகிறது. இதில் தத்துவ விஷயங்கள் பலவாகும். விரிக்கிற் பெருகும் என விடுத்தாம். முதற்பதிப்பு முதல் சென்னைப் பதிப்புவரை எல்லாப்பதிப்புகளுமே கலித்தாழிசை என யாப்பு மட்டுமே குறித்தன. கலித்தாழிசையெல்லாம் இசைப்பாடல்களே. ஆ, பா. மட்டும் காம்போதி ஆதிதாளம் என இராக தாளங் குறிக்கிறார்.

### 4. நெஞ்சொடுநேர்தல்

இதுவுங் கலித்தாழிசை. 10 பாடல்கள். நெஞ்சுக்குக் கூறுவதாகப் பாடியது.

அடங்குநாள் இல்லா தமர்ந்தானைக் காணற்கே
தொடங்குநாள் நல்லதன்றே - நெஞ்சே
தொடங்குநாள் நல்லதன்றே. 1

வல்லவா றெல்லாமும் வல்லானைக் காணற்கே
நல்லநாள் எண்ணிய நாள் - நெஞ்சே
நல்லநாள் எண்ணிய நாள். 2

காலங் கடந்த கடவுளைக் காணற்குக்
காலங் கருதுவ தேன் - நெஞ்சே
காலங் கருதுவ தேன். 3

இப்படிப் 10 தாழிசைகள். காலங்கடந்த கடவுளைக் காண்பதற்குக் காலநேரம் பார்க்க வேண்டாம், நாள் கிழமை பார்க்க வேண்டாம், தொடங்கும் நாளே நல்லநாள், எண்ணிய நாளே நல்ல நாள். தத்துவங்களைத் தாண்டிய தலைவனை (கடவுளை)க் காண்பதற்குத் தத்துவங்களைக் கருதுவதேன் என்பன போன்ற உயர்ந்த கருத்துகள். முற்பதிப்புகளில் இராகதாளக் குறிப்புகள் இல்லை. கலித்தாழிசை என்ற யாப்புக் குறிப்பே உண்டு. சென்னைப்பதிப்பில் புன்னாகவராளி, ஆதிதாளம். ஆ. பா. பதிப்பில் தோடி, மிச்ரசாபு.

## 5. திருஉந்தியார்

திருஉந்தியார் பழமையானதோர் இலக்கியவகை. வள்ளற் பெருமானுக்கு முன்பே பல திருஉந்தியார்கள் தோன்றியுள்ளன. சைவத்தில் திருஉந்தியார் என்றொரு நூலே உண்டு. மாணிக்கவாசகர் அருளிய திருவாசகத்தில் திருஉந்தியார் என்றொரு பதிகம் உள்ளது. இன்னும் சிலரும் திருஉந்தியார் பாடியுள்ளனர். திருஉந்தியார் நீண்ட நெடுங்கால மரபுடையது. அம்மரபில் நின்று வள்ளலாரும், ஒரு திரு உந்தியார் பாடுகின்றார். ஆதலின் திருஉந்தியாரின் வரலாற்றைச் சுருக்கமாக வேனும் சன்மார்க்க அன்பர்கள் அறிதல் நலமாகும்.

தமிழில் தற்போது வழங்கும் திருஉந்தியார்கள் 6.

1. திருவாசகத்திலுள்ள திருஉந்தியார்
2. நாலாயிர திவ்வியப் பிரபந்தத்திலுள்ள திருஉந்தியார்
3. சித்தாந்த சாத்திரங்கள் 14-ல் ஒன்றான திருஉந்தியார்,
4. தத்துவராயர் பாடுதுறையிலுள்ள திருஉந்தியார்.
5. சாந்தலிங்க சுவாமிகள் பாடிய அவிரோத உந்தியார்.
6. திருஅருட்பாவிலுள்ள திருஉந்தியார்.

இவ்வாறனுள்ளும் இப்பெயராற் பெரிதும் விளங்குவது சித்தாந்த சாத்திரத் திருஉந்தியாரே. 'திருஉந்தியார்' எனக்கூறின் அது சித்தாந்த சாத்திரங்களுள் ஒன்றான திருஉந்தியாரையே குறிக்கும். மற்றவற்றை அவை உள்ள நூற்பெயரோடு சேர்த்துச் சொல்ல வேண்டும். சித்தாந்த சாத்திரங்களுள் ஒன்றான திருஉந்தியார் அப் பெயரால் ஆன தனி நூல். அவிரோத உந்தியாரும் தனிநூலே. ஏனைய நான்கும் தனி நூல்கள் ஆகா. நூலின் பகுதிகள் - பதிகங்கள் - ஆகும்.

### திருஉந்தியார் என்னும் பெயர்

திருஉந்தியார் என்பது திரு - உந்தி - ஆர் என்னும் மூன்று சொற்களால் ஆனது. திரு - தெய்வத்தன்மையைக் குறிக்கும் முன் அடைமொழி. ஆர் - உயர்வு சிறப்பைக் குறிக்கும் பின் அடைமொழி, உந்தி - உந்தி பறத்தல் என்னும் விளையாட்டு; மகளிர் ஆடுவது; பண்டைக் காலத்தது; இக்காலத்தில் வழக்கிலில்லாதது. இக்காலத்தில்

சிறுமிகள் கயிற்றுட்டம் (ஸ்கிப்பிங்) என்று விளையாடுகின்றனரே, அது போன்றது எனலாம். கால்களை ஊன்றிக்கைகளை உயர்த்திப் பறப்பதுபோல் உந்திக் குதித்து விளையாடும் இவ்விளையாட்டு பல்வரிக் கூத்துகளுள் ஒன்றென்பது சிலப்பதிகாரம் அரங்கேற்றுக் காதை உரையில் அடியார்க்குநல்லார் காட்டும் 'சிந்துப் பிழுக்கை' என்னும் மேற்கோட் சூத்திரத்தால் அறியப்படும். மகளிர் ஆடற்குரிய தென்பது பிங்கலந்தையாலும், 'நந்தன் மதலையைக் காகுத்தனை நவின்று உந்தி பறந்த ஒளியிழையார்கள் சொல்' என்னும் பெரியாழ்வார் திருமொழியாலும், ''கொங்கை குலுங்க நின்று உந்தீபற'' என்னும் திருவாசகத்தாலும் பெறப்படும். ('கொங்கை குலுங்க நின்று உந்தீபற' என்றுர் மாணிக்கவாசகர். 'கொங்கை குலுங்கவே கொம்மியடி' என்றுர் வள்ளலார் நடேசர் கொம்மியில்)

### திருஉந்தியாரின் யாப்பு

திருஉந்தியாருக்கு உரிய யாப்பு கலித்தாழிசை. திருஉந்தியார் பாடிய அனைவருமே கலித்தாழிசை யாற்றுன் பாடியுள்ளனர். கலித்தாழிசை இசைப்பாட்டு என்பதை முன்னமே கூறினேும்.

> அடிஎனைத் தாகியும் ஒத்துவந்து அளவினில்
> கடையடி மிகுவது கலித்தா ழிசையே.

என்பது கலித்தாழிசையின் இலக்கணம் (யாப்பருங்கலம் 87.) எத்தனை அடிகளால் வேண்டுமானுலும் வரலாம். கடைசி அடியைத் தவிர மற்ற அடிகளெல்லாம் அளவொத்து இருக்க வேண்டும். அதாவது ஒரே அளவில் இருக்க வேண்டும். கடைசி அடிமட்டும் நீண்டிருக்க வேண்டும். முன்பு கூறிய ஆறு திருஉந்தியார்களும் கலித்தாழிசையே. நாலாயிர திவ்வியப் பிரபந்தத்திலுள்ள திருஉந்தியார் மட்டும் நான்கடிக்கலித்தாழிசை. மற்ற ஐந்தும் ஈரடிக்கலித்தாழிசை.

### திருஉந்தியாரின் திருவுள்ளக்கிடை

திருவாசக ஏடுகளிலும் அச்சுப் புத்தகங்களிலும் பதிகப்பெயரின் கீழ் அதன் கருத்து குறிப்பிடப் பெற்றுள்ளது, எடுத்துக் காட்டு : சிவபுராணம் - சிவனது அநாதி முறைமையான பழைமை. திருவெம்பாவை - சத்தியை வியந்தது. திருப்பள்ளியெழுச்சி - திரோதான சுத்தி. இக்கருத்துக் குறிப்புகள் திருவுள்ளக்கிடை என வழங்குகின்றன. திருஉந்தியாரின் திருவுள்ளக்கிடை 'ஞான வெற்றி'

> ''ஊனம் ஒழிக்கும் உயர்திரு உந்தியார்
> ஞான வெற்றி யெனநவின் றனரே.''

திருவாசகத் திருஉந்தியார்க்குக் கூறப்பெற்ற ஞான வெற்றி என்னும் திருஉள்ளக் கிடை ஏனைய திருஉந்தியார்களுக்கும் பொருந்தும். வள்ளற்பெருமான் பாடிய திருஉந்தியாரும் ஞான வெற்றியே.

## 1. திருவாசகம் : திருஉந்தியார்

திருவாசகத்தில் 14-ஆம் பதிகம். 19 பாடல்கள். முதல் 4 பாடல்கள் திரிபுர மெரித்த வரலாறு; 5 முதல் 12 வரை தக்கன் வேள்வியைத் தகர்த்த வரலாறு; 18ஆம் பாடல் பிரமன் சிரத்தைக் கொய்த வரலாறு; 19-ஆம் பாடல் இராவணனை அடக்கிய வரலாறு. ஏகாசமிட்ட என்று தொடங்கும் பாடலொன்று மிகைப்பாடலாக (20 ஆம் பாடலாக) ச் சிலபிரதிகளுள் காணப்படுகிறது. இறைவனது திருவிளையாடல்களாகிய வீரச் செயல்களைக் கூறுவதால் இது ஞானவெற்றி யாயிற்று.

வளைந்தது வில்லு விளைந்தது பூசல்
உளைந்தன முப்புரம் உந்தீபற
ஒருங்குடன் வெந்தவாறு உந்தீபற

என்பது முதற்பாடல். இதன் முதலடி நான்குசீர், இரண்டாவது அடி ஆறுசீர், பின் மூன்று சீர்கள் மூன்றுவது வரியாக மடக்கி எழுதப்பட்டுள்ளன. வளைந்தது, உளைந்தன என்னும் முதற்சீர்கள் எதுகையான் நின்றன. ஓர் அடியிலும் மூன்றுவதுசீர் எதுகையில் நிற்பது ஓர் அழகு. இங்கு முதல் அடியில் வளைந்தது, விளைந்தது என முதற்சீரும் மூன்றுஞ்சீரும் எதுகையில் நிற்கின்றன. இதனுல் ஓசைநயம் மிகுவதை ஒருமுறைக்கு இருமுறை பாடிப் பார்த்து உணரலாம்.

## 2. திவ்வியப் பிரபந்தம் : திருஉந்தியார்

உந்தி பறத்தலாகப் பெரியாழ்வார் பாடிய 10 பாடல்கள் நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் (307- 317) உள்ளன. பெரியாழ்வார் திருமொழி 3/9. 'நந்தன் மதலையைக் காகுத்தனை நவின்று உந்தி பறத்தல்' என்பது பதிகத் தலைப்பு.

நந்தன் மதலையைக் காகுத்த னைநவின்று
உந்தி பறந்த வொளியிழை யார்கள் சொல்
செந்தமிழ்த் தென்புது வைவிட்டு சித்தன் சொல்
ஐந்தினோ டைந்தும்வல் லார்க்கல்ல லில்லையே.

என்பது பதினோராவது நாந்திச் செய்யுள். 10 பாடல்களும் இராமனது வீரச் செயல்களையும் கண்ணனது வீரச்செயல்களையும் கூறுகின்றன. 10-ம் கலித்தாழிசை.

என்னுதன் தேவிக்கன் றின்பப்பூ ஈயாதாள்
தன்னுதன் காணவே தண்பூ மரத்தினை
வன்னுதப் புள்ளால் வலியப் பறித்திட்ட
என்னுதன் வன்மையைப் பாடிப்பற
எம்பிரான் வன்மையைப் பாடிப்பற.

என்பது முதற்பாட்டு. இதன் மூன்று அடிகள் நான்கு சீரால் தம்முள் அளவொத்தும், நான்காவது அடி (ஈற்றடி; கடையடி) ஆறு சீரால் மிக்கும் வந்தது காண்க.

3. சித்தாந்த சாத்திரம் : திருஉந்தியார்

சித்தாந்த சாத்திரங்கள் 14. அவற்றுள் முதலாவது திருஉந்தியார். 45 பாடல்கள். ஆசிரியர் திருவியலூர் உய்யவந்த தேவர்.

அகளமா யாரும் அறிவரிதப் பொருள்
சகளமாய் வந்ததென் றுந்தீபற
தானாகத் தந்ததென் றுந்தீபற.

என்பது முதற்பாடல். மலங்களை வென்று ஞானத்தைப் பெறுவதற்குரிய நெறியைக் கூறுவதாதலின் இதுவும் ஞானவெற்றியே.

4. பாடுதுறை : திருஉந்தியார்

தத்துவராயர் பாடிய பாடுதுறையில் 101 ஆம் பதிகம் திருஉந்தியார். தத்துவராயர் வேதாந்தி. காலம் 15 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி.

அஞ்ஞான காரிய மனைத்தையு மறவிட்டு
விஞ்ஞான மானேமென் றுந்தீபற
வெளியாகி நின்றேமென் றுந்தீபற.

என்பது முதற்பாடல். இதில் விஞ்ஞானம் என்பது மெய்ஞ்ஞானத்தையே. வி - மேலான' விஞ்ஞானம் - மேலான ஞானம், உயர்ந்த ஞானம். அஞ்ஞானத்தை விட்டு மெய்ஞ்ஞானம் பெற்றதைக் கூறுதலின் இதுவும் ஞானவெற்றியே.

5. அவிரோத உந்தியார்

வீரசைவநூல். 100 பாடல்கள். ஆசிரியர் சாந்தலிங்க சுவாமிகள். காலம் 17 ஆம் நூற்றாண்டு. திருப்போரூர் சிதம்பர சுவாமிகள் இதற்கு உரை செய்துள்ளார்.

தவிரா விரோத சமயநூல் அன்றால்
அவிரோத உந்தியென் றுந்தீபற
ஆமிந்நூல் நாமமென் றுந்தீபற.

என்னும் இரண்டாவது செய்யுள் இந்நூலின் பெயர்க் காரணங் கூறுவது. ''ஒன்றுக்கு ஒன்று மாறுத விரோதத்தினையுடைய சமய நூல்களில் இஃதும் ஒன்றன்று; ஆதலால் அவிரோத உந்தி என்று வழங்குதற்கு உரித்தாம் இந்நூற் பெயர் என்றவாறு, அவிரோதம் - பக்ஷபாதம் இல்லாமை. இது நூற்பெயர்காட்டியது'' என்பது சிதம்பர சுவாமிகள் உரை.

இனி, வள்ளற்பெருமான் பாடியருளிய திருஉந்தியார்க்கு வருவோம்.

6. திருஅருட்பா: திருஉந்தியார்

திருஅருட்பாவில் ஆறும் திருமுறையில் 107-வது பதிகம் திருஉந்தியார். 10 பாடல்கள். அனைத்தும் கலித்தாழிசை,

இரவு விடிந்தது இணையடி வாய்த்த
பரவி மகிழ்ந்தேன் என்று உந்தீபற
பாலமுது உண்டேன் என்று உந்தீபற 1

பொழுது விடிந்தது பொற்பதம் வாய்த்த
தொழுது மகிழ்ந்தேன்என்று உந்தீபற
தூயவன் ஆனேன் என்று உந்தீபற. 2

தூக்கம் தொலைந்தது சூரியன் தோன்றினன்
ஏக்கம் தவிர்ந்தேன்என்று உந்தீபற
இன்னமுது உண்டேன்என்று உந்தீபற. 3

துன்பம் தவிர்ந்தது தூக்கம் தொலைந்தது
இன்பம் கிடைத்ததென்று உந்தீபற
எண்ணம் பலித்ததென்று உந்தீபற. 4

ஞானம் உதித்தது நாதம் ஒலித்தது
தீனந் தவிர்ந்ததென்று உந்தீபற
சிற்சபை கண்டேனென்று உந்தீபற. 5

திரையற்று விட்டது செஞ்சுடர் தோன்றிற்று
பரைஒளி ஓங்கிற்றென்று உந்தீபற
பலித்தது பூசையென்று உந்தீபற 6

உள்ளிருள் நீங்கிற்றுஎன் உள்ளொளி ஓங்கிற்றுத்
தெள்ளமுது உண்டேன்என்று உந்தீபற
தித்திக்க உண்டேன்என்று உந்தீபற. 7

எந்தையைக் கண்டேன் இடரெலாம் நீங்கினேன்
சிந்தை மகிழ்ந்தேன்என்று உந்தீபற
சித்திகள் பெற்றேன் என்று உந்தீபற. 8

தந்தையைக் கண்டேன் நான் சாகா வரம்பெற்றேன்
சிந்தை களித்தேன்என்று உந்தீபற
சித்தெலாம் வல்லேன் என்று உந்தீபற 9

முத்தியைப் பெற்றேன்அம் முத்தியினால் ஞான
சித்தியை உற்றேன் என்று உந்தீபற
சித்தனும் ஆனேன்என்று உந்தீபற. 10

10 பாடல்களும் இரண்டடிக் கலித்தாழிசை. முதல்அடி நான்குசீர். இரண்டாம் அடி ஆறுசீர். பின் மூன்று சீர்கள் மூன்றாவது வரியாக மடக்கியும், இரண்டாவது அடியைச் சேர்ந்தது என்று தெரிவதற்காகச் சற்று உள்ளடக்கியும் எழுதப் பெற்றுள்ளன. ஞானம் உதித்ததையும் உள்ளொளி ஓங்கியதையும் சாகாவரம் பெற்றதையும் ஞானசித்தி பெற்றதையும் கூறும் இது ஞானவெற்றி என்பதிலும் ஐயமுண்டோ. திருவாசகத் திருவுந்தியாரும் திவ்வியப்பிரபந்தத் திருவுந்தியாரும் பாட்டுடைத் தலைவனின் வெற்றிகளையே கூறின. திருவருட்பாத் திருவுந்தியாரோ பாடுபவரது - வள்ளலாரது - ஞானவெற்றியைக் கூறுகிறது.

இதுகாறும் கண்டவற்றால் திருஉந்தியார் என்பது ஞானவெற்றியைக் கலித்தாழிசையால் பாடுவது என்பதும், முன்னையோர் கொண்ட அம்மரபினுக்கேற்ப வள்ளற்பெருமானும் தாம் பெற்ற ஞானவெற்றியைத் திருவுந்தியாராக அருளிச் செய்துள்ளார் என்பதும் போதரும்.

ஆ.பா வுக்கு முந்திய பதிப்புகள் அனைத்தும் கலித்தாழிசை என்று யாப்புமட்டுமே குறித்தன. ஆ.பா. மட்டும் பௌளி, மிச்ரசாபு என்று இராக தாளங் குறிக்கிறார்.

### 7. பந்தாடல்

பந்து விளையாட்டு இக்காலத்தில் ஆண்களின் விளையாட்டாக உள்ளது. பண்டைக் காலத்தில் இது பெண்களுக்கே உரிய விளையாட்டாக இருந்தது. கொம்மி, கோலாட்டம், அம்மானை, ஊசல் (ஊஞ்சல்), உந்தி பறத்தல், தெள்ளேணம், தோணோக்கம், பந்து முதலியவை பண்டைக் காலத்திய மகளிர் விளையாட்டுகளாம். பெண்களை வருணித்த புலவர்கள் 'பந்தார்விரலி' என்றும் 'பந்தணைவிரலி' என்றும் வருணித்தனர். கும்பகோணத்திற்கு அருகிலுள்ள கொட்டையூரில் எழுந்தருளியிருக்கும் அம்பிகையின் பெயர் பந்தாடுநாயகி என்பது. வடமொழியில் கந்துககிரீடாம்பிகை. கந்துகம் - பந்து. திருக்கொட்டையூர்த் தேவாரத் திருப்பதிகத்தில் (திருத்தாண்டகம்) திருநாவுக்கரசர் 'பந்தாடு மென்விரலாள் பாகன் கண்டாய்' என்று பாடுகின்றார். சங்க இலக்கியங்களில் பலவிடத்தில் பெண்களின் பந்தாடல் குறிப்பிடப் பெறுகிறது. 'ஆயமொடுகெழீஇப் பந்துவழிப் படர்குவள் ஆயினும்' - அகநானூறு 153. 'பந்தாடு மகளிரிற் படர்தரும்' - ஐங்குறு நூறு 295. சிந்தாமணி, சிலப்பதிகாரம், கம்பராமாயணம் ஆகிய நூல்களில் மகளிரின் பந்தாடல் பல இடங்களிற் கூறப்

பெறுகிறது. 'அணியார் கோதை பூம்பந்தாடு மவளைக் காண்மின்' என்பது சீவக சிந்தாமணி 925. இங்கே பந்து பூம்பந்து என்று சொல்லப்பட்டிருப்பதைக் காண்க. சிலப்பதிகாரத்தில் (29. வாழ்த்துக்காதை) அம்மானை வரி, கந்துக வரி, ஊசல் வரி என்பன வரிப்பாடல்கள். அம்மானை வரி 4 பாடல்கள் அம்மானை ஆடுவதையும், கந்துக வரி 3 பாடல்கள் பந்தடிப்பதையும், ஊசல் வரி 3 பாடல்கள் ஊஞ்சல் ஆடுவதையும் கூறுவன. கந்துக வரியின் முதற் பாட்டை மட்டும் கீழே எடுத்துக் காட்டுகிறோம்.

*பொன்னிலங்கு பூங்கொடி பொலஞ்செய்கோதை வில்லிட*
*மின்னிலங்கு மேகலைக ளார்ப்பவார்ப்ப வெங்கணும்*
*தென்னன்வாழ்க வாழ்கவென்று சென்று பந் தடித்துமே;*
*தேவரார மார்பன்வாழ்க வென்றுபந் தடித்துமே;*

— சிலப்பதிகாரம், 29. வாழ்த்துக்காதை 20.

கம்பராமாயணம் நாட்டுப்படலத்தில் (பாட்டு 48) 'பந்தினை இளையவர் பயில் இடம்' என்று மகளிர் பந்து விளையாடுமிடம் கூறப்படுகிறது. இளையவர் - இளமங்கையர். கொங்குவேளிர் இயற்றிய பெருங்கதையில் **பந்தடி கண்டது** என ஒரு காதையே உள்ளது. அதில் மகளிர் பந்தாடுதல் பற்றிய அரிய செய்திகள் பல காணப்படுகின்றன. வாசவதத்தை, பதுமாபதி என்னும் அரசமாதேவியர் இருவரும் தோழியரோடு பந்தடி காண்கிறார்கள். நெட்டி, பஞ்சு, உலண்டு நூல், மயிற்பீலி, பாம்பின் தோல், நூல், கயிறு இவை கொண்டு சுற்றித் தைக்கப் பெற்ற நொய்ம்மையான பந்துகள். வெண்மை செம்மை கருமை நிறமுடைய பந்துகள். ஏழு பந்துகளை எடுத்து ஆடுகிறாள் இராசனை என்பவள். ஒன்றால் ஒன்றை அடித்து உயரப் போக்கிக் கையாலும் காலாலும் ஆடுகிறாள். 1000 கை அடிக்கிறாள். அடுத்தவளான காஞ்சனமாலை 1500 கை அடிக்கிறாள். அயிராபதி 2000 கை அடிக்கிறாள். விச்சுவலேகை கையால் அடிப்பதோடு பந்தடிக்கும் கருவியாகிய கோல் கொண்டும் அடிக்கிறாள். அவள் 2500 கை அடித்து அகன்றதும் ஆரியை வருகிறாள். 3000 கை அடிக்கிறாள். கடைசியாக வருகிறாள் மானனீகை என்ற பெயரில் தோழியாகக் கரந்துறையும் கோசலத்தரசன் மகள். பந்தாடும் இலக்கணம் பல பேசி ஆடத்தொடங்குகிறாள். என்ன மாயமோ என்று கூடியிருந்தோர் எல்லோரும் வியந்து கூற 8000 கை அடித்து ஏறுகிறாள். இவளுக்கு மேல் பந்தடிப்பார் யாருமில்லை. இவளது ஆட்டத்தை ஆசிரியர் விரிவாக வருணிக்கிறார்.

இலக்கியங்களில் மகளிர் பந்தாடல் இவ்வண்ணமாக இருப்ப, ஞான நூல்கள் பந்தாடலை விட்டனவோ? தத்துவராயர் பாடுதுறையில் பந்து என்ற தலைப்பில் 10 பாடல்களைப் பாடியுள்ளார். அவை பந்தை விளித்துப் பாடியன. வள்ளற்பெருமானும் பந்தை விளித்துப் பாடிய பாடல் ஒன்றுண்டு.

இனி, வள்ளற்பெருமான் பாடியருளிய 'பந்தாடல்' பாட்டிற்கு வருவோம். 1 பல்லவி. 10 கண்ணிகள் (சரணங்கள்). இவை ஒரு தொடர். தோழியை விளித்துப் பாடியன. இவையன்றித் தனியாக ஒரு கலிவிருத்தம். பந்தை விளித்துப் பாடியது. ஆக 1-ம் 10-ம் 1-ம் —12.

ஆடேடி பந்து ஆடேடி பந்து
ஆடேடி பந்து ஆடேடி பந்து

இது பல்லவி.

வாழிஎன் தோழிஎன் வார்த்தைகேள் என்றும்
மரணமில் லாவரம் நான்பெற்றுக் கொண்டேன்
சூழியற் செஞ்சுடர் தோற்றுறு கீழ்பால்
தூய்த்திசை நோக்கினேன் சீர்த்திகழ் சித்தி
ஊழிதோ றூழிநின் றுடுவன் நீயும்
உன்னுதி யேல்இங்கே மன்னரு ளாணை
ஆழி கரத்தனிந் தாடேடி பந்து
அருட்பெருஞ் சோதிகண் டாடேடி பந்து.

என்பது முதற்கண்ணி. இப்படி 10 கண்ணிகள். கண்ணிகள் தோறும் மகுடம் 'அருட் பெருஞ்ஜோதி கண்டாடேடி பந்து' என்பது. அதாவது ஒவ்வொரு கண்ணியும் 'அருட் பெருஞ்ஜோதி கண்டாடேடி பந்து' என முடிகிறது. 'அருட்பெருஞ்ஜோதி கண்டு ஆடேடி' என்பதால் இது அருட்பெருஞ்ஜோதி வழிபாட்டுக் காலத்திற் பாடப்பெற்ற தென்பது விளங்கும், மற்ற இசைப்பாடல்கள் போலன்றி இதன் கண்ணிகள் ஒவ்வொன்றும் ஓர் எண்சீர் விருத்தமாக அமைந்துள்ளது இதன் தனிச்சிறப்பு.

இதன் முதல் நான்கு கண்ணிகளிலும் முறையே கிழக்கு,மேற்கு, தெற்கு, வடக்கு, என்னும் நான்கு திசைகளும் கூறப்பெறுகின்றன.

'கீழ்பால் தூய்த்திசை நோக்கினேன்' என முதற் கண்ணியிலும்
'மேற்றிசை நோக்கி வந்தேன்' என 2 ஆம் கண்ணியிலும்
'தெ:ற்பாலே நோக்கினேன்' என 3 ஆம் கண்ணியிலும்
'உத்தரம் எனும்ஓர்பொதுவளர் திசையை நோக்கி வந்தனன் என 4ஆம் கண்ணியிலும்

கூறுகின்றார். உத்தரம் - வடக்கு. பொது - சபை. உத்தரம் எனும் ஓர் பொது என்பது உத்தரஞானசிதம்பரம் சத்தியஞானசபையைக் குறிப்பது. உத்தரம் - உத்தரஞான சிதம்பரம். அதில் ஓர் பொது - சத்தியஞானசபை. நாற்றிசையும் நோக்கி ஆடுதல் பந்தாடும் மரபென்பது பெருங்கதையாலும் தத்துவராயர் பாடுதுறையாலும் தெரிகிறது.

தானேர் வாங்கித் தனித்தனி போக்கி
நாற்றிசைப் பக்கமும் நான்கு கோணமும்
காற்றினுங் கடிதாக் கலந்தன ளாகி

— பெருங்கதை, 4/12 பந்தடி ண்டது, 79 - 81

குணக்குங் குடக்கொடு தெற்கும் வடக்குங்
கோணங் களுமாகிப் பந்தாடா நின்றேன்
அணுக்கஒண் ணுஅறி வாவாயோ பந்தே
அங்குமிங் கும்மாய் அலைவாயோ பந்தே

— பாடுதுறை, 110 - பந்து 8

நான்கு நேர்த்திசைகளோடு நான்கு கோணத்திசைகளையும் சேர்த்து எட்டுத் திசைகளைப் பெருங்கதையும் பாடுதுறையும் குறிக்கின்றன.

தெற்கில் பல காலம் வழிபட்டிருந்து பின் வடக்கு நோக்கி வந்து உத்தரஞான சிதம்பரத்தை அமைத்த வள்ளற் பெருமானுக்கு இத்திசைக் குறிப்பு மரபு மிகவும் நல்லதாயிற்று. திசைகள் நான்கையும் கிழக்கு மேற்கு தெற்கு வடக்கு என்ற வரிசையிற்குறிப்பதே முறை கிழமேல், தென் வடல் என்ற வழக்காற்றைக் காண்க. தத்துவராயரும் வள்ளற் பெருமானும் இம்முறையிலேயே திசைகளைக் குறிக்கின்றனர்.

'மரணமிலாப் பெருவரம் நான் பெற்றுக் கொண்டேன்' (1), 'இறவாப்பெருவரம்யான் பெற்றுக்கொண்டேன்' (2;3), 'சாகா வித்தையைக் கற்றனன்' (4), 'தப்பாலே சகத்தவர் சாவே துணிந்தார், நான் சாதலைத் தவிர்த்தே எப்பாலும் எக்காலும் இருத்தலே பெற்றேன்' (5), வெங்கேத மரணத்தை விடுவித்து விட்டேன்' (6), என ஆறு கண்ணிகளில் தான் பெற்ற மரணமிலாப் பெருவாழ்வையும், 'செத்தாரை மீட்கின்ற திண்மையைப் பெற்றேன்' (7), 'இறந்தாரை எல்லாம் எழுப்புதல் வல்லேன்' (8), என இரண்டு கண்ணிகளில் தான் பெற்ற செத்தாரை எழுப்பும் வல்லபத்தையும் கூறுகின்ருர். 9 ஆம் கண்ணியில் 'என்மார்க்கம் இறவாத சன்மார்க்கம்' என்கிருர். 'சித்திகள் பற்பல, பாரிடை வானிடைப் பற்பல காலம் இன்று தொட்டு என்றும் விளைவிப்பன். நீ அவ்அதிசயம் பார்க்கலாம்' எனப் பத்தாம் கண்ணியிற் கூறுகின்ருர். நான்கு வேதங்களும் ஆகமங்களும் சாத்திரங்களும் சந்தைப் படிப்பு, நம் சொந்தப் படிப்போ என்று நான்காம் கண்ணியிற் கேட்கின்ருர். இவ்வாறு அரிய பெரிய விஷயங்களைக் கொண்டது இப்பந்தாடல். பந்து விளையாடுவோர் நாற் புறமும் கோடிட்டு எல்லை அமைத்துக் கொண்டு ஆடுவார்கள். கோட்டுக்கு வெளியே போகக் கூடாது. போனல் 'அவுட்' (out) ஆகிவிடுவர். வள்ளலாரும் எல்லை தாண்டாமல் பந்தாடச் சொல்கிருர். 'சுத்த சன்மார்க்கச் சோதி என்ரேதிய வீதியை விட்டே அப்பாலே போகாமல் ஆடேடி பந்து' என்கிருர்.. சுத்த சன்மார்க்க வீதியை விட்டு அப்பாலே போகாமல் ஒழுங்காக ஆடினல் அதன் பயனுகிய இறவாப் பெருநிலையைப் பெறலாம். பந்தாடல் முழுவதும், தாம் பெற்ற மரணமிலாப் பெருவாழ்வை விதந்து கூறுவதாகும். 10 ஆம் கண்ணியின் ஈற்றில் பல்லவி சிறிதுமாறுபடுகிறது. தொடக்கத்தில் பல்லவி

ஆடேடி பந்து ஆடேடி பந்து
ஆடேடி பந்து ஆடேடி பந்து

என்று இருந்தது, 10 ஆம் கண்ணியில் ஈற்றில்

ஆடேடி பந்து ஆடேடி பந்து
அருட்பெருஞ் ஜோதிகண் டாடேடி பந்து

என்று இருக்கிறது. கண்ணிகளின் மகுடத்தை ஒட்டிப் பெருமான் இம்மாற்றத்தைச் செய்கிறுர். 'அருட்பெருஞ்ஜோதி கண்டாடேடிபந்து' என்பது கண்ணிகளின் மகுடம். அதையே ஈற்றில் பல்லவியின் இரண்டா மடியாக அமைக்கிறுர். அமைத்து முடிக்கிறுர். இதுவும் இப்பாடலில் ஒரு சிறப்பு.

இப்பந்தாடலுக்கு ஆரும்திருமுறை முதற்பதிப்பு முதல் சென்னை இராச மாணிக்கம்பிள்ளை பதிப்பு முடிய எல்லாப்பதிப்புகளிலுமே பெயர் ஆனந்த மேலீடு, இராகம் பியாகடை, தாளம் அடதாள சாப்பு. ஆ. பா. பதிப்பில் பெயர் பந்தாடல், இராகம் பேகட, தாளம் ஆதி. இனி, இதை ஒட்டி, பந்தைப் பார்த்துப் பாடிய ஒரு கலிவிருத்தம் :

பூவாம லேநிதம் காய்த்த இடத்தும்
பூவார் மலர்கொண்டு பந்தாடா நின்றேன்
சாவா வரம்தந்து வாழ்வாயோ பந்தே
சாவாமல் என்னெடு வீழ்வாயோ பந்தே.

இது பந்தை விளித்துப் பாடியதே. தத்துவராயர் பாடுதுறையும் பந்தை விளித்துப் பாடியதே. பந்தை நோக்கிப்பாடுவது, தோழியை நோக்கிப்பாடுவது எனப் பந்துப் பாட்டு இருவகை. நம் பெருமான் இருவகையும் பாடுகிறுர்.

'பூவாமலே நிதம் காய்த்த இடத்தும்' என்னும் முதல் அடியைக் காண்க. பூக்காமலே காய்க்கும் தாவரங்களும் உள.

பூவாதே காய்க்கும் மரமுமுள மக்களுளும்
ஏவாதே நின்றுணர்வார் தாமுளரே - தூவா
விரைத்தாலும் நன்ருகா வித்தெனவே பேதைக்கு
உரைத்தாலுந் தோன்ரு துணர்வு.

என்பது ஒளவையார் அருளிய நல்வழி (35 ஆம் செய்யுள்.) ஏவாது உணரும் மக்களுக்கு உதாரணமாகப் பூவாது காய்க்கும் மரத்தை ஒளவையார் கூறுகிறுர். பூக்காமலேகாய்ப்பன, பூத்துக்காய்ப்பன, பூத்துங் காய்க்காதன எனத் தாவரங்களுள் மூன்று வகை உண்டு. ஒவ்வொன்றுக்கும் ஓர் உதாரணத்தை ஒளவையார் பாடியதாக வழங்கும் வேருெரு செய்யுள் கூறுகிறது.

**சொல்லாம லேபெரியர் சொல்லிச் செய்வர்சிறியர்**
**சொல்லியுஞ் செய்யார் கயவரே - நல்ல**
**குலாமாலே வேற்கண்ணாய் கூறுவமை நாடில்**
**பலாமாவைப் பாதிரியைப் பார்.**

சொல்லாமலே செய்வர் பெரியர்.
சொல்லிச் செய்வர் சிறியர்.
சொல்லியுஞ் செய்யார் கயவர்.
இவர்களுக்கு உவமை (உதாரணம்) பலா, மா, பாதிரி.
பலா மரம் பூவாமலே காய்க்கும்.
மா மரம் பூத்துங் காய்க்கும்.
பாதிரி மரம் பூத்துங் காய்க்காது.

சொல்லாமலே செய்யும் பெரியவர்கள் பூவாமலே காய்க்கும் மரம் போல்வர். சொல்லிச் செய்யும் சிறியவர்கள் பூத்துக் காய்க்கும் மரம்போல்வர். சொல்லியும் செய்யாத கயவர்கள் பூத்துங்காய்க்காத மரம் போல்வர். 'பூவாமலே நிதம் காய்த்த இடத்தும்' என்னும் வள்ளற்பெருமான் வாக்கினைப் படிக்கும்போது 'பூவாதே காய்க்கும் மரமுமுள' 'பலா மாவைப் பாதிரியைப்பார்' என்னும் ஔவையார் வாக்குகள் நினைவுக்கு வருகின்றன. பூவாமலே காய்ப்பதற்கு இது வெளிப்படைப் பொருள். இன்னும் மறை பொருளும் உண்டு. அது பக்குவரே உணரத்தக்கது.

## 7. ஆனந்தக்களிப்பு

1. நல்ல மருந்து
2. ஞான மருந்து
3. ஆனந்தப்பரிவு
4. சிவசிவஜோதி
5. ஜோதியுள்ஜோதி
6. அருள் அற்புதம்
7. ஆணிப்பொன்னம்பலக் காட்சி
8. அருட்காட்சி
9. மெய்யருள் வியப்பு
10. கண்புருவப்பூட்டு
11. ஊதூது சங்கே
12. சின்னம் பிடி
13. முரசறைதல்

இவற்றுள் முதலாவதாகிய 'நல்ல மருந்து' என்னும் ஒன்று மட்டும் (பழைய) இரண்டாம் திருமுறையைச் சேர்ந்தது. நம் வரலாற்று முறைப் பதிப்பில் மூன்றும் திருமுறை. ஏனைய பன்னிரண்டும் ஆறும்திருமுறையைச் சேர்ந்தவை.

## 1. நல்ல மருந்து

இது புள்ளிருக்குவேளூர் வைத்தியநாதரைப் பாடியது. புள்ளிருக்குவேளூர் இந்நாளில் வைத்தீஸ்வரன்கோயில் என்று விளங்குகிறது. பாடியகாலம், வள்ளற் பெருமான் சென்னை வாழ்வை நீத்துச் சிதம்பரம் பக்கம் வந்தகாலம்.

1 பல்லவி. 29 கண்ணிகள்.

நல்ல மருந்திம் மருந்து - சுகம்
நல்கும் வைத்திய நாத மருந்து.

என்பது பல்லவி.

அருள் வடிவான மருந்து — நம்முள்
அற்புத மாக அமர்ந்த மருந்து
இருளற ஓங்கும் மருந்து — அன்பர்க்
கின்புரு வாக இருந்த மருந்து. —நல்ல

என்பது முதற்கண்ணி. இப்படி 29 கண்ணிகள். புள்ளிருக்குவேளூர் இறைவனின் திருப்பெயர் வைத்தியநாதன். அவரே வைத்தியநாதர். மருத்துவர், அத்தலத்தில் திருச்சாந்துருண்டை என்னும் மண்மருந்து வழங்கப்பெறுகிறது. இச்சிறப்புகளைக் கருதியே வள்ளற்பெருமான் வைத்தியநாதரை 'நல்லமருந்து இம்மருந்து' என்று பாடத் தொடங்குகிறார். வைத்தியநாதர் மருந்து கொடுக்கும் மருத்துவராக மட்டுமல்ல அவரே மருந்தாகவும் இருக்கிறார். 'மந்திரமும் தந்திரமும் மருந்து மாகித் தீராநோய் தீர்த்தருள வல்லான் தன்னை' எனத் திருநாவுக்கரசர் புள்ளிருக்கு வேளூர்த் திருத்தாண்டகத்திற் பாடுகிறார். வள்ளற்பெருமானும் இறைவனை மணி, மந்திர, மருந்தாகப் போற்றித் துதிக்குமிடங்கள் திருவருட்பாவில் பல உள.

பல்லவியில் 'வைத்தியநாத மருந்து' என வைத்தியநாதர் பெயர் சுட்டப் பெற்றது. 9 ஆம் கண்ணியில் 'வேளூர் என்னும் தலத்திலிருக்கு மருந்து' எனத் தலப்பெயர் குறிப்பிடப்பெற்றது. இத்தலம் பாடல்பெற்ற சிவத்தலமாயினும் இங்கு முருகப் பெருமானுக்குத் தனிச்சிறப்புண்டு. இது முருகன் வழிபட்டதலமன்றி வழிபடப் பெறும் தலமுமாகும். செல்வமுத்துக்குமரன் என்பது இங்கெழுந்தருளியுள்ள முருகப்பெருமான் திருப்பெயர். 29 ஆவதாகிய ஈற்றுக்கண்ணியில் இப்பெயர் குறிப் பிடப் பெறுவதோடு, இறைவி தையல்நாயகி பெயரும் குறிப்பிடப் பெறுகிறது.

மூவர்க் கரிய மருந்து — செல்வ
முத்துக் குமரனை யீன்ற மருந்து
நாவிற் கினிய மருந்து — தையல்
நாயகி கண்டு தழுவு மருந்து —நல்ல

என்பது 29 ஆவது கண்ணி பிறப்பை ஒழிக்கும் மருந்து. இறப்பைத் தவிர்க்கும் மருந்து இறந்தால் எழுப்பும் மருந்து, எல்லாப்பிணிக்கும் இதுவே மருந்து என்றெல்லாம் இறைவன் இதிற் போற்றிப் புகழப்பெறுவது அழகிது.

தொ.வே. முதல் நான்கு திருமுறைப் பதிப்பு, பொன்னேரி சுந்தரம் பிள்ளை, பிருங்கிமாநகரம் இராமசாமி முதலியார், ச.மு. கந்தசாமிப் பிள்ளை பதிப்புகளில் இதன் பெயர் 'ஆனந்தக் களிப்பு' என்றிருக்கிறது. இராகதாளக் குறிப்புகள் இல்லை சென்னை இராசமாணிக்கம் பிள்ளை பிற ஆனந்தக்களிப்புகளினிருந்து இதனை வேறுபடுத்திக் காட்டுவதற்காக ஆனந்தக்களிப்பு 4, என எண்கொடுப்பதோடு, நாதநாமக்கிரியை ரூபகதாளம் என இராகதாளங் குறிக்கிறார். ஆ.பா. பதிப்பில் பெயர் 'நல்ல மருந்து' இராகம் ச.மு.க கொண்டதே. தாளம் மட்டும் மிச்ரசாபு எனவேறுபடுகிறது.

## 2. ஞானமருந்து

1 பல்லவி. 33 கண்ணிகள்.

ஞான மருந்திம் மருந்து - சுகம்
நல்கிய சிற்சபா நாத மருந்து

என்பது பல்லவி முந்திய, நல்லமருந்து வைத்தியநாதரைப் பாடியது. இந்த, ஞான மருந்து சிற்சபாநாதரைப் பாடியது. நல்லமருந்தும் ஞானமருந்தும் பல வகையில் ஒத்தவை. இரண்டையும் அடுத்தடுத்துப் படித்துப் பார்த்தாலே அதுவிளங்கும் பல்லவியில் தான் எவ்வளவு ஒற்றுமை.

நல்ல மருந்திம் மருந்து - சுகம்
நல்கும் வைத்திய நாத மருந்து. — நல்லமருந்தின் பல்லவி

ஞான மருந்திம் மருந்து - சுகம்
நல்கிய சிற்சபா நாத மருந்து — ஞானமருந்தின் பல்லவி

இரண்டிலும், பல்லவியில் மருந்து என்ற சொல் இருமுறையும், கண்ணிகளில் நான்கு முறையும் வருகிறது. அதாவது ஒவ்வொரு வரியிலும் மருந்து என்ற சொல் தவறாது வருகிறது.

அருட்பெருஞ் ஜோதி மருந்து - என்னை
ஐந்தொழில் செய்தற் களித்த மருந்து
பொருட்பெரும் போக மருந்து - என்னைப்
புறத்தும் அகத்தும் புணர்ந்த மருந்து.

இது முதலாவது கண்ணி. இப்படி 33 கண்ணிகள். முதல் இரண்டு கண்ணிகளிலும் ‘அருட்பெருஞ்ஜோதி மருந்து’ என்றும், 18 ஆம் கண்ணியில் ‘சாலை விளக்கு மருந்து’ சுத்த சமரச சன்மார்க்க சங்க மருந்து’ என்றும் சங்கம், சாலை, அருட்பெருஞ்ஜோதி குறிக்கப்படுவதால், இது சங்கமும் சாலையும் ஏற்பட்ட காலத்தின்பின் அருட்பெருஞ் ஜோதி வழிபாட்டுக் காலத்தில் பாடப்பெற்றதென்பது நன்கு விளங்கும். ஐந்தொழில் செய்யும் ஆற்றல் பெற்றது (1), கையில் பொற்கங்கணம் கட்டுவிக்கப் பெற்றது (3) சிவமாக்கிக் கொள்ளப்பெற்றது (14) ஆகிய பெரும் பேரனுபவங்கள் இதனுட் சொல்லப் பெறுகின்றன. ‘கற்பூர ஜோதி மருந்து, பசுங்கற்பூர நன்மணங் காட்டு மருந்து’ (17), என்பது அருட்பெருஞ்ஜோதியைக் கற்பூர ஜோதியாகக் குறிப்பது. பசுங்கற்பூரம் - பச்சைக் கற்பூரம்.

முன்பு வைத்தியநாதரைப் பாடியதை எண்ணி, பின்பு அதே பேரன்று சபா நாதரை - அருட்பெருஞ்ஜோதியை - ப் பாடியது இது. தொ.வே. முதல் நான்கு திருமுறை முதற்பதிப்பில் அது (நல்ல மருந்து) ஆனந்தக்களிப்பு என்றுபெயர் பெற்றது போன்றே, ஆறுந்திருமுறை முதற்பதிப்பில் (1885) இதுவும் (ஞானமருந்தும்) ஆனந்தக்களிப்பு என்றே பெயர் பெற்றது. பின்பதிப்புகளும் அப்பெயரையே வழங்கின. சென்னை இராசமாணிக்கம் பிள்ளை மட்டும் ஏனைய ஆனந்தக்களிப்புப்பாடல் களிலிருந்து இதனை வேறுபடுத்திக் காட்டுவதற்காக ஆனந்தக் களிப்பு 1 என்று எண் கொடுத்தார். ஆ.பா. ஞானமருந்து எனப்பேரிட்டார். அதற்கு நல்லமருந்து என்ற பெயரும், இதற்கு ஞானமருந்து என்ற பெயருமே மிகப் பொருத்தமான பெயர்கள். ஆ.பா. இட்ட இப்பொருத்தமான பெயர்களையே நம் வரலாற்று முறைப்பதிப்பில் நாமும் கொண்டோம். பல பதிகங்களை ஆனந்தக்களிப்பு எனப்பெயரிடுவதினும், அல்லது ஆனந்தக்களிப்பு 1, 2, 3, 4 என எண் குறிப்பதினும், அவ்வவற்றிற்கு அவ்வவற்றின் தொடக்கம், அல்லது மகுடம் அல்லது சிறந்த தொடர் அல்லது திரண்டகருத்து இவ்வாறு தக்க யாதானுமொன்றைக் கொண்டு தனித் தனியாகச் சிறப்பாகப் பெயரிடு தலே முறையாம். அம்முறையில் நல்லமருந்தென்று தொடங்குவதற்கு ‘நல்லமருந்து’ என்ற பெயரும், ஞானமருந்தென்று தொடங்குவதற்கு ‘ஞானமருந்து’ என்ற பெயரும் மிகப் பொருத்தமாம். ஆறுந்திருமுறை முதற்பதிப்பில் ‘ஞானமருந்து’க்கு இராக தாளம் இந்துஸ்தானி, அனுஷிததாளம் எனக்குறிக்கப்பட்டுள்ளது. பொ.சு., பி.இரா; சென்னை இரா. பி. ஆகியோரும் அவ்வாறே குறிப்பிட்டனர். ச.மு.க. பதிப்பில் இராக தாளக் குறிப்பு இல்லை. ஆ.பா. பதிப்பில் நாதநாமக்கிரியை, மிச்ரசாபு. நல்லமருந்து, ஞானமருந்து ஆகிய இரண்டுக்குமே ஆ.பா. நாதநாமக்கிரியை, மிச்ரசாபு என்று ஒரே இராக தாளங்களைக் குறிப்பது பொருத்தமே. நல்ல மருந்துக்கு முதற்பதிப்பிலும் பழம் பதிப்புகளிலும் இராகதாளக் குறிப்பு இல்லை. ஆ.பா.தான் முதன்முதலாக இராக தாளங்குறிக்கிறார். ஆனால்ஞானமருந்துக்கு ஆறும் திருமுறை முதற்பதிப்பிலேயே இராக தாளக் குறிப்பு உள்ளது. அக்காலத்திலேயே இந்துஸ்தானி இராகம் வந்து பரவலாகி விட்டது போலும். இராகம், இந்துஸ்தானி என்று குறுப்பிடப் பெறுகிறது. நல்ல மருந்துக்கு நாதநாமக்கிரியை ருபகம் என்று இராக தாளங் கொண்ட இராசமாணிக்கம் பிள்ளை கூட இந்த ஞானமருந்துக்கு முதற்பதிப்பிற் கண்ட இந்துஸ்தானி இராகத்தை யும் அனுஷிததாளத்தையுமே கொண்டார்.

**3. ஆனந்தப் பரிவு.**

கலித்தாழிசை 10 பாடல்கள்.

நானந்த மடையாதெந் நாளினுமுள்
ளவனுகி நடிக்கும் வண்ணம்
ஆனந்த நடம்புரிவான் ஆனந்த
அமுதளித்தான் அந்தோ அந்தோ. 1

இப்படி 10 கலித்தாழிசைகள், அந்தோ அந்தோ என்பது எல்லாப் பாடல்களிலும் மகுடமாக இருத்தலால் அந்தோப்பத்து என முதற்பதிப்பில் இதற்குப் பெயரிடப் பெற்றுள்ளது. சென்னைப்பதிப்பு வரை இப்பெயரே நீடித்தது. ஆ. பா. ஆனந்தப் பரிவு என்ற புதிய பெயரை இட்டார். முதற்பதிப்பு முதல் சென்னைப்பதிப்பு வரை 'கலித்தாழிசை' என்பதே பாவினம், ச. மு. க. பதிப்பில் மட்டும் 'தாழிசை' என்று குறித்தார். இவ்வெல்லாப்பதிப்புகளிலுமே இராக தாளக்குறிப்பு இல்லை, ஆ. பா.மட்டுமே முதன் முதலாக சுத்தசாவேரி, ஆதிதாளம் என இராகதாளங் குறிக்கிருர்.

'எக்கரையுங் காணுதே' என்று தொடங்கும் கலித்தாழிசை யொன்று 'அந்தோ அந்தோ' என்ற மகுடத்துடன், பொருள் வகையிலும் ஒத்ததாய் ஆனந்தப்பரிவுடன் சேர்க்கத்தக்கதாய் இருத்தலின் அதை ஆனந்தப்பரிவு என்ற தலைப்பின் கீழேயே 10 பாடல்களையும் அடுத்து இரண்டாம் பிரிவாக (2) என்று எண்ணிட்டு, பாடலுக்குத் தொடர் எண்ணிடாது தனியே சேர்த்துள்ளார். நாம் நம் வரலாற்று முறைப்பதிப்பில் பத்தோடு பதினென்ருவதாக அதனைப் பதிகத்துடனேயே சேர்த்துவிட்டோம். நூலின் அடிக்குறிப்பில் இதனை விளக்கியுள்ளோம். இவ்வொரு கலித்தாழிசைக்கு ஆ.பா. பதிப்பில் எதுகுலகாம்போதி, சாப்பு என்பது இராக தாளக் குறிப்பு.

**4. சிவசிவ ஜோதி.**

1 பல்லவி. 32 கண்ணிகள்.

*சிவசிவ சிவசிவ ஜோதி - சிவ*
*சிவசிவ சிவசிவ சிவசிவ ஜோதி.*
*சிவசிவ சிவசிவ ஜோதி.*

இது பல்லவி.

*சிற்பர மாம்பரஞ் ஜோதி - அருட்*
*சித்தெல்லாம் வல்ல சிதம்பர ஜோதி*
*தற்பர தத்துவ ஜோதி - என்னை*
*தாளுக்கிக் கொண்ட தயாநிதி ஜோதி.*

இப்படி 32 கண்ணிகள். சுத்த சன்மார்க்க சங்கம் தழுவிய ஜோதி என்று ஒரு கண்ணியில் (28) சங்கம் குறிப்பிடப் பெறுகிறது. என்னைத் தானுக்கிய என்று கூறுமிடங்கள் பல. தம்பம், மணிமேடை, ஐந்தொழில், மணிமுடி முதலிய பெரும் விஷயங்களும் கூறப் பெறுகின்றன. முதற்பதிப்பிலும் பழம் பதிப்புகளிலும் ஆனந்தக்களிப்பு என்பது தலைப்பு. சென்னை பதிப்பில், ஆனந்தக் களிப்பு 2. சிவசிவ ஜோதி என்பது ஆ.பா இட்ட பொருத்தமான புதிய பெயர். ஆறுந்திருமுறை முதற்பதிப்பிலேயே இதற்கு **இங்கிலீஷ்** மெட்டு இராகம் சங்கராபரணம் ஏகதாளம் என இராகதாளம் குறிக்கப்பெற்றுள்ளது. ச.மு.க. தாளத்தை மட்டும் அடதாளம் என்று மாற்றினுர். சென்னைப் பதிப்பிலும் அடதாளமே, ஆ.பா. பதிப்பில் அஸாவேரி, ஆதி. இங்கிலிஷ் மெட்டு பெருமான் காலத்திலேயே (அதற்கு முன்னமேயே) தமிழ்நாட்டுக்கு வந்துவிட்டது. பெருமானும் இங்கிலிஷ் மெட்டில் பாடியிருக்கிருர்.

### 5. ஜோதியுள் ஜோதி

1. பல்லவி. 29 கண்ணிகள்.

ஜோதியுள் ஜோதியுள் ஜோதி - சுத்த
ஜோதி சிவஜோதி ஜோதியுள் ஜோதி
ஜோதியுள் ஜோதியுள் ஜோதி.

என்பது பல்லவி.

சிவமே பொருளென்று தேற்றி - என்னைச்
சிவவெளிக் கேறும் சிகரத்தி லேற்றிச்
சிவமாக்கிக் கொண்டது பாரீர் - திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. — ஜோதி

இது முதலாவது கண்ணி. இப்படி 29 கண்ணிகள். 'தென்பால் இருந்தது பாரீர்,' திரை தூக்கிக் காட்டுதல் பாரீர்' என்ற தொடர்கள் (7;9) தில்லையைக் குறிப்பன. முந்தியதைப் போன்றே இதிலும் அனுபவப் பொருள்கள் தத்துவப் பொருள்கள் மிகப்பல. **சுத்த சன்மார்க்கம்** மற்ற எல்லா நெறிகளையும் உள்ளடக்கியது என்பது, **'தருநெறி எல்லாம் உள்வாங்கும், சுத்த சன்மார்க்கம் என்றேர் தனிப்பேர் கொண்டோங்கும் திருநெறி'** என 18 ஆம் கண்ணியில் கூறப்பெறுகிறது. முதற்பதிப்பிலும் பழம் பதிப்புகளிலும் பெயர் ஆனந்தக்களிப்பு. சென்னை பதிப்பில் ஆனந்தக்களிப்பு 3. **ஜோதியுள் ஜோதி** என்பது ஆ.பா. இட்டபெயர். முதற்பதிப்பிலும் பொ.சு., பி.இரா.,சென்னை பதிப்புகளிலும் இராகம் கமாஸ், ஆதி தாளம். ஆ.பா. பதிப்பில் மத்தியமாவதி, ஆதி தாளம்.

### 6. அருள் அற்புதம்

1 பல்லவி. 8 கண்ணிகள்.

அற்புதம் அற்புதமே - அருள்
அற்புதம் அற்புதமே.

என்பது பல்லவி.

சிற்பதம் பொற்பதஞ் சீரே சிறந்தது
சித்தாடு கின்ற திருநாள் பிறந்தது
கற்பத நெஞ்சக் கரிசு துறந்தது
கற்றபொய்ந் நூல்கள் கணத்தே மறந்தது — அற்புதம்

இப்படி 8 கண்ணிகள். 'செத்தார் எழுகின்ற திருநாள் அடுத்தது' என்று இரண்டாவது கண்ணி கூறுகிறது. சத்திய ஞானசபை இரண்டு கண்ணிகளில் (4; 8) குறிப்பிடப் பெறுகிறது. 'சத்திய ஞானசபை' என்னுள் கண்டனன், சன்மார்க்க சித்தியை நான் பெற்றுக் கொண்டனன்' (4). 'சாதி சமயச் சழக்கெலாம் அற்றது சன்மார்க்க ஞான சபை நிலைபெற்றது' (8).

வஞ்சகர் அஞ்சினர் வாய்முடிச் சென்றனர்
வந்து திரும்பவும் வாயிலில் நின்றனர்
தஞ்சம் எமக்கருள் சாமிநீ என்றனர்
சன்மார்க்க சங்கத் தவர்களே வென்றனர் — அற்புதம்

என்னும் 5 ஆம் கண்ணி சன்மார்க்க சங்கத்தின் — வள்ளலாரின் — வெற்றியைக் கூறுவது. முதற்பதிப்பிலும் பழம்பதிப்புகளிலும் தனித்தலைப்பு இல்லை. கீர்த்தனைகள் என்ற பொதுத்தலைப்பின்கீழ் உள்ளது. சென்னைப்பதிப்பில் பெயர் 'அற்புதம்.' அருள் அற்புதம் என்பது ஆ. பா. பதிப்பில். முதற்பதிப்பு முதல் எல்லாப் பதிப்புகளிலும் இராகம் தர்பார், ருபக தாளம். ஆ. பா. பதிப்பில் மட்டும் தாளம் மிச்ரசாபு.

## 7. ஆணிப்பொன்னம்பலக் காட்சி

1 பல்லவி. 32 கண்ணிகள்.

ஆணிப்பொன் னம்பலத் தேகண்ட காட்சிகள்
அற்புதக் காட்சி யடி — அம்மா
அற்புதக் காட்சி யடி.

என்பது பல்லவி.

பொன்னம்பலத்தை ஆணிப் பொன்னம்பலம் என்பானேன்? ஆணிப் பொன் என்றால் என்ன? ஆணி - முதன்மை; மேன்மை; மேற்கோள்; ஆதாரம்; எல்லை; அச்சாணி உரையாணி; மிகுதி காட்டும் விகுதி. அச்சாணி - வண்டிச்சக்கரத்தின் கடையாணி.

உரையாணி - மாற்றறிவிக்கும் ஆணி; பொன்னை அதன் மாற்றறிய உரைத்துப் பார்க்கும் உரைகல் (கட்டளைக்கல்). ஆணிப்பொன் - மாற்று உயர்ந்த பொன். மாதிரி பார்க்க (Sample பார்க்க) உரிய பொன். மற்றவற்றிலும் உயர்ந்ததாகவும் எடுத்துக் காட்டாகவும் உள்ளவற்றை ஆணி என்று சொல்வது வழக்கம். ஆணிமுத்து - உயர் தரமான முத்து. இராமாயணத்தில் வரும் மாயமான் - பொன்மான் - 'ஆணிப்பொனின் ஆகிய' என்று கூறப்பட்டுள்ளது. (கம்பராமாயணம் 3285) கம்பராமாயணம் 8943 ஆம் செய்யுளில் 'ஆணி இவ்வுலகுக்கான' என்பதில் ஆணி - ஆதாரம் என்ற பொருளில் வந்தது. மாற்றுயர்ந்த பொன் ஆணிப்பொன். ஆணிப்பொன்னலாகியது ஆணிப் பொன்னம்பலம்.

ஆணிப் பொன்னம்பலத்தே வள்ளலார் கண்ட காட்சிகள் அற்புதக் காட்சிகள். அக்காட்சிகளை அவர் 32 கண்ணிகளால் வருணிக்கிறார்.

**ஜோதி மலைஒன்று தோன்றிற் றதில் ஒரு**
**வீதிஉண் டாச்சு தடி - அம்மா**
**வீதிஉண் டாச்சு தடி.** — ஆணி 1

இப்படி 32 கண்ணிகள். பல்லவியிலும் கண்ணிகளிலும் இரண்டாவது அடி, அடி மடக்காக மூன்றும் வரியாக அமைந்துள்ளது.

ஜோதி மலை
அதில் ஒரு வீதி. வீதியில் சென்றார்;
வீதி நடுவே ஒரு மேடை. மேடைமேல் ஏறினார்;
மேடைமேல் அங்கொரு கூடம். கூடத்தை நாடினார்;
கூடத்தின் மேல் எழுநிலை மாடம்.
முதல் நிலையில் முத்துவெண்மணி நீலமாயிற்று.
2 - ம் நிலையில் நீலம் சிவந்த பவளமாயிற்று.
3 - ம் நிலையில் மரகதப் பச்சை செம்மாணிக்க மாயிற்று.
4 - ம் நிலையில் முத்து வச்சிரமணியாயிற்று.
5 - ம் நிலையில் பவளம் வெண்மணியாயிற்று.
6 - ம் நிலையில் பன்மணிகள் பொன்மணிகளாயின.
7 - ம் நிலையில் அம்மணிகளெல்லாம் படிகமாயின.
ஏழ்நிலைக்கு மேலே ஒரு தம்பம், பொற்றம்பம். பொற்றம்பத்தில் ஏறினார்.
ஏறும்போது ஆங்காங்கே ஆயிரமாயிரம் சத்திகள் வந்து மயக்கினார்கள்.
தான் பெற்ற அருள் வல்லபத்தால் மயங்காமல் ஏறினார்.
ஏறி மணிமுடிகண்டார்.
மணிமுடியின்மேல் ஒரு கொடுமுடி.
கொடுமுடியின் மேல் 1008 மாற்றுப் பொற்கோயில்.
அதன் கோபுர வாயிலில் செல்கிறார்.

கோபுரவாயிலில் பலகோடி சத்தர்கள் சத்திகள்
அவர்கள் வண்ணம் வெள்ளை சிவப்பு முதலாக ஐந்து வண்ணம்.
அவரெல்லாம் 'யார் இவர்' என்று இவரைப் பார்த்துக்கேட்கிறார்கள்.
அவர்களை விடுத்து அப்பாலே செல்கிறார்.
அங்கோர் திருவாயில்.
அதில் ஐவர். அவர்கள் வழிகாட்ட மேலே செல்கிறார்
மேலோர் மணிவாயில்,
அவ்வாயிலில் பெண்ணும் ஆணுமாக இருவர். இவர்கள் வழிகாட்ட
அணுக்கத் திருவாயிலைக் கண்டார்.
அத்திருவாயிலில் ஆனந்தவல்லி அம்மை இருந்தாள்.
அம்மையைக் கண்டார், அவளருள் கொண்டார், அமுதமும் உண்டார்.
அவள் அருளாலே நடராஜர் சந்நிதி கண்டார்.
சந்நிதியில் சென்று பெற்றபேற்றைச் சாமியே அறிவார்.

*சந்நிதி யில்சென்று நான்பெற்ற பேறது*
*சாமி அறிவார டி — அம்மா*
*சாமி அறிவார டி* — *ஆணி 32*

இவ்வாறு ஆணிப் பொன்னம்பலக் காட்சி நிறைவுறுகிறது. ஆணிப் பொன்னம்பலக் காட்சி என்பது ஆ. பா. இட்ட அருமையான பெயர். சென்னைப் பதிப்பில் பெயர் காட்சிக்கண்ணி. முன் பதிப்புகளில் தனிப்பெயர் இல்லை. கீர்த்தனைகள் என்ற தலைப்பில் உள்ளது ஆறும் திருமுறை முதற்பதிப்பில் இதன் இராக தாளம் எதுகுல காம்போதி, அடதாளம் உசி. பொ. சு., பி. இரா., சென்னை பதிப்புகளிலும் அவையே. ச. மு. க. பதிப்பில் சாமா, அடதாளம் ஆ. பா. பதிப்பில் எதுகுல காம்போதி, மிச்ரசாபு.

**8. அருட் காட்சி.**

பல்லவி அனுபல்லவி இல்லை. நான்கே கண்ணிகள்.

வானத்தின் மீது மயிலாடக் கண்டேன்
மயில்குயில் ஆச்சுத டி - அக்கச்சி
மயில்குயில் ஆச்சுத டி. 1

துள்ளலை விட்டுத் தொடங்கினேன் மன்றுடும்
வள்ளலைக் கண்டேன டி - அக்கச்சி
வள்ளலைக் கண்டேன டி. 2

சாதி சமயச் சழக்கைவிட் டேன்அருட்
சோதியைக் கண்டேன டி - அக்கச்சி
சோதியைக் கண்டேன டி. 3

பொய்யை ஒழித்துப் புறப்பட்டேன் மன்றுடும்
ஐயரைக் கண்டேன டி - அக்கச்சி
ஐயரைக் கண்டேன டி. 4

வானத்தின் மீது மயிலாடக் கண்டேன் என்னும் இது இசை உலகில் மிகவும் பேர் பெற்ற, புகழ் பெற்ற பாட்டு. 'அக்கச்சி' என்பது கொச்சை மொழி என்று கருதி இசைக்கலைஞர் சிலர் அச்சொல்லை விட்டுவிட்டுப் பாடுகிறார்கள். இது சரியன்று. அக்கச்சி என்பது மூத்தவளைக் குறிக்கும்.

இளையவள் - தங்கை, தங்கைச்சி, தங்கச்சி.
மூத்தவள் - அக்கை, அக்கைச்சி, அக்கச்சி.

தங்கை, தங்கச்சி பரவலாக வழங்குகிறது. அக்கை, அக்கச்சி அவ்வளவாக வழக்கத்தில் இல்லை. கொச்சை மொழி என்று கருதிப் பொது மக்களே வழங்காவிட்டால் இசைக்கலைஞர்கள் அதுவும் புகழ் பெற்ற கர்நாடக இசைக்கலைஞர்கள் அக்கச்சி என்பதை எங்கே பாடப்போகிறார்கள். அதனால் தான் 'அக்கச்சி'யை விட்டுவிட்டுப் பாடுகின்றனர். அக்கை, இந்நாளில் அக்கா என்று வழங்குகிறது. அக்காள் என்று ளகர ஒற்றைச் சேர்த்தும் சொல்கிறார்கள். தங்கையைத் தங்காள் என்று சொல்வதுண்டு. நல்லதங்காள் கதை என்னும் வழக்கைக் காண்க. தம்மின் மூத்தவளைத் தமக்கை என்கிறோம். தம் அக்கை என்பதே தமக்கை ஆயிற்று. தங்கை, அக்கை, தமக்கை என்பன இலக்கிய வடிவங்கள். தங்கைச்சி, அக்கைச்சி என்பன சாதாரண பேச்சு வடிவங்கள். தங்கச்சி, அக்கச்சி, என்பன கொச்சை வடிவங்கள் அதாவது திருந்தாத பேச்சு வடிவங்கள்.

வள்ளற் பெருமானுக்கு முன் அக்கைச்சி பாட்டு பாடியவர் தத்துவராய சுவாமிகள். அவர் பாடிய நூலின் பெயர் பாடுதுறை. அதன் 56 ஆம் பதிகம் 'அக்கைச்சி'. 3 பாடல்கள். தத்துவராயர் 'அக்கைச்சி' என்ற வடிவத்தையே ஆள்கிறார். பதிகத் தலைப்பும் அக்கைச்சி என்பதே. அம்பட்டன், வண்ணான்; தச்சன், தட்டான் குறத்தி, செட்டியார், முதலியார், ஊசல், பந்து, குணலை, கிளிப்பயிற்று, குயில், பூணு நூல், சிகை, பார்ப்பானும் பறைச்சியும், பாம்பாட்டி, பிடாரன் என்பன போன்ற பல வகையான தலைப்புகளில் தத்துவராயர் பாடுகிறார். கிராமியப் பாடல்கள், நாடோடிப் பாடல்கள், நாட்டுப் பாடல்கள் என்றெல்லாம் சொல்கிறோம். இந்நாளில் இவற்றுக்கு மிகுந்த மதிப்பும் ஏற்பட்டு வருகிறது. நாட்டுப்புற இலக்கியம் என்றே ஓர் இலக்கிய வகை இன்று பேசப்பெறுகிறது; ஆராயப்பெறுகிறது. தத்துவராயர் பாடல்களிற் பல அந்நாளைய நாட்டுப்புறப் பாடல்களின் வகையே. தத்துவராயர் சிறந்த வேதாந்தி என்பதையும் 15-ஆம் நூற்றாண்டினர் என்பதையும் முன்னமே ஓரிடத்துக் கூறியுள்ளோம். தமிழிலுள்ள வேதாந்த நூல்களுள் தத்துவராயரின் பாடுதுறையும் தாண்டவராயரின் கைவல்யமும் முன்னிற்பவை. தத்துவராயர் வள்ளற்பெருமானால் பாராட்டிக் குறிப்பிடப் பெறுபவர். மனித தேகத்தில் கடவுள் காரியப்படுவது என்னும்

உபதேசத்தில்'' ———இவ்வள வனுபவமும் பூர்வத்திலுள்ள அனுபவிகளால் குறிக்கப்பட்ட நிலைகளில் இல்லை. ஒருவாறு குரு துரிய பரியந்தம் வேதாகமங்களாலும் **தத்துவராயர்** முதலிய மகான்களனுபவத்தாலும் குறிக்கப்படும். அதற்கு மேற்பட்ட அனுபவம் சுத்த சன்மார்க்க சாத்தியம். ———'' என்று வள்ளற் பெருமான் குறிப்பிடுகிறார். (திருஅருட்பா உரைநடைப்பகுதி பக்கம்-268). குருதுரிய நிலை வரை அனுபவம் பெற்ற பெரியவர்களுக்கு எடுத்துக்காட்டாகத் தத்துவராயரைப் பெருமான் குறிப்பிடுகிறாரெனில் சன்மார்க்க அன்பர்கள் தத்துவராயரைப் பற்றி அறிய வேண்டாமோ? தத்துவராயரின் மடமும் சமாதிக் கோயிலும் விருத்தாசலத்திலிருந்து சிதம்பரம் செல்லும் சாலையில் எறும்பூரில் உள்ளன. வள்ளற்பெருமான் சிதம்பர வழிபாட்டுக் காலத்தில் கருங்குழியிலிருந்து சிதம்பரம் செல்லும்போது ஒருமுறை எறும்பூர் வழியாகச் சென்று தத்துவராயர் மடத்தையும் அங்குள்ள பெரிய சிவாலயத்தையும் தரிசித்ததுண்டு. நாமும் ஒருமுறை சென்று தரிசித்தோம்.

தத்துவராயசுவாமிகள் 'அக்கைச்சி' பாடியது போன்று வள்ளற் பெருமானும் ஓர் 'அக்கைச்சி' பாடினார். தத்துவராயர் 'அக்கைச்சி' என்ற வடிவத்தை வழங்க, வள்ளலாரோ 'அக்கச்சி' என்னும் கொச்சை வடிவத்தையே ஆள்கிறார். தத்துவராயர் பாடியது இயற்பா. வள்ளலார் பாடுவதுஇசைப்பா. இதனால் இவ்வேறுபாடு நேர்ந்திருக்கலாம். மக்களிடையே பெரும்பான்மையாக வழங்குவதென்பதாலும் அக்கச்சி என்னும் சொல்லையே ஆள எண்ணியிருக்கலாம். இனி, பாட்டின் பொருளுக்கு வருவோம்

வானத்தின் மீது மயிலாடக் காண்கிறார் வள்ளலார். அம்மயில் குயிலாக மாறிற்று என்கிறார். மயில் வானில் மிக உயரமாகப் பறக்கக் கூடியதன்று. மரங்களில் உச்சியில் மயில்கள் அமர்ந்திருப்பதைக் காணலாம். வள்ளிமலைத் தேரின் உச்சியில் மயில் அமர்ந்திருந்ததை நாம் கண்டிருக்கிறோம். உயர உயரப் பறந்தாலும் ஊர்க்குருவி பருந்தாகாது என்பது பழமொழி. பறவைகள் சிலவே மிக உயரமாகப் பறப்பவை. மயில் அவ்வளவு உயரமாகப் பறப்பதன்று. ஆனால் வள்ளலாரோ வானத்தின் மீது மயிலாடக் கண்டேன் என்கிறார். மர உச்சியிலோ மலை உச்சியிலோ ஆடக் காணவில்லை. இது இருக்கட்டும். மயில் குயில் ஆகுமா?

ஆடுவது மயில்.
பாடுவது குயில்.
மயில் கண்ணுக்கு இனியது. காதுக்கு இனியதன்று.
குயில் காதுக்கு இனியது. கண்ணுக்கு இனியதன்று.

இரண்டும் இயல்பால் வேறுபட்டவை. மயில் அழகிய வண்ணங்களை உடையது. குயில் கருப்பு. குயிலோசை காதுக்கு மிகவும் இனியது. மயிலோசை கேட்கச் சகிக்காது. மயில் அகவுகிறது என்று சொல்ல வேண்டும். குயில் கூவுகிறது என்று

சொல்ல வேண்டும். காகம் கரைகிறது என்று சொல்ல வேண்டும். கோழி கூவுகிறது. ஆந்தை அலறுகிறது. ஒவ்வொன்றின் ஒலிக்கும் ஒருபெயர் கொடுத்திருக்கிறார்கள் இவையெல்லாம் தமிழ்மரபு; தமிழின் தனிச்சிறப்பு.

மிக உயரப்பறக்க இயலாத மயில் வானத்தின் மீது ஆடுகிறது. கண்ணுக்கினிய வர்ண ஜாலங்களையுடைய' அம்மயில், கர்ண கடூரமாக அகவும் அம்மயில் காதுக்கினி மையாகப் பாடும் கருப்புக் குயிலாகிறது. ஆடுமயில் பாடுகுயிலாகிறது. இது வள்ளலார் கண்ட காட்சி; 'அருட்காட்சி.' மண்ணின் மீது மயில் ஆடலாம், மரத்தின் மீது ஆடலாம்' மலையின் மீது ஆடலாம்; ஆனால் வானத்தின் மீது ஆடுகிறது. இதுவே பெரிய விஷயம். இதைவிடப் பெரிய விஷயம் ஆடும் அம்மயில் பாடும் குயிலாக மாறுவது. நம்மால் இக் காட்சியைக் காண இயலுமா? கண்டவர்கள் எத்தனைபேர். கண்ட அதை விண்டவர் கள் எத்தனை பேர். கண்டவர் விண்டிலர், விண்டவர் கண்டிலர் என்பது பழமொழி. வள்ளளார் கண்டார், விண்டார்.

வள்ளலார் கண்ட வானம் எது?
வள்ளலார் கண்ட மயில் எது? குயில் எது?

இவை புறக் கண்களாற் காணப்படும் வெளி விஷயங்கள் அல்ல. அகக்கண்ணுற் காணற்குரிய உள் அனுபவங்கள்; தத்துவ விஷயங்கள்.

வள்ளலார் கண்ட வானம் — சிதாகாசம்.
வள்ளலார் கண்ட மயில் — விந்து.
வள்ளலார் கண்ட குயில் — நாதம்.

விந்து — ஒளி — LIGHT
நாதம் — ஒலி — SOUND

விந்து, நாதம் என்றால் இக்காலத்தில் பலருக்குத் தெரியாது. ஒலி, ஒளி, SOUND LIGHT, என்றால் எல்லாருக்கும் தெரியும். மயில் ஒளியுடையது. குயில் ஒலியுடையது. தத்துவ உலகில் கீழே இருப்பது மண். மேலே இருப்பது விண். அதுதான் சிதாகாசம். சித் - ஆகாசம் - சிதாகாசம். அந்த விண்ணை (வானத்தை) அளாவி விண்ணளாவ (வானளாவ) நிற்பவைதான் விந்து தத்துவமும் நாத தத்துவமும். விந்துக்கு சத்தியென் றும் நாதத்திற்கு சிவம் என்றும் ஒரு பெயர் உண்டு.

தத்துவம் 36 - ல் முதலாவது பிருதுவி (மண்)

35 ஆவது விந்து (சத்தி)
36 ஆவது நாதம் (சிவம்)

சுத்த சிவ துரியாதீத நிலையில் சிதாகாசத்தில் விந்து (சத்தி) தத்துவ அனுபவம் பெற்றதுதான் வானத்தின் மீது மயிலாடக்கண்டது. விந்து தத்துவ அனுபவம் நாத தத்துவ அனுபவமாக (சத்திதத்துவ அனுபவம் சிவதத்துவ அனுபவமாக) விளைந்தது தான் மயில் குயிலானது. இதைத்தான் வள்ளற் பெருமான்

**வானத்தின் மீது மயிலாடக் கண்டேன்**
**மயில்குயில் ஆச்சுத டி — அக்கச்சி**
**மயில்குயில் ஆச்சுத டி.**

என்று பாடுகின்றார். துள்ளலை விட்டால் வள்ளலைக் காணலாம் என்பது இதன் இரண்டாவது கண்ணி. சாதி சமயச் சழக்கைவிட்டால் அருட்ஜோதியைக் காணலாம் என்பது மூன்றாவது கண்ணி. பொய்யை ஒழித்தால் ஐயரைக்காணலாம் என்பது நான்காவது கண்ணி. சாதியை வைத்துக் கொண்டிருக்கும் வரை சோதியைக் காண முடியாது. இது ஒரு பெரிய சீர்திருத்தம். ஒரு பெரிய சீர்திருத்தமும் ஒரு பெரிய தத்துவ அனுபவமும் இப்பாடலிற் சொல்லப் பெறுகின்றன.

எல்லாப்பதிப்புகளிலும் இதன் இராகம் எதுகுலகாம்போதி, தாளம் முதற் பதிப்பு,பொ. சு., பி. இரா. பதிப்புகளில் அடதாளம்உசி, ச. மு.க., சென்னை, பதிப்புகளில் அடதாளம். ஆ. பா. பதிப்பில் மிச்ரசாபு.

## 9. மெய்யருள் வியப்பு

1 பல்லவி. 100 கண்ணிகள் .

**எனக்கும் உனக்கும் இசைந்த பொருத்தம் என்ன பொருத்தமோ**
**இந்தப் பொருத்தம் உலகில் பிறருக் கெய்தும் பொருத்தமோ.**

என்பது பல்லவி 'இவர்க்கும் எனக்கும்' என்ற பாட்டு இருவருக்குள் இருக்கும் வழக்கை உரைக்கும் பாட்டு. 'எனக்கும் உனக்கும்' என்ற இப்பாட்டு இருவருக்கும் இசைந்த பொருத்தத்தைக் கூறும் பாட்டு. தோழியைப் பார்த்துப் பாடியதனால் அதில் இவர்க்கும் என இறைவனைப் படர்க்கையிற் கூறினார். இது நேரே இறைவனையே பார்த்துப் பாடுவதாதலின் உனக்கும் என முன்னிலைப் படுத்திக் கூறுகிறார்.

மெய்யருள் வியப்பு என்பது இதற்கமைந்த அருமையான பெயர். இப்பெயர் ஆறுந்திருமுறை முதற்பதிப்பிலேயே அச்சிடப்பெற்றிருக்கிறது. பி. இரா. பதிப்பில் மட்டும் மெய்யருள் வியப்பு மாலை. ஏனைய எல்லாப் பதிப்புகளிலும் மெய்யருள் வியப்பு என்பதே பெயர். தன்னை ஏருநிலைக்கு ஏற்றி வைத்திருக்கும் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரது மெய்யருளை நினைந்து 'எனக்கும் உனக்கும் இசைந்த பொருத்தம் என்ன பொருத்தமோ, இந்தப் பொருத்தம் உலகில் பிறருக் கெய்தும் பொருத்தமோ?' என்று வியந்து பாடப் பெற்றதால் மெய்யருள்வியப்பாயிற்று.

தனக்கு நிகரிங் கில்லா துயர்ந்த தம்பம் ஒன்றதே
தாவிப் போகப் போக நூலின் தரத்தில் நின்றதே
கனக்கத் திகைப்புற் றங்கே நானும் கலங்கி வருந்தவே
கலக்கம் நீக்கித் தூக்கி வைத்தாய் நிலைபொருந்தவே.

என்பது முதலாவது கண்ணி. இப்படி 100 கண்ணிகள். இந்நூறு கண்ணிகளும் அரும்பெரும் பொருள்கள் பலவற்றைக் கொண்டவை. சிலவற்றை மட்டும் இங்கே காண்போம்.

அண்டத்தைப் பற்றியும் பிண்டத்தைப் பற்றியும் வள்ளற் பெருமான் அறியாத விஷயங்களே இல்லை. அண்ட பிண்ட தத்துவங்கள் அனைத்தையும் அறிந்தவர் வள்ளலார். அறிந்ததோடு மட்டுமல்ல அனுபவத்துக்குக் கொண்டு வந்து அண்ட சித்தியையும் பிண்ட சித்தியையும் பெற்றவர் வள்ளலார். பெருமான் பெற்ற அண்ட பிண்ட அறிவு இரு கண்ணிகளிற் (31 ; 93) கூறப்பெறுகிறது.

அண்டப் பரப்பின் திறங்கள் அனைத்தும் அறிய வேண்டியே
ஆசைப் பட்ட தறிந்து தெரித்தாய் அறிவைத் தூண்டியே
பிண்டத் துயிர்கள் பொருந்தும் வகையும் பிண்டம் தன்னையே
பிரியும் வகையும் பிரியா வகையும் தெரித்தாய் பின்னையே — 31

அண்ட கோடி அனைத்தும் காணும் கண்கள் எய்தியே
அறிந்தேன் அங்கைக் கனிபோல் அவற்றில் உள்ள செய்தியே
பிண்ட கோடி முழுதும் காணப் பெற்று நின்னையே
பேசிப் பேசி வியக்கின் றேன்இப் பிறவி தன்னையே. — 93

| அனுபவம் | | மார்க்கம் | பாதம் | விளக்கியவர் |
|---|---|---|---|---|
| இறைவனுக்கு **அடியன்** ஆதல் | — | தாச மார்க்கம் | சரியை | சம்பந்தர் |
| இறைவனுக்குப் **பிள்ளை** ஆதல் | — | சற்புத்திரமார்க்கம் | கிரியை | அப்பர் |
| இறைவனுக்கு **நேயன்** ஆதல் | — | சகமார்க்கம் | யோகம் | சுந்தரர் |
| இறைவனே தான் ஆதல் | — | சன்மார்க்கம் | ஞானம் | மாணிக்கவாசகர் |

இது படிமுறை. இறைவன் வள்ளலாரை முதலில் **அடியன்** ஆக்கினார், பின்னர் **பிள்ளை** ஆக்கினார், **பின்பு** நேயன் ஆக்கினார், இறுதியில் **அடிகள்** ஆக்கினார்; நீயும் நானும் ஒன்றென்றார். , இவ் அரிய, இவ் உரிய படிமுறை அனுபவம் இரு கண்ணிகளில் (72 ; 96) தெளிவாகக் கூறப்பெறுகிறது.

அடியன் ஆக்கிப் பிள்ளை ஆக்கி நேயன் ஆக்கி யே
அடிகள் ஆக்கிக் கொண்டாய் என்னை அவலம் நீக்கி யே
படியு ளோரும் வானு ளோரும் இதனை நோக்கி யே
பதியும் ஓர வாரன் என்பர் பரிவு தேக்கி யே 72

அன்றே என்னை அடியன் ஆக்கி ஆண்ட சோதி யே
அதன்பின் பிள்ளைஆக்கி அருள்இங் களித்த சோதி யே
நன்றே மீட்டும் நேயன் ஆக்கி நயந்த சோதி யே
நானும் நீயும் ஒன்றென் றுரைத்து நல்கு சோதி யே. —96

சந்திரன், சூரியன் (20) இருள், ஒளி (21) இவற்றின் உண்மையை உணர்த்தப் பெற்றது, எனக்குள் நீயும் உனக்குள் நானும் (25) என்னைக்காட்டி நின்னைக்காட்டி (92), ஒருநாள் மாலையில் ஒரு நாழிகை நேரத்திற்குள் யோகநிலையை உணர்த்தி மறுநாள் காலையிலேயே யோகத்தின் பயனை முழுமையாக அளித்தது, திருநாள், தீர்த்தம், தெய்வம் இவற்றின் நிலையை உணர்த்தியது (30), மன்மதனை எரிக்கும் வல்லபம், கூற்றுவனை உதைக்கும் வல்லபம் அளித்தது (38), பன்னிரண்டாண்டு தொடங்கிப் பாடுபட்டது (78;79) முதலியவை இதனுட் காணப்படும் அரும்பொருள் களுட் சிலவாம்.

அருட்பெருஞ்ஜோதி அகவலின் இறுதிப்பகுதி வாழி, வெல்க, போற்றி என்று முடிகிறது. (வாழிநின் பேரருள் வாழி நின் பெருஞ்சீர், வெல்க நின் பேரருள் வெல்க நின் பெருஞ்சீர், போற்றி நின் பேரருள் போற்றி நின் பெருஞ்சீர்). அதுபோன்றே இம் மெய்யருள் வியப்பு மாலையின் ஈற்றுக் கண்ணிகள் இரண்டும் (99;100) வாழி, வெல்க, போற்றி என முடிகின்றன. (சோதி வாழியே; சோதி வெல்கவே; சோதி போற்றியே.) இதுவும் ஒரு நல்ல பொருத்தமே.

ஆறும் திருமுறை முதற் பதிப்பில் இதன் இராக தாளம் அடாணு, ருபகம், பொ. சு., பி. இரா. பதிப்புகளிலும் இவையே. ச.மு.க. செஞ்சுருட்டி என இராகத்தை மட்டும் மாற்றுகிறூர். இராசமாணிக்கம் பிள்ளையும் அவரையே பின்பற்றுகிறூர். ஆ.பா. பதிப்பிலும் செஞ்சுருட்டியே.

## 10. கண்புகுவப்பூட்டு

11 கண்ணிகள்.

கையறவி லாதுநடுக் கண்புகுவப் பூட்டு
கண்டுகளி கொண்டு திறந் துண்டு நடு நாட்டு
ஐயர் மிக உய்யும் வகை அப்பர் விளை யாட்டு
ஆடுவதென் றே மறைகள் பாடுவது பாட்டு. 1

நாத்திகம் சொல் கின்றவர் தம் நாக்குமுடை நாக்கு
நாக்கு ருசி கொள்ளுவதும் நாறிய பிண் ணுக்கு
சீர்த்திபெறும் அம்பலவர் சீர்புகன்ற வாக்கு
செல்வாக்கு நல்வாக்கு தேவர் திரு வாக்கு. 11

நாத்திகம் வள்ளலார்க்கு உடன்பாடன்று. நாத்திகத்தை வள்ளலார் கண்டிக்கிறார். நாத்திகம் பேசுவோர் நாக்கு முடை நாக்கு என்கிறார். 'நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்' என்னும் திருவாசகமும் இங்கு நினைவுக்கு வருகிறது. வள்ளலாரின் சீர்திருத்தம் கடவுள் நம்பிக்கையோடு கூடிய, கடவுள் வழிபாட்டோடு கூடிய சீர்திருத்தம். வெறும் நாத்திகச் சீர்திருத்தமன்று, சீர்திருத்தம் பேசுவோர் இதனை நன்குணர வேண்டும்.

மனிதனுக்கு ஆதாரம் ஆறு. கீழே இருக்கும் முதலாவது ஆதாரம் மூலாதாரம். ஆதாரங்களுக்கெல்லாம் மூலம் ஆதலின் அது மூலாதாரமாயிற்று. மூல ஆதாரம், மூலாதாரம். மேலே இருக்கும் ஆருவது ஆதாரம் புருவமத்தி. அதை **நடுக்கண்** என்றும் புருவப் பூட்டு என்றும் வள்ளலார் கூறுகின்றார். நடுக்கண்ணைப் பொறுத்தவரை நாமெல்லாம் கண் மூடிகளே. மூடியிருக்கும் நடுக்கண்ணைத் திறக்க வேண்டும். பூட்டப்பட்டிருக்கும் புருவப்பூட்டைத் திறக்க வேண்டும். நடுக்கண் புருவப்பூட்டு கண்டு களி கொண்டு திறந்து உண்டு நடுநாட்டு என்று அதைச் சொல்லும் இப்பாட்டு, கண்புருவப் பூட்டு எனப் பெயர் பெற்றது. ஆரும் திருமுறை முதற்பதிப்பில் இதன் இராகம் சஹானு, தாளம் ஆதிதாளம். பின் பதிப்புகளிலும் இவையே. சென்னைப்பதிப்பில் மட்டும் தாளம் ருபகம் என மாற்றம். ஆ. பா. பதிப்பில் பியாக், ஐம்பை.

**11. ஊதூது சங்கே**

16 கண்ணிகளால், வெற்றிச் சங்கம் ஊதச் சொல்லுகிறார் வள்ளலார்.

கைவிட மாட்டான்என்று ஊதூது சங்கே
கனக சபையான்என்று ஊதூது சங்கே
பொய்விடச் செய்தான்என்று ஊதூது சங்கே
பூசைப லித்ததென்று ஊதூது சங்கே. 1

பொய்விட் டகன்றேன்என்று ஊதூது சங்கே
புண்ணியன் ஆனேன்என்று ஊதூது சங்கே
மெய் தொட்டு நின்றேன்என்று ஊதூது சங்கே
மேல்வெளி கண்டேன் என்று ஊதூது சங்கே. 16

முதற்கண்ணியிலும் கடைசிக் கண்ணியிலும் பொய்யை விடுதல் கூறப்பெறுகிறது. பொய்விட்டகன்று மெய்தொட்டு நின்றால் மேல் வெளி காணலாம். 'தூக்கம் தொலைத்தான்' (2) 'அச்சம் தவிர்த்தான்' (4), 'சிவமாக்கிக் கொண்டான்' (5) 'நான்

அவன் ஆனேன்' (6) என்புள சில அருந்தொடர்கள். ''ஞானசபையான்'' என்று ஓரிடத்தில் (7) ஞானசபை குறிப்பிடப் பெறுகிறது. முதற் பதிப்பு முதல் சென்னைப் பதிப்புவரை இதன் இராக தாளம்: சஹானு, அடதாளம். ஆ. பா. பதிப்பில் சுரஹரப்பிரிய, ஜம்பை.

## 12. சின்னம் பிடி

சின்னம் இரண்டு வகை. ஒன்று ஊதுவது. மற்றொன்று பிடிப்பது. ஊதுவதற்குத் திருச்சின்னம் என்று பேர். என்ன புண்ணியம் செய்தேனோ என்பதன் அனுபல்லவியில் 'அம்பலவர் வந்தார் வந்தார் என்று திருச்சின்னநாதம் சொல்கின்றதே' என்பதில் வரும் திருச்சின்னம் ஊதும் சின்னம். திருப்பள்ளிஎழுச்சி 6 ஆம் பாடலில் 'ஊதின சின்னங்கள் ஊதின சின்னம்' என்பது இதுவே. இங்கு 'சின்னம்பிடி' என்பதிற் கூறப்படும் சின்னம் பிடிக்கும் சின்னம். திருக்கோயில் திருமடங்களின் ஊர்வலங்களில் சின்னம் ஊதப்படுவதையும். சின்னம் பிடிக்கப்படுவதையும் காணலாம். சின்னம் ஊதுவதும் சின்னம் பிடிப்பதும் சிறப்பு, மங்கலம், மரியாதை ஆகும்.

10 கண்ணிகளால், சின்னம் பிடிக்கச் சொல்லுகிறார் வள்ளலார்.

அம்பலவர் வந்தார்என்று சின்னம் பிடி
அற்புதம்செய் கின்றார்என்று சின்னம் பிடி
செம்பலன் அளித்தார்என்று சின்னம் பிடி
சித்திநிலை பெற்றதென்று சின்னம் பிடி 1

சித்தாடு கின்றார்என்று சின்னம் பிடி
செத்தார் எழுவார்என்று சின்னம் பிடி
இத்தா ரணியில்என்று சின்னம் பிடி
இதுவே தருணம்என்று சின்னம் பிடி. 10

'கொடிகட்டிக் கொண்டோம் என்று சின்னம் பிடி' என்று கூறுவது நான்காவது கண்ணி. 'ஞானசித்திபுரம்' மூன்றுங்கண்ணியிலும் 'சித்திபுரம்' ஐந்தாங்கண்ணியிலும் வேகாக்கால் சாகாத்தலை ஏழாங்கண்ணியிலும் கூறப்பெறுகின்றன. சன்மார்க்கமே மார்க்கம் என்று சத்தியஞ்செய்து கூறுவது ஒன்பதாம் கண்ணி. முதற்பதிப்பு முதல் சென்னைப் பதிப்பு வரை இராக தாளம்: தன்யாசி, ஆதிதாளம். ஆ. பா பதிப்பில் காபி, ஆதிதாளம்.

## 13. முரசறைதல்

ஒரே கண்ணி.

அருட்ஜோதி ஆனேன் என்று அறையப்பா முரசு
அருளாட்சி பெற்றேன் என்று அறையப்பா முரசு
மருட்சார்பு தீர்ந்தேன் என்று அறையப்பா முரசு
மரணந் தவிர்ந்தேன் என்று அறையப்பா முரசு.

அருட்ஜோதி ஆனேன் என்று முரசறையச் சொல்கிருர் வள்ளலார். வள்ளலாரின் முடிந்த முடிவான நிலை அவர் அருட்ஜோதி ஆகிவிட்டார் என்பதே." மருட்சார்பு தீர்ந்தால் அருளாட்சி பெறலாம், மரணந் தவிரும், அருட்ஜோதி ஆகலாம். இதனை இப்பாட்டால் அறிகிரும். தாம் இவ்வாருனதைக் கூறி வெற்றி முரசு கொட்டச் சொல்லுகிருர் வள்ளலார்.

ஆரும் திருமுறை முதற்பதிப்பிலும் பின் பதிப்புகளிலும் 'பிரபஞ்ச வெற்றி, என்பது இதன் பெயர். ஆ.பா. பதிப்பிலும் நம் பதிப்பிலும் 'முரசறைதல்'. ஊதூது சங்கே, சின்னம்பிடி என்னும் தலைப்புகளை நோக்க முரசறைதல் என்ற தலைப்பே இதற்குப் பொருத்தம் என்பது தெளிவு. ஊதூது சங்கே, சின்னம்பிடி, முரசறைதல் இம்மூன்றும் ஒரு தொடர். இம் மூன்றிற்கும் முன் முதலாவதாகக் கண்புருவப்பூட்டைச் சேர்த்தால் இந்நான்கும் ஒருவகை. முரசறைதலுக்குச் சென்னைப் பதிப்பில் இராக தாளம்: பைரவி, ரூபகம். ஏனைய பதிப்புகள் இராக தாளங் குறிக்கவில்லை.

## 8. நாமாவளி

1. அம்பலத் தரசே
2. சம்போ சங்கர
3. சிவபோகம்
4. அம்பலத் தமுதே
5. திருநடமணியே
6. ஞான சபாபதியே
7. விரைசேர் சடையாய்
8. ஜோதி ஜோதி

நாமம் - ஆவளி: நாமாவளி. தீபம் - ஆவளி: தீபாவளி என்பது போல நாமம் - பெயர். ஆவளி - வரிசை. தீபம் - விளக்கு. ஆவளி - வரிசை. ஆவளி, வட சொல். வரிசையாக விளக்கேற்றிவைத்துக் கொண்டாடுவது தீபாவளி. வரிசையாக இறைவனின் திருநாமங்களைச் சொல்லிப் போற்றுவது நாமாவளி. அஷ்டோத்தர சத நாமாவளி, அஷ்டோத்தர சகஸ்ர நாமாவளி என்ற வழக்குகளைக் காண்க. 108 திரு நாமங்களைச் சொல்லிப் போற்றுவது அஷ்டோத்தர சத நாமாவளி. சதம் - நூறு,

அஷ்ட - எட்டு. உத்ரம் - பின்னே சேர்ப்பது. அஷ்ட உத்தரசதம் - நூறின் பின் எட்டு' நூற்றெட்டு. அஷ்ட உத்தர சகஸ்ரம் - ஆயிரத்தெட்டு. சகஸ்ரம் - ஆயிரம். இவை அர்ச்சனைக்குரிய நாமாவளிகள். இனி இங்கு நாம் காண இருப்பவை பஜனைக்குரிய நாமாவளிகள் அவை 'அம்பலத்தரசே' முதலாக வருவன.

'அம்பலத்தரசே' முதலாக 'ஜோதி ஜோதி' ஈறாக உள்ள எட்டு நாமாவளிகளும் கண்புருவப்பூட்டு, ஊதூது சங்கே, சின்னம்பிடி, முரசறைதல் ஆகியனவும் மூலப்பிரதி களில் பலவாறாகக் கலந்து காணப்படுகின்றன. ஆறாம் திருமுறை முதற்பதிப்பில் இவை நடை அமைப்பையும் இசை அமைப்பையும் ஒட்டித் தனித் தனியாகப் பிரிக்கப் பெற்றுள்ளன. பொன்னேரி சுந்தரம்பிள்ளை பதிப்பும், ச.மு. கந்தசாமி பிள்ளை பதிப்பும் சென்னைப் பதிப்பும் முதற்பதிப்பையே பின்பற்றின. பிருங்கிமாநகரம் இராமசாமி முதலியார் பதிப்பும் ஆ. பாலகிருஷ்ணபிள்ளை பதிப்பும் மூலப்பிரதிகளைப் பின்பற்றிப் பிரிவினை இன்றி எல்லாம் கலந்த ஒருவகை வரிசையில் நாமாவளியைக் கொண்டுள்ளன. ஆறாம்திருமுறை முதற்பதிப்பிலும் பின் பதிப்புகளிலும் நடை இசை இவற்றிற்கேற்பப் பிரித்துக் காட்டியுள்ளதை ஒட்டி நாமும் நம் வரலாற்று முறைப்பதிப்பில் நாமாவளிகளை அம்பலத்தரசே முதல் ஜோதிஜோதி முடிய எட்டுத் தலைப்புகளில் எட்டுப் பிரிவுகளாக்கி, கண்புருவப்பூட்டு முதலானவற்றை அந்த அந்தத் தலைப்பில் தனிப்படுத்தியுள்ளோம்.

## 1. அம்பலத்தரசே

அம்பலத் தரசே அருமருந் தே
ஆனந்தத் தேனே அருள்விருந் தே 1

பொதுநடத் தரசே புண்ணிய னே
புலவரெ லாம்புகழ் கண்ணிய னே 2

இப்படித் 90 கண்ணிகள். 'உத்தரஞான சிதம்பரமே, சித்தி எலாம் தரும் அம்பரமே' 16) என உத்தரஞான சிதம்பரம் கூறப்பெறுவதாலும், 'அருட்பொது நடமிடு தாண்டவனே, அருட்பெருஞ்ஜோதி என் ஆண்டவனே' (28), 'அருட்பெருஞ்ஜோதியைக் கண்டேனே, ஆனந்தத் தெள்ளமு துண்டேனே' (50) என அருட்பெருஞ்ஜோதியைக் கூறுவதாலும் இவை வடலூர் உத்தரஞானசிதம்பரமாகி, சத்தியஞானசபை ஏற்பட்ட பின் அருட்பெருஞ்ஜோதி வழிபாட்டுக் காலத்திற் பாடப்பெற்றவை என்பது விளங்கும். ஊர்வலங்களில் நடைப்பாட்டாகப் பாடிக்கொண்டு செல்வதற்கு இது மிகவும் ஏற்றது. ஆறாம் திருமுறை முதற்பதிப்பிலும், பிந்திய பழம்பதிப்புகளிலும், சென்னைப் பதிப்பிலும் இதன இராக தாளம்: இந்துஸ்தான் பியாக், ஆதிதாளம். (ஆ.பா. பதிப்பில் நாமாவளி கள் 53 பிரிவாகப் பிரிக்கப்பட்டு இராக தாளக் குறிப்புகள் பலவகைகளில் வேறுபடு தலின் அவை இங்கும் இனியும் எடுத்துக்காட்டப் பெறாது விடப்படுகின்றன.)

2. சம்போ சங்கர

தம்குறுவம்பு மங்கநிரம்பு சங்கம் இயம்பும் நம் கொழுகொம்பு
சங்கரசம்பு சங்கரசம்பு சங்கரசம்பு சங்கரசம்பு. 1

சந்தம்இயன்று அந்தணர் நன்று சந்ததம்நின்று வந்தனம் என்று
சந்திசெய்மன்று மந்திரம்ஒன்று சங்கரசம்பு சங்கரசம்பு 2

இப்படி 22 கண்ணிகள். முதல் இரண்டு கண்ணிகளில் சங்கரசம்பு எனவருவது கொண்டும் 12; 13; 14 கண்ணிகளில் சம்போசங்கர என்று வருவது கொண்டும் நம் பதிப்பில் சம்போசங்கர எனப்பெயரிடப்பெற்றது. முதற்பதிப்பிலும் பின்பதிப்புகளிலும் இதன் இராக தாளம்: பியாக், ஆதிதாளம்.

3. சிவபோகம்

போகம் சுகபோகம் சிவபோகம் அதுநித்தியம்
ஏகம் சிவம்ஏகம் சிவம்ஏகம் இதுசத்தியம். 1
நலமங்கலம் உறும்அம்பல நடனம்அது நடனம்
பலநன்கருள் சிவசங்கர படனம்அது படனம். 2
சூதுமன்னும் இந்தையே சூடல்என்ன விந்தையே
கோதுகொண்ட சிந்தையே கோயில்கொண்ட தந்தையே. 3

இப்படி 40 கண்ணிகள். ஆறும் திருமுறை முதற்பதிப்பிலும் பின் பதிப்புகளிலும் இதன் இராக தாளம்: சங்கராபரணம், இங்கிலீஷ் மெட்டு - இங்கிலீஷ் நோட்டு - ஆதி தாளம். வள்ளற்பெருமான் காலத்தில் ஐரோப்பிய இசை தமிழ்நாட்டுக்கு வந்து விட்டது. அதன் தாக்கமே வள்ளற்பெருமான் இங்கிலீஷ் மெட்டில், இங்கிலீஷ் நோட்டில் பாடியிருப்பது.

4. அம்பலத்தமுதே

நீடிய வேதம் தேடிய பாதம்
நேடிய கீதம் பாடிய பாதம்
ஆடிய பாதம் கூடிய பாதம்
ஆடிய பாதம் ஆடிய பாதம். 1

இப்படி 8 கலிவிருத்தங்கள். 8 ஆம் பாடலின் ஈற்றடி 'அம்பலத்தமுதே அம்பலத்தமுதே' என்பதால் இது இப்பெயர்பெற்றது. முதற்பதிப்பிலும் பின்பதிப்புகளிலும் இராகம்: இந்துஸ்தானி, தாளம்: ஆதிதாளம்.

5. திருநடமணியே

15 கண்ணிகள்.

பசியாத அமுதே பகையாத பதியே
பகராத நிலையே பறையாத சுகமே
நசியாத பொருளே நலியாத உறவே
நடராஜ மணியே நடராஜ மணியே. 1

9 முதல் 15 முடிய 7 கண்ணிகளும் 'திருநடமணியே திருநடமணியே' என்று முடிவதால் இது இப்பெயர் பெற்றது. முதற்பதிப்பிலும் பொ.சு. பதிப்பிலும் இராகம்: மாஞ்சி, தாளம்: அடதாளம். ச.மு.க. பதிப்பில் ஆனந்தபைரவி, அடதாளம், சென்னைப் பதிப்பில் ஆனந்தபைரவி, ஆதிதாளம்.

6. ஞானசபாபதியே

வேத சிகாமணியே போத சுகோதயமே
மேதகு மாபொருளே ஓதரும் ஓர்நிலையே
நாத பராபரமே சுத்த பராவமுதே
ஞான சபாபதியே ஞான சபாபதியே. 1

இப்படிப் 10 கண்ணிகள். 'ஞான சபாபதியே ஞான சபாபதியே' என்பது எல்லாக் கண்ணியிலும் மகுடம். முதற்பதிப்பு முதல் எல்லாப் பதிப்புகளிலும் இதன் இராக தாளம்: இந்துஸ்தான்தோடி, அடதாள சாப்பு.

7. விரைசேர் சடையாய்

விரைசேர் சடையாய் விடையாய் உடையாய்
விகிர்தா விபவா விமலா அமலா
வெஞ்சேர் பஞ்சார் தஞ்சார் கண்டா விம்பசி தம்பரனே. 1

இப்படி 4 கண்ணிகள். முதற்பதிப்பிலும் பொ.சு. பதிப்பிலும் சங்கராபரணம் அடதாளம். ச.மு.க. பதிப்பில் சங்கராபரணம், ஆதிதாளம். சென்னைப் பதிப்பில் தீரசங்கராபரணம், ஆதிதாளம்.

8. ஜோதி ஜோதி

ஜோதி ஜோதி ஜோதி சுயஞ்சோதி, ஜோதி ஜோதி ஜோதி பரஞ் ஜோதி, ஜோதி ஜோதி யருட்சோதி, ஜோதி ஜோதி சிவம்.

வாமஜோதி, சோமஜோதி, வானஜோதி, ஞானஜோதி,
மாகஜோதி, யோகஜோதி, வாதஜோதி, நாதஜோதி,
ஏமஜோதி, வியோமஜோதி, ஏறுஜோதி, வீறுஜோதி,
ஏகஜோதி, ஏகஜோதி, ஏகஜோதி, ஏகஜோதி, 2

ஆதிநீதி வேதனே! ஆடல்நீடு பாதனே!
வாதிஞான போதனே! வாழ்கவாழ்க நாதனே! 3

இம்மூன்று கண்ணிகளும் ஜோதிப்பாடலாக, தீபாராதனை செய்யும்போது பாடும் பாடலாக இன்று விளங்குகின்றன. மூலப்பிரதிகளில் அங்கொன்றும் இங்கொன்றுமாக இருக்கும் இம்மூன்று கண்ணிகளையும் ஒரு தொடராக்கித் தனியாக முதல் முதலில் ஆறும் திருமுறை முதற்பதிப்பில் அச்சிடப்பெற்றுள்ளது. முதற்பதிப்பில் இராக தாளக் குறிப்பு இல்லை. பொ.சு. பதிப்பில் கருடத்தொனி, ஏகதாளம். சென்னைப் பதிப்பில் வஸந்தாராகம், ஆதிதாளம்.

# 9. மங்களம்

7 கண்ணிகளால் வள்ளலார் மங்களம் பாடுகிறார்.

புங்கவர் புகழுமா தங்கமு கந்திகழ்
எங்கள் கணேசராந் துங்கர்க்கு — மங்களம். 1

போதந் திகழ்பர நாதந் தனில்நின்ற
நீதராஞ் சண்முக நாதற்கு — மங்களம். 2

பூசைசெய் வாருளம் ஆசைசெய் வார்தில்லை
ஈசர் எமதுநட ராஜர்க்கு — மங்களம். 3

பூமி புகழ்குரு சாமி தனைஈன்ற
வாமி எனுஞ்சிவ காமிக்கு — மங்களம். 4

புங்கமி குஞ்செல்வந் துங்கமு றத்தரும்
செங்க மலத்திரு மங்கைக்கு — மங்களம். 5

பூணி லங்குந்தன வாணி பரம்பர
வாணி கலைஞர்கொள் வாணிக்கு — மங்களம். 6

புண்ணிய ராகிய கண்ணிய ராய்த்தவம்
பண்ணிய பத்தர்க்கு முத்தர்க்கு — மங்களம். 7

இசைநிகழ்ச்சியின் நிறைவில் (கச்சேரியின் முடிவில்) மங்களம் பாடி நிறைவு செய்வது (முடிப்பது) வழக்கம். வள்ளலாரும் ஒரு மங்களம் பாடுகிறார். 1. விநாயகர்; 2. முருகன்; 3. நடராஜர்; 4. சிவகாமி; 5. இலக்குமி; 6. சரஸ்வதி; 7. அடியார்கள் ஆகிய எழுவர்க்கும் ஏழு கண்ணிகளில் மங்களங் கூறுகின்றார். 'கலைநிறை கணபதி சரணம் சரணம்'போன்ற பாடல்களைத் தொடக்கத்திற் கேற்றவையாகப் பாடியவள்ளற் பெருமான் இம் மங்களத்தை நிறைவிற்கேற்றதாகப் பாடுகிறார். இசை நிகழ்ச்சிகளின் நிறைவில் மங்களம் பாடுவதற்கு ஏற்றப்பாட்டு இது. சன்மார்க்க மேடைகளில் ஜோதிப் பாடலைப் பாடி நிறைவுசெய்வதே முறையாக இருக்கும். வள்ளலார் பாடியிருக்கிறார் என்பதற்காக இதனைப்பாடி முடிப்பது அவ்வளவு பொருத்தமாக இராது. ஆனால் 'சமய மேடைகளில் இம்மங்களத்தைப் பாடிமுடிப்பது மிகப்பொருத்தமாக இருக்கும்' ஆனால் யார் பாடுகிறார்கள்; எங்கே பாடுகிறார்கள். இப்படி ஒரு மங்களத்தை வள்ளலார் பாடியிருக்கிறார் என்பதுகூடப் பலருக்குத் தெரியாது.

இனி மங்களம் என்ற சொல்லாராய்ச்சியைச் சிறிதளவு செய்து நிறைவு செய்வோம் (முடிப்போம்).

மங்கலம் - மங்களம் என்ற இருவகை வழக்குமே தமிழில் வழங்குகின்றன. ல, ள - இவ்விரண்டுமே இடையினம்தான். லகர, ளகர வேறுபாடு தானே தவிர, பொருளில் மங்கலம் மங்களம் இவ் இரண்டிற்கும் வேறுபாடு இல்லை; இரண்டும் ஒன்றே, ஒரே பொருளை உடையனவே எனக் கூறுகின்றனர். ஆனால் இவ்விரண்டின் வழக்காறுகளைச் சிறிது கூர்ந்து நோக்கின் இவ்விரண்டும் வெவ்வேறுவகையில் வழங்கி வருவது நன்கு விளங்கும்.

முடிப்பதை மங்களம் பாடுவது என்கிறோம். மங்களம் பாடி முடிக்கிறோம். ஆனால் தொடக்கத்திற் பாடுவதை மங்கலவாழ்த்து என்கிறோம். சிலப்பதிகாரத்தில் முதற்காதை மங்கலவாழ்த்துப்பாடல். சிவஞானபோதத்தில் முதலிலிருப்பது மங்கல வாழ்த்து. இதனால் தொடக்கத்திற்கு மங்கலமும், நிறைவிற்கு மங்களமும் வழங்குகின்றன எனக்கொள்ளலாம்.

ஊர்ப்பெயர்கள் இராசமங்கலம், மகேந்திரமங்கலம், நரசிங்கமங்கலம் சாத்தமங்கலம் என (மங்கலமாக) வழங்குகின்றன. ஆனால் மக்கட் பெயர்களோ, இராஜமங்களம், யோகமங்களம், மங்களம், மங்களாம்பிகை, மங்களநாயகி, மங்களேஸ்வரி என (மங்களமாக) வழங்குகின்றன. இதனால் மங்கலம் ஊர்ப்பெயர் வழக்கு. மங்களம் மக்கட் பெயர் வழக்கு என இருவேறு வழக்குகளாகக் கொள்ளலாம். மக்கட் பெயர் வழக்கிலும் மங்களப் பெயர்கள் பெரும்பாலும் பெண்பாற்பெயர்களாகவே காணப்படுகின்றன. மங்களம் என்பதேகூட முன்ஒட்டு பின்ஒட்டு எதுவும் பெறாமல் தனித்தே பெண்பாற் பெயராக வழங்குகிறது. மங்களம் என்ற பேருடைய பெண்கள் பலர். ஆனால் மங்களம் என்ற பெயரில் ஆண்கள் யாரும் இலர். ஆதலின் மங்களம், என்ற பெயர் பெண்களுக்கே உரிய பெயராகத் தெரிகிறது. எனவே மங்களம் பெண் தன்மையுடையது எனக் கருதலாம். அவ்வாறாயின் மங்கலம் ஆண்தன்மையுடையதோ?

மங்கலமுடையார் என்ற பேருடைய பேராசிரியர் ஒருவர் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்திலுள்ளார். அவர் பெயரில் மங்கலமே உள்ளது; மங்களம் இல்லை. அவர் மங்கலமுடையார். மங்களமுடையார் இல்லை. மங்கலநாதன், மங்கலேஸ்வரன் என்பன ஆடவர் பெயர்களாகலாம். பாடல்பெற்ற சிவத்தலங்கள் பலவற்றில் இறைவியின் பெயர் மங்களநாயகி என வழங்குகிறது. ஒரே ஒரு தலத்தில்தான் (சிறுகுடி) இறைவன் பெயர் மங்களேசுவரர் என வழங்குகிறது. அங்கும் அம்மையின் பெயர் மங்களநாயகி. அம்மையாரின் பெயரே இறைவனுக்கும் ஆயிற்றுப்போலும். இவ்வழக்காறுகளை நோக்க, மங்களம் - மக்கட் பெயரில் பெருக வழங்குவது, பெண்பாற் பெயராக வழங்குவது; மங்கலம் - மக்கட் பெயரில் அருகி வழங்குவது, ஆண்பாற் பெயராக வழங்குவது எனக் கொள்ளலாம். மங்களம் - பெண்மை; மங்கலம் - ஆண்மை என்றும் சொல்லலாம்.

பழந்தமிழ் நூல்களில் மங்கலம் என்ற ஆட்சியே காணப்படுகிறது. மங்கலம் மங்கல அணி, மங்கல மகளிர், மங்கல மடந்தை, மங்கல மறையோர், மங்கல மொழி மங்கலத் திருநாள், மங்கல வாழ்த்துப் பாடல் என்றூ தொல்காப்பியம் புறநானூறு சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய பழந்தமிழ் நூல்களிற் காணப்படுகின்றன ஓரிடத்திலாதல் மங்களம் என்ற ஆட்சிஇல்லை. பெருமங்கலம், மணமங்கலம், பொலிவு மங்கலம், நாண்மங்கலம், குடைமங்கலம், வாண்மங்கலம், மண்ணுமங்கலம் என்பவை புறப்பொருள்வெண்பாமாலையிற் கூறப்பெறும் மங்கல விழாக்கள். திருக்குற ளிலும் 'மங்கலம் என்ப மனைமாட்சி' என்றே காணப்பெறுகிறது.

கண்ணகியை மங்களாதேவி என்றும் கண்ணகி கோயிலை மங்களா தேவி கோயில் என்றும் இந்நாளில் வழங்குகிறோம். சிலப்பதிகாரத்தில் கண்ணகி மங்கல மடந்தை என்று குறிக்கப்பெறுகிறுர். 'மங்கலமடந்தை - மங்கலா தேவி' என்றும், 'ஆயிழைகோட்டம் - மங்கலாதேவி கோயில்' என்றும், (சிலப்பதிகார) அரும்பத உரைகாரர் உரையெழுதுகிறுர். ஆனுல் பதிப்பாசிரியர் டாக்டர் உ.வே. சாமிநாதைய ரவர்களோ அரும்பத முதலியவற்றின் அகராதியில் 'மங்கல மடந்தை - மங்களாதேவி; என்றது கண்ணகியை' என்று எழுதுகிறுர். எனவே மங்கலாதேவி என்பதே முன்னை வழக்கு, நூலாசிரியர் காலத்து, உரையாசிரியர் காலத்து வழக்கு என்பதும், மங்களா தேவி என்பது பதிப்பாசிரியர் (டாக்டர் உ.வே.சா) காலத்துக்குச் சற்று முற்காலத் தில் உண்டான புதிய வழக்கு என்பதும் நன்கறியப் பெறும்.

மங்கலப் பொருள்கள் எட்டு, தமிழில் அட்டமங்கலம் என்றே வழங்கப் பெறுகிறது.

மங்கல அணியாகிய தாலி மங்கிலியம், மங்கலியம் மாங்கல்யம் என வழங்கப் பெறுகிறது. மங்கிளியம், மங்களியம்,மாங்கள்யம் என வழங்கப்பெறுவதில்லை. மங்கள சூத்ரம் என்பது வடமொழி வழக்கு.

சைவத்தில், பாடல் பெற்ற தலங்கள் என்கிறோம். வைணவத்தில், மங்களா சாசனம் பெற்ற திருப்பதிகள் என்பர்.

மங்கலம் என்பது தமிழ். மங்களம் என்பது வடமொழி. இரண்டும் சுபம், நன்மை என்ற பொருளிலேயே வழங்குகின்றன. சுபமங்களம், மங்களகரமான என்ற வழக்குகளைக் காண்க.

இதுகாறும் கண்டவற்ருல்,

மங்கலம் — தொடக்கம்; ஊர்ப்பெயர்; தமிழ்வழக்கு
மங்களம் — நிறைவு; மக்கட்பெயர்; வடமொழி வழக்கு

என்பது தெளிவு. மங்கலம் என்ற பண்டைத் தமிழ்வழக்கு, பின்னுளில் குறைந்து. மங்களம் என்ற வடமொழி வழக்கு மிகுந்து விட்டது. வள்ளற்பெருமான் காலத்திய நிலை இதுவே. எனவே வள்ளற்பெருமான் அக்காலத்திய (இம்மங்கலத்தைப் பாடிய காலத்திய) கால நிலைக்கும் கருத்து நிலைக்கும் ஏற்ப இம்மங்களத்தைப் ப்பாடியருளினுர். மங்களம் என ளகரத்தையே வழங்கினுர்.

பொன்னேரி சுந்தரம் பிள்ளை அவர்களது ஆறு திருமுறையும் சேர்ந்த முதற் பதிப்பில் தான் (1892) இது முதன் முதலாக அச்சாகிறது. நூலின் இறுதியில் ஈற்றுப் பாடலாக மங்களம் என்ற தலைப்பில் அச்சாகியுள்ளது. இதன்கீழ் 'பாடல் வகைகள் முற்றிற்று' என்று குறித்து நூல் முற்றுவிக்கப் பெற்றுள்ளது. ஆ.பா. பதிப்பில் இது தனிப்பாசுரப் பகுதியிலும் கீர்த்தனைப் பகுதியிலும் சேர்ந்துள்ளது பொ.சு. முதல் அச்சில் இராகதாளக் குறிப்பு இல்லை. ஆ.பா. பதிப்பில் இராகம்: மத்யமாவதி, தாளம்: ருபகம்.

மங்கல நிறைவு. மங்களம்.

அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி
வள்ளலார் கழல் வாழ்த்தல் வாழ்வாவதே!

---

# திருஅருட்பா இசைப்பாடல்கள்

## இராக தாள அட்டவணை

### தொகுப்பு : ஊரன்அடிகள்

| | இராகம் | தாளம் | பதிப்பு |
|---|---|---|---|
| **1. கொம்மி** | | | |
| 1. சண்முகர் கொம்மி | ஆனந்தபைரவி | ஆதி | சென்னை - ஆ. பா. |
| 2. நடேசர் கொம்மி | ஆனந்தபைரவி | ஆதி | சென்னை. |
| | ஹுஸானி | மிச்ரசாபு | ஆ. பா. |
| **2. கண்ணிகள்** | | | |
| 1. பாங்கிமார் கண்ணி | ஆனந்தபைரவி | ஆதி | சென்னை - ஆ. பா. |
| 2. வெண்ணிலாக் கண்ணி | புன்னாகவராளி | ஆதி | சென்னை - ஆ. பா. |
| 3. முறையிட்டுக்கண்ணி | பந்துவராளி | ஆதி | சென்னை. |
| | எதுகுலகாம்போஜி | ,, | ஆ. பா. |
| 4. திருவடிக்கண்ணி | நீலாம்பரி | ஆதி | சென்னை - ஆ. பா. |
| 5. பேரன்புக்கண்ணி | பந்துவராளி | ஆதி | சென்னை. |
| | காமவர்த்தனி | ,, | ஆ. பா. |
| **3. பண்கள்** | | | |
| 1. சிவபதிவிளக்கம் | காம்போஜி | ஆதி | ஆ. பா. |
| 2. ஞானோபதேசம் | பண் : நட்டராகம் | — | 6 மு, முதல் சென்னை முடிய |
| | நீலாம்பரி | ரூபகம் | ஆ. பா. |
| 3. ஆரமுதப் பேறு | பண் : நட்டராகம் | — | 6 மு, முதல் சென்னை முடிய |
| | சங்கராபரணம் | ரூபகம் | ஆ. பா. |
| **4. வருகை** | | | |
| 1. சண்முகர் வருகை | காபி | சாப்பு | சென்னை-ஆ. பா. |
| 2. அம்பலவாணர் வருகை | காம்போதி | அடதாளம் | 6மு-பொ.சு-பி. இரா-சென்னை. |
| | சாமா | ,, | ச.மு.க. |
| | கல்யாணி | மிச்ரசாபு | ஆ.பா. |

| | இராகம் | தாளம் | பதிப்பு |
|---|---|---|---|
| 3, அம்பலவாணர் ஆட வருகை | மோகனம் | ஏகதாளசாப்பு | 6மு, முதல் சென்னை முடிய |
| | ,, | ஆதி | ஆ.பா |
| 4. அம்பலவாணர் அணைய வருகை | ஆனந்தபைரவி | ஆதி | 6மு, முதல் சென்னை முடிய |
| | ஸாவேரி | மிச்ரசாபு | ஆ.பா. |
| **5. கீர்த்தனங்கள்** | | | |
| 1. தெண்டனிட்டேன் | தோடி | ஆதி | 1-4மு, முதல் எல்லாம் |
| 2. இன்னந் தயவு வரவிலையா | காம்போதி | ஆதி | ,, |
| 3. அஞ்சாதே நெஞ்சே | இந்துஸ்தான்காப்பி | ஏகதாளம் | 6மு-பொ.சு. - பி.இரா. |
| | ,, | சாப்பு | ச.மு.க -சென்னை-ஆ.பா. |
| 4. ஆடியபாதம் | தன்யாசி | ரூபகம் | 6மு, முதல் சென்னை முடிய |
| | ,, | சாபு | ஆ.பா. |
| 5. அபயம் அபயம் | தோடி | ஆதி | 6மு, முதல் எல்லாம் |
| 6. வருவார் அழைத்துவாடி | பியாகடை | அடதாளசாப்பு | 6மு, முதல் சென்னை முடிய |
| | ,, | மிச்ரசாபு | ஆ. பா. |
| 7. என்ன புண்ணியம் செய்தேனோ | உசேனி | அடதாளம் | 6மு, முதல் சென்னை முடிய |
| | ,, | ரூபகம் | ஆ.பா. |
| 8. இவர்க்கும் எனக்கும் | பைரவி | ரூபகம் | 6மு, முதல் சென்னை முடிய |
| | ,, | மிச்ரசாபு | ஆ.பா. |
| 9. இது நல்ல தருணம் | கல்யாணி | அடதாளம் | 6மு, முதல் சென்னை முடிய |
| | ,, | மிச்ரசாபு | ஆ.பா. |
| **6. ஆடற்பாடல்கள்** | | | |
| | சிந்துபைரவி | ஆதி | சென்னை |
| 1. தோழியர் உரையாடல் | ஹுஸானி | மிச்ரசாபு | ஆ.பா. |
| | மோகனம் | ஆதி(1)ஜம்பை(2;3) | ஆ.பா. |
| 2. வினாவிடை | காம்போஜி | ஆதி | ஆ.பா. |
| 3. உபதேசவினா | புன்னாகவராளி | ஆதி | சென்னை. |
| 4. நெஞ்சோடுநேர்தல் | தோடி | மிச்ரசாபு | ஆ.பா |

| | இராகம் | தாளம் | பதிப்பு |
|---|---|---|---|
| 5. திருஉந்தியார் | பௌளி | மிச்ரசாபு | ஆ. பா. |
| 6. பந்தாடல் | பியாகடை | அடதாள சாப்பு | 6. மு, முதல் சென்னை முடிய |
| | பேகட | ஆதி | ஆ. பா. |

**7. ஆனந்தக்களிப்பு**

| | | | |
|---|---|---|---|
| 1. நல்லமருந்து | நாதநாமக்கிரியை | ருபகம் | சென்னை |
| | ,, | மிச்ரசாபு | ஆ. பா. |
| 2. ஞானமருந்து | இந்துஸ்தானி | அனுஷிததாளம் | 6. மு, முதல் சென்னை முடிய |
| | நாதநாமக்கிரியை | மிச்ரசாபு | ஆ· பா. |
| 3. ஆனந்தப்பரிவு | சுத்தசாவேரி (1 - 10) | ஆதி (1 - 10) | ஆ. பா. |
| | எதுகுலகாம்போஜி (1 ) | சாபு (11) | ,, |
| 4. சிவசிவ ஜோதி | இங்லீஷ் மெட்டு சங்கராபரணம் | ஏகதாளம் | 6. மு.—பொ. சு. பி. இரா |
| | ,, | அடதாளம் | ச. மு. க—சென்னை |
| | அஸாவேரி | ஆதி | ஆ. பா. |
| 5. ஜோதியுள் ஜோதி | கமாஸ் | ஆதி | 6. மு. முதல் சென்னை முடிய |
| | மத்யமாவதி | ,, | ஆ. பா. |
| 6. அருள் அற்புதம் | தர்பார் | ருபகம் | 6. மு· முதல் சென்னை முடிய |
| | ,, | மிச்ரசாபு | ஆ. பா |
| 7. ஆணிப்பொன்னம்பலக் காட்சி | எதுகுலகாம்போதி | அடதாளம் உசி | 6.மு பொ. சு-பி. இரா. சென்னை |
| | சாமா | அடதாளம் | ச. மு. க. |
| | எதுகுலகாம்போதி | மிச்ரசாபு | ஆ. பா. |
| 8. அருட்காட்சி | எதுகுலகாம்போதி | அடதாளம் உசி | 6.மு-பொ. சு—பி. இரா |
| | ,, | அடதாளம் | ச. மு. க—சென்னை |
| | ,, | மிச்ரசாபு | ஆ. பா |

| | இராகம் | தாளம் | பதிப்பு |
|---|---|---|---|
| 9. மெய்யருள் வியப்பு | அடானு | ருபகம் | 6. மு – பொ. சு – பி. இரா |
| | செஞ்சுருட்டி | ,, | ச.மு.க – சென்னை – ஆ. பா. |
| 10. கண்புருவப்பூட்டு | சஹானு | ஆதி | 6· மு – பொ· சு – ச. மு. க. |
| | ,, | ருபகம் | சென்னை |
| | பியாக் | ஜம்பை | ஆ. பா. |
| 11. ஊதூது சங்கே | சஹானு | அடதாளம் | 6·மு. முதல் சென்னை முடிய |
| | கரஹரப்பிரிய | ஜம்பை | ஆ. பா |
| 12. சின்னம் பிடி | தன்யாசி | ஆதி | 6.மு. முதல் சென்னை முடிய |
| | காபி | ,, | ஆ.பா. |
| 13. முரசறைதல் | பைரவி | ருபகம் | சென்னை |
| **8. நாமாவளி** | | | |
| 1. அம்பலத்தரசே | இந்துஸ்தான்பியாக் | ஆதி | 6மு-பொ.சு,ச.மு.க.சென்னை |
| 2, சம்போ சங்கர | பியாக் | ஆதி | 6மு,-பொ.சு.-சென்னை |
| 3. சிவபோகம் | சங்கராபரணம், இங்கிலீஷ் மெட்டு, இங்கிலிஷ் நோட்டு | ஆதி | 6மு-பொ·சு சென்னை |
| | சங்கரராபரணம் | ,, | ச.மு.க. |
| 4. அம்பலத்தமுதே | இந்துஸ்தானி | ஆதி | 6மு, பொ.சு. சென்னை |
| 5. திருநடமணியே | மாஞ்சி | அடதாளம் | 6மு,பொ.சு. |
| | ஆனந்தபைரவி | ,, | ச.மு.க. |
| | ,, | ஆதிதாளம் | சென்னை. |
| 6. ஞானசபாபதியே | இந்துஸ்தான்தோடி | அடதாளசாப்பு | 6மு,பொ.சு.ச.மு.க.சென்னை |
| 7. விரைசேர் சடையாய் | சங்கராபரணம் | அடதாளம் | 6மு – பொ.சு. |
| | ,, | ஆதி | ச.மு.க. |
| | தீரசங்கராபரணம் | ,, | சென்னை |
| 8. ஜோதி ஜோதி | கருடத்தொனி | ஏகதாளம் | பொ .சு. |
| **9. மங்களம்** | வஸந்தா | ஆதி | சென்னை |
| | — | — | — |

# ஏழிசை

**ஊரன் அடிகள்**

''யாழுறும் இசையே இனியஇன் இசையே
ஏழுறும் இசையே இயல்அருள் இசையே''

— வள்ளலார்.
அருட்பெருஞ்ஜோதி அகவல் (1423 - 4)

ஏழிசை என்றதுமே முதலில் நினைவுக்கு வருவது 'ஏழிசையாய் இசைப்பயனாய்' என்னும் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம்.

ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய் என்னுடைய
தோழனுமாய் யான்செய்யும் துரிசுகளுக் குடனாகி
மாழையொண்கண் பரவையைத்தந் தாண்டானை மதியில்லா
ஏழையேன் பிரிந்திருக்கேன் என்ஆரூர் இறைவனையே.

— தேவாரம். அடங்கன் முறை 7751
சுந்தரர் தேவாரம் 527

ஏழிசையாய் இசைப்பயனாய் என்னும் சுந்தரர் தேவாரம் வள்ளற்பெருமானின் உள்ளத்தைப் பிணிக்கிறது. பெருமான் பாடுகிறார் :

**ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய் என்னுடைய**
**தோழனுமாய்** என்றுமுன் நீ சொன்னபெருஞ் சொற்பொருளை
ஆழநினைத் திடில்அடியேன் அருங்கரணம் கரைந்துகரைந்
தூழியல்இன் புறுவதுகாண் உயர்கருணைப் பெருந்தகையே.

—திருஅருட்பா 3251

சுந்தரமூர்த்தி சுவாமிகளைப் போற்றிப் புகழ்ந்து பாடிய ஆளுடைய நம்பிகள் அருள் மாலையில் ஐந்தாம் பாட்டு இது. இறைவனை இசையே என்று விளிக்கும் வள்ளற் பெருமானும் அருட்பெருஞ்ஜோதி அகவலில் 'யாழுறும் இசையே ஏழுறும் இசையே' என்கிறார்.

யாழுறும் இசையே இனியஇன் இசையே
ஏழுறும் இசையே இயல்அருள் இசையே — அகவல் 1423 - 4.

யாழுறும் இசை, ஏழுறும் இசை என்பதென்ன ? யாழுறும் இசை - யாழிசை. ஏழுறும் இசை - ஏழிசை, யாழிசையைப் பற்றிச் சிறிதாவது இங்கு கூறவேண்டியது இன்றி யமையாதது எனினும் காலமும் இடமும் அதிகமின்மை கருதி விடுத்து, ஏழிசையை

மட்டும் காண்போம். ஏழிசை ஏழிசை என்று பலருங் கூறுவர். ஆனால் ஏழு இசை இன்னது என்பது சிலருக்குக்கூடத் தெரியாது. ஏழு இசை இன்னது என்பதைத் தெரிவிக்க எழுந்ததே இச் சிறு கட்டுரை.

1. குரல்
2. துத்தம்
3. கைக்கிளை
4. உழை
5. இளி
6. விளரி
7. தாரம்

இவ்வேழும் பண்டைக் காலத்திய ஏழு இசைகள். இனி, இக்காலத்தில் வழங்கும் ஏழு இசை (ஏழிசை)

1. சட்ஜம்
2. ரிஷபம்
3. காந்தாரம்
4. மத்திமம்
5. பஞ்சமம்
6. தைவதம்
7. நிஷாதம்

என்பனவாம்.

| | |
|---|---|
| 1. சட்ஜத்தின் முதலெழுத்து | ச |
| 2. ரிஷபத்தின் முதலெழுத்து | ரி |
| 3. காந்தாரத்தின் முதலெழுத்து | க |
| 4. மத்திமத்தின் முதலெழுத்து | ம |
| 5. பஞ்சமத்தின் முதலெழுத்து | ப |
| 6. தைவதத்தின் முதலெழுத்து | த |
| 7. நிஷாதத்தின் முதலெழுத்து | நி |

இவ்வாறு இவ்வேழின் முதலெழுத்துகள், ச-ரி-க-ம-ப-த-நி என வரும். இது தான் ஏழிசை. இதுதான் ஏழிசையின் அரிச்சுவடி.



காரணப்பட்டு - சமரசபஜனை

# ச. மு. கந்தசாமி பிள்ளை அவர்கள் வரலாறு

---

ஊரன் அடிகள்

ஊர்: காரணப்பட்டு, தென்னார்க்காடு மாவட்டம். கடலூர் விழுப்புரம் சாலையில் தூக்கணாம்பாக்கத்திலிருந்து கிழக்கே ஒன்றரைக்கல். துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளின் சமாதித் தலமாகிய நல்லாற்றூர் இதன் அருகே உள்ளது. ச. மு. க. பிரபந்தத் திரட்டில் (1923) இவரது முகவரி 'சமரச பஜனை, காரணப்பட்டு ச. மு. கந்தசாமி பிள்ளை, நல்லாத்தூர் போஸ்டு, புதுச்சேரி மார்க்கம்' எனக்குறிப்பிடப் பெற்றுள்ளது.

காலம்: பிறப்பு - 1838. சமாதி - 2 - 12 - 1924 (இரத்தாக்ஷி, கார்த்திகை, 17 செவ்வாய், சஷ்டி, அவிட்டம்.)

இரத்தாக்ஷிக் கார்த்திகையில் ஏற்றபதி னேழில்
திரத்தசட்டி சேரவிட்டம் செவ்வாய் - விரக்தனவன்
காரணப் பட்டினிலே கந்தசா மிப்பெரியோன்
பூரணனாய் நின்றான் பொலிந்து.

என்பது புதுவை P.N. இராசமாணிக்கம் பிள்ளை பாடிய வெண்பா.

குலம், கோத்திரம் முதலியன: கருணீகர் குலம், பிரமகோத்திரம். ஆபஸ்தம்ப சூத்திரம், ஒழுகரையான்குடி.

பெற்றோர்: பாட்டனார்: சந்திரசேகரம் பிள்ளை, தந்தையார்: முத்துசாமி பிள்ளை, தாயார்: தைலம்மாள்.

குலம் கோத்திரம் பெற்றோர் முதலிய இவ்விவரங்கள் இவரது பிரபந்தத்திரட்டுக்குப் புலவர் பலர் அளித்த சாற்றுக் கவிகளால் அறியப்படுகின்றன.

வள்ளலாரின் மாணாக்கர்: இவர் வள்ளற் பெருமானது மாணாக்கர். வள்ளலாரையே உபாசனா மூர்த்தியாகக் கொண்டொழுகியவர். "திருவருட் பிரகாச வள்ளலாரை உபாசனா மூர்த்தியாகக் கொண்டொழுகும் காரணப்பட்டு சமரஸ பஜனை ச. மு, கந்தசாமி பிள்ளை" என இவரது பிரபந்தத் திரட்டின் (1923) முகப்பேட்டிலும், திருஅருட்பாப் பதிப்பின் (1924) முகப்பேட்டிலும் அச்சிடப் பெற்றிருப்பதால் இது விளங்கும். இவர் தமிழ் இலக்கண இலக்கியங்களையும் சைவநூல்களையும் கற்றவர். இயற்புலமையோடு இசைப்புலமையும் வாய்ந்தவர். வள்ளலாரின் மீது இசைப் பிரபந்தங்கள் பலவற்றைப் பாடியவர். வள்ளலாரின் மாணாக்கர்களில், திருவருட்பாப் பதிப்பாசிரியர்களில் இவர் ஒருவரே இசைப்புலவர், சங்கீத வித்வான், சாகித்ய கர்த்தா. இவர் வடலூரில் வள்ளற்பெருமானைத் தரிசித்துப்பெருமானின் வாழ்த்தைப் பெற்றது இவர் எழுதிய இராமலிங்கசுவாமிகள் சரித்திரக் குறிப்பிலும், இவர் பாடிய இராமலிங்க சுவாமிகள் சரித்திரக் கீர்த்தனையிலும் குறிப்பிடப்பெற்றுள்ளது.

காரணப்பட்டுக் கந்தசாமிப் பிள்ளை மெய்மயக்கந் தாங்காது, வடலூர் வள்ளலாரிடஞ் சென்று குறையிரந்தபோது, வள்ளலார் விபூதி கொடுத்தருளி ''தக்க உத்தியோகந் தருவோம்'' என்று அருளிச்செய்தனர் அன்று திருவருட்பிரகாச வள்ளலார் சாற்றியருளிய கட்டளையே இன்று வள்ளலாரது திவ்விய சரித்திரம் எழுதுவதற்கு அருள் ஆணையாயிற்று.

— இராமலிங்க சுவாமிகள் சரித்திரக் குறிப்புகள்

சற்சனர்சூழ் காரணப்பட்டூர் வாழ்கந்த
சாமிக்கிருந்த மெய்ம்மயக்கம்
தாங்காது நுஞ்சந்நி தானத்திற்கு வந்து
தனக்கு ளெண்ணவத் தியக்கம்
தக்கணமேக விபூதி தந்து பின்பு
தக்கவுத்தியோகந் தருவோ மென்றன்பு
சாற்றியதுமுதல் மயக்கந்தீர்ந்த
தன்மையறிந்த வடியே மின்பார்ந்த

— இராமலிங்க சுவாமிகள் சரித்திரக் கீர்த்தனை - 241

ச. மு. க. பிரபந்தத் திரட்டு: இவர், தாம் பாடிய பிரபந்தங்கள் அனைத்தையும் தொகுத்து 'ச. மு. கந்தசாமி பிள்ளையவர்கள் இயற்றிய பிரபந்தத் திரட்டு' என்னும் பெயருடன் 1923-ல் வெளியிட்டார். பாடிய பிரபந்தங்கள் 24. அவற்றுள் வள்ளற் பெருமானைப் பற்றியன 14.

திரு அருட்பா. ச. மு. க பதிப்பு: வள்ளற் பெருமான் அருளிய திரு அருட்பா ஆறு திருமுறைகளையும் ஒரே புத்தகமாக 1924-ல் இவர் பதிப்பித்தார். பிரபந்தத் திரட்டையும் திருவருட்பாப் பதிப்பையும் வெளியிட்டுதவியவர் புதுக்கோட்டை இராமச்சந்திரபுரம் தீ. நா. முத்தையா செட்டியார் ஆவார்.

ச. மு. க. வின் புகழ்: பிரபந்தத் திரட்டு, திருஅருட்பாப் பதிப்பு ஆகிய இவ்விரண்டைப் பற்றியும், இவற்றைப் பாடிய, பதிப்பித்த ச. மு க., வெளியிட்ட தீ. நா.முத்தையா செட்டியார் ஆகிய இருவரைப் பற்றியும் இன்னும் சொல்ல வேண்டிய செய்திகள் மிகப்பல உள. எனினும் விரிவஞ்சி விடுத்தாம். பெருமானோடு பழகியவர்களுள் ச. மு. க. ஒருவரே பெருமானது சித்திக்குப்பின் நீண்ட காலம் - 50 ஆண்டுகள் - வாழ்ந்தவர். இவரை அறியாதார் எவரும் இல்லை என்னும் படி இந்நூற்றாண்டின் முதற்பகுதியில் இவர் புகழ் தமிழகத்தில் பரவியிருந்தது. 'சமரசபஜனைக் குமரன்' என இக்கிழவரை அந்நாளில் அனைவரும் போற்றினர். இவரது சமாதி வழிபாடு இன்றும் காரணப்பட்டில் ஆண்டுதோறும் நிகழ்கிறது. நாமும் ஒருமுறை சென்று தரிசித்துப் புகழ் பரவினோம்.

வாழ்க! ச. மு. க. புகழ்.



அந்நாளைய ஓர் அபூர்வ அருட்பா கோஷ்டி

1950ல் காரைக்குடி நகரச் சிவன்கோயில் ஆடிப்பெருவிழாவில் அருட்பா கோஷ்டி. அப்போது எடுக்கப்பெற்ற படம். இடமிருந்துவலம்.

1. புதுக்கோட்டை சதாசிவம்பிள்ளை. விழாவுக்கு வந்திருந்த பிரமுகர்.
2. புவனகிரி அருட்பாமணி மார்க்கண்டன். அருட்பாவில் திருமுறை வகுத்துப் பாடுவதில் வல்லவர். நிறைய மனப்பாடம், நல்ல இசை ஞானம் உடையவர். சுவாமி மலை சீனுவாசப்பிள்ளையிடம் பயிற்சி பெற்றவர். இசைக்கொண்டல் மாயூரம் இராமசாமியுடன் பாடுபவர்.
3. நகராமலை அருட்பாஅரசு சங்கரம் பிள்ளை
4. நாகூர் அருட்பாநம்பி தண்டபாணி ஐயர். இவ்விருவரும் அந்நாளில் நாடறிந்த அருட்பா இசைவாணர்கள். இவர்கள் சென்று பாடாத ஊர்களே இல்லை எனலாம். அருட்பா கோஷ்டியில் இவர்கள் பெரிய வித்வான்கள். சீடர்கள் பலரை ஆளாக்கியவர்கள்.
5. அருட்பாமணி. ந. விசுவநாதன். இந்த கோஷ்டியில் இளைஞர் இவரே.
6. காரைக்குடி சிதம்பரம் செட்டியார். மேற்குறித்த கோயிலின் அறங்காவலர்.

7. புதுக்கோட்டை அருங்குளலிங்கம் பிள்ளை. புதுக்கோட்டையில் ஒரு சத்தியஞான சபையை அமைத்து அதற்குச் சொத்துகளும் ஏற்பாடு செய்து வைத்தவர். புதுக் கோட்டைச் சன்மார்க்க அன்பர்களில் புகழ் பெற்றவர். அப்பகுதியில் நல்ல தொண்டு செய்தவர்.

8. தில்லையாடி இராமசாமி வாத்தியார், மிருதங்க வித்வான். அருட்பா கோஷ்டிகளுக்கே மிருதங்கம் வாசிப்பவர். இப்போது இவரது மகனும் வாசிக்கிறார்.

இவர்களில் இப்போது நம்மிடையே விளங்குபவர்கள் அருட்பா மணிவிசுவநாதனும் மிருதங்க வித்வான் தில்லையாடி இராமசாமியுமே ஆவர்.



## அமரர். அருட்பா.வெ.மகாலிங்கம்

பிறப்பு: 1915 - 11 - 25

ஊர்: மதுரை. விஸ்வகர்மகுலத்தினர். இவரது தந்தையாரே இசைப்புலவர் (சங்கீத வித்வான் சங்கீதம் குரு. வெற்றிவேல் ஆச்சாரியார் என்று அவர் வழங்கப்பெற்றார். மகாலிங்கம் குலத்தொழிலாகிய பொற்பணி, இசை ஆகிய இரண்டிலுமே சிறப்புற்று விளங்கினார். இளமை முதலே தேசபக்தர் 21ம் வயதில் காரைக்குடியில் காங்கிரஸ் பொதுக்கூட்டத்தில் நேருவின் முன்னிலையில் தேசிய கீதங்கள் பாடினார். உப்பு சத்தியாகிரகத்தில் கலந்து கொண்டார். தியாகி மான்யமாகக் கிடைத்த ஏழு ஏக்கர் நிலத்தைச் சுதந்திரத்திற்குப்பின் தனது 50 ஆம் வயதில் நாட்டுக்கே அர்ப்பணித்துவிட்டார். மதுரை எழுத்தாணிக்காரத் தெரு அங்காள பரமேஸ்வரி ஆலயத்தில் திருஅருட்பா இசை மன்றம் அமைத்து வியாழன் தோறும் திருஅருட்பா இசை நிகழ்ச்சிகளை நடத்தினார். 'அருட்பா' மகாலிங்கம் என்பது வாரியார் சுவாமிகள் வழங்கிய பட்டம். மதுரை மாரியப்ப சுவாமிகள், முத்துராமலிங்கத் தேவர், காமராஜ், பி.டி. இராசன் ஆகியோருடன் பழகியவர். சங்கராசாரிய சுவாமிகள் மதுரைக்கு விஜயம் செய்து சேதுபதி உயர்நிலைப்பள்ளியில் பூஜைகள் நடத்திய பொழுது இவர் திருஅருட்பா இசைத்தார். இவரது மணிவிழா 75லும், பவளவிழா 85லும் நிகழ்ந்தன. 1986 - 11 - 31ல் 72 ஆம் வயதில் அமரரானார். இவருக்கு ஆண் மக்கள் இருவர் ஒருவர் சக்திவேல், மற்றவர் சோமாஸ்கந்தமூர்த்தி. மதுரை. மகா. சக்திவேல் தந்தை வழியில் நின்று பொற்பணியும் ஆன்மிகப்பணியும் ஆற்றி வருகிறார். மகா. சோமாஸ்கந்தமூர்த்தி எம்.ஏ., மதுரை அகில இந்திய வானொலி நிலையத்தில் நிகழ்ச்சிப் பொறுப்பாளராகப் பணியாற்றுகிறார்.



## அருட்பாமணி. திரு. ந. விசுவநாதன்

வடலூர் அருட்பா இசைக் கலைஞர்களுள் முதல்வர், திருஅருட்பா இசைச் சங்கத்தின் செயலாளர்.

**பிறந்த ஊர் :** நாகப்பட்டினம்

**பெற்றோர் :** நமசிவாயம்; குஞ்சம்மாள்

**குடும்பம் :** சைவக்குடும்பம்

**பிறந்த ஆண்டு :** 1913

**கல்வி :** உயர்நிலைப்பள்ளியில் நான்காம் படிவம்

**வள்ளலாரின் வழிவழித் தொண்டர் :** பெருமானின் சீடர் காரணப்பட்டு சமரச பஜனை ச.மு. கந்தசாமிப் பிள்ளை. அவர் மாணுக்கர் நாகை அருட்பா அட்டவணை இரத்தினம் பிள்ளை, அவருடைய மாணுக்கர் இவர்.

**ஆசிரியர்கள் :** செம்பியநல்லூர் கோவிந்தசாமி ஐயா, ஊட்டி அருணுசலம் பிள்ளை. நாகை அருட்பா அட்டவணை இரத்தினம் பிள்ளை, பிறையாறு சிதம்பர சுவாமிகள்.

**இசை ஆசிரியர் :** அன்னையார் குஞ்சம்மாள். 17 ஆம் வயது முதல் திருஅருட்பா கோஷ்டிகள், திருஅருட்பா இசைச் சொற்பொழிவு, சன்மார்க்க சங்கங்கள் நிறுவுதல்.

**பட்டங்கள் :** "அருட்பாமணி" - தவத்திரு குன்றக்குடி அடிகளார் வழங்கியது. "அருட்பாமுரசு", "அருளம்மை" - நாகை சன்மார்க்க சாதக சங்கத்தார் வழங்கியது. மற்றும் பல பட்டங்கள் போட்டுக் கொள்வதில்லை,

**சிறப்புச் சொற்பொழிவு :** அருளம்மை; அருள்மகன். ஆதாரம் திருஅருட்பாவே.

**நாடக அனுபவம் :** சென்னை ஜோதிகான சபா சரித்திர நாடகங்களிலும், சிறப்பாக வள்ளலார் நாடகத்தில் பெருமாளுகவும், வேலாயுத முதலியாராகவும்.

**தொழில் :** சொந்தத்தில் நாதன் போட்டோ ஸ்டுடியோ. இக்கலையில் இவர் வல்லவர். இவர் எடுத்த சாலை, சபை, வள்ளலார், மேட்டுக்குப்பம், கருங்குழி, மருதூர், படங்களை பெரும்பாலும் அன்று முதல் இன்று வரை எங்கும் வழங்குபவை. கருங்குழியிலுள்ள பெருமான் அமர்ந்த கோலப் படத்தை முதன் முதலில் எடுத்து வெளியிட்டவர் இவரே.

**வடலூரில் சன்மார்க்கப் பணி :** 1936 முதல் 1944 வரை வடலூரில் வள்ளலார் திருநெறிமன்றம் என்னும் சங்கத்தைத் தொடங்கிப் பதிவுசெய்து நடத்திவந்தார். 1944 முதல் 10 ஆண்டுகள் இரவு பகலாகக் கிராமப்புறங்களில் அருட்பா பிரசாரம். காலஞ் சென்ற அருட்பா கோஷ்டி சுவாமிமலை சீனிவாசம் பிள்ளை, கணபதி உபாத்தியாயர், சங்கரம் பிள்ளை, தண்டபாணி ஐயர், மார்க்கண்டன், முத்துக்குமார சுவ மி, சிவம், இவர்களோடு அருட்பா கோஷ்டி செய்திருக்கிறர். இவரது திருமணம் சன்மார்க்க முறையில் நிகழ்ந்தது. 1957 முதல் நிலையாக வடலூரில் வாசம், அது முதல் வடலூர் சத்திய தருமச்சாலையில் குருவார பஜனை, பாராயணம், மாதப்பூச பாராயணம், விழா நாள்களில் பாராயணம், முற்றேதல் இவற்றைத் தவருமல் முக்கியமாக இருந்துசெய்து வருகிறர். அகவல், திருஅருட்பாப் பாடல்கள், திருவடிப்புகழ்ச்சி ஆகியவற்றைக் கேசட்டில் பாடிக் கொடுத்திருக்கிறர். குடந்தை சண்முகானந்த ஆஸ்ரம சமரசசுத்த சன்மார்க்க சங்கத்தாரால் நடத்தப்பெற்ற திருஅருட்பாப் போட்டியில் முதற்பரிசாகத் திருஅருட்பா ஆறு திருமுறைகளையும் திரு முருக கிருபானந்தவாரியார் அவர்கள் கையால் அந்நாளிலேயே வழங்கப் பெற்றர். சாகித்ய கர்த்தா சரவணபவானந்தா அவர்கள் இவரது பள்ளித்தோழர். சுவாமிமலை சன்மார்க்க சங்க ஸ்தாபகர் பழனிவேல் பிள்ளை அவர்கள் இவரது ஆத்மார்த்த நண்பர். அருட்பாமணியின் 60 ஆம் ஆண்டு மணி விழாச் சாந்தி வடலூரில் சத்திய தருமச் சாலையில் தவத்திரு ஊரன் அடிகளா ரால் செய்து வைக்கப் பெற்றது.

வடலூர் வள்ளலார் தெய்வ நிலையங்களின் **ஆஸ்தான வித்வானைப்** போல இருந்து, அருட்பா இசை, பாராயணம், முற்றேதல் போன்ற அனைத்தையும் பல்லாண்டு களாகச் செய்து வருகிறர். தைப்பூசத்தன்று இரவு விடிய விடிய இவரது இசைச் சொற்பொழிவு தைப்பூச விழாவில் தருமச்சாலை மேடையில் நிகழ்வது பல்லாண்டு களாக வழக்கம்.

வடலூரில் தோன்றியுள்ள திரு அருட்பா இசைச் சங்கத்தின் செயலாளராகவும் இதுபோது பணியாற்றுகிறர். 1986 அக்டோபரில் நிகழ்ந்த முதல் ஆண்டு இசை விழாவில் திரு. G. வாகீசம் பிள்ளை அவர்களால் சன்மார்க்க அன்பர்கள் சார்பில் பதக்கமும் பொன்னுடையும் அணிவித்துக் கௌரவிக்கப் பெற்றர். தம்மிடம் வரு வோருக்குத் தக்கவரானல் அருட்பா பயிற்றுவித்து வருகிறர். இவரது அருட்பா சீடர் பலர் புகழ் பெற்று விளங்குகின்றனர்.

முகவரி : அருட்பாமணி ந. விசுவநாதன், 13 - C "அருட்குடில்," தருமச்சாலை வீதி, வடலூர் - 607 303. தென்னர்க்காடு மாவட்டம்.



'அருட்பா அமுது'

## இசைமுகில் திரு. K. புருஷோத்தமன்

இவரது ஊர் வடலூர்க்கு அருகில் உள்ள நெத்தினுங்குப்பம். வீட்டுக்கு 'விளங்குகுடில்' என்ற நல்ல பெயரைச் சூட்டியிருக்கிறர். 'திருவிளங்க சிவயோக நிலைவிளங்க' என்ற பாட்டில் வள்ளற் பெருமான் எல்லாவற்றையும் விளங்கச் சொல்லுகிறரல்லவா? அதனுற்போலும் இவரது வீடு விளங்கு குடிலாயிற்று. தந்தையார்: கேசவன், தாயார்: வடிவாம்பாள் பிறப்பு: 9-10-1928. எட்டாம் வகுப்புப் படிக்கும்போதே பள்ளியில் நடந்த விழாவில் நந்தனுர் நாடகத்தில் வேதியர் வேடம் தாங்கிப் பாடி நடித்தார். 19 வயதில் நவாப் இராஜமாணிக்கத்தின் மதுரை ஒரிஜினல் பாய்ஸ் கம்பெனியிலும் வைரம் செட்டியார் நாடகக் கம்பெனியிலும் சேர்ந்து ஆறு ஏழு மாதங்கள் பாடி நடித்தார். நிரபராதி, தேவமனேகரி, வாழ்க்கைப்படகு ஆகிய திரைப் படங்களில் சிறு வேடங்களில் நடித்துள்ளார். மந்திரவாதி என்னும் படத்தில் ஒரு பாடலும் பின்னணியாகப் பாடியுள்ளார். நாளடைவில் வள்ளலாரிடம் பற்று ஏற்படவே வள்ளற்பெருமானையே மானசீக குருவாகக்கொண்டு திருஅருட்பா இசைக் கச்சேரிகள் செய்யத் தொடங்கினுர். வள்ளலார் வரலாற்று நாடகத்தில் பாடினுர். இசைச்சொற் பொழிவுகளும் செய்தார். 1975 முதல் சுமார் 12 ஆண்டுகளாக வள்ளற்பெருமானைத் தவிர வேறு எந்த நிகழ்ச்சியும் செய்வதில்லை என்ற உறுதியுடன் திருஅருட்பா இசைப் பணியே புரிந்து வருகிறர். வடலூரில் வள்ளலார் தெய்வநிலையங்கள் நடத்தும் தைப்பூச விழாவில் தருமச்சாலை மேடையில் நிகழும் திருஅருட்பா இசையரங்கில் இவரது இசை நிகழ்ச்சி தவருது சுமார் 10 ஆண்டுகளாக இடம் பெற்று வருகிறது. தற்போது வடலூரிலுள்ள அருட்பா இசைக்கலைஞர்களில் அருட்பாமணி திரு. ந. விசுவநாதன் அவர்களுக்கு அடுத்த படியாகச் சொல்லக்கூடியவர் இவர். அருட்பா நாடகக் கலைஞர் வில்லிசைக் கலைஞர் கவிஞர் திரு ஆதிகணேசன் அவர்களுடன் சேர்ந்து அவர் இயலும் இவர் இசையுமாகத் திருஅருட்பா இயலிசை அரங்கையும் நடத்துபவர். ஆதிகணேச னின் வள்ளலார் நாடகத்தில் பெரும்பாலும் இசை இவருடையதே. ''இசைமுகில்'' என்ற பட்டம் குணசித்திர நடிகர் திரு. S. V. சுப்பையா அவர்களால் இவருக்கு வழங்கப்பெற்றது. விழுப்புரம் சன்மார்க்க மாநாட்டில் வழங்கப்பெற்ற பட்டம் ''அருட்பா அமுது''. புதுவையில் வழங்கப்பெற்ற பட்டம் ''எழிலிசைநம்பி''. ஆரணியில் வழங்கப்பெற்ற பட்டம் ''அருட்பா இன்னிசை வேந்தர்''. 1978 முதல் பாண்டிச்சேரி அகில இந்திய வானெலியில் (பாட்டும் கதையும் என்ற பகுதியில்) பாடி வருகிறர். அருட்பாப்பாடல்களைக் கேசட்டிலும் பாடியிருக்கிறர். வடலூரில் நிகழ்ந்த

இசைவிழாவில் இரண்டு ஆண்டுகளிலுமே இவர் பாடினர். 1986 அக்டோபரில் நிகழ்ந்த முதலாண்டு இசை விழாவில் சன்மார்க்க அன்பர்கள் சார்பில் திரு. ம. வாகீசம் பிள்ளை அவர்களால் பதக்கமும் பொன்னாடையும் அணிவித்துக் கௌரவிக்கப்பெற்றார். 20 ஆண்டு சன்மார்க்க ஈடுபாடும் அதிலும் 12 ஆண்டுகள் தனிச்சிறப்பான ஈடுபாடும் கொண்ட வடலூர் அருட்பா இசைக் கலைஞராய் நாடெங்கும் பாடிவரும் இவரைப் புகழ் தேடி வருகிறது. நாடி அழைப்பதற்குரிய முகவரி:

"அருட்பா அமுது" "இசைமுகில்" திரு K. புருஷோத்தமன், விளங்குகுடில், நெத்திநுங்குப்பம், வடலூர் - 607 303.



'வள்ளலார் வில்லிசைக்கலாநிதி'

## கவிஞர். ஆதி கணேசன்

இவர் வடலூரிற் பிறந்து வளர்ந்து வாழ்பவர். வள்ளலார் வரலாற்று வில்லுப் பாட்டும், நாடகமும் இவரது கலை. பிறப்பு 15—11—1942. தந்தையார்: ஆதிமூலம். 1953 ல் முதன் முதலாக வள்ளலார் நாடகத்தில் நடித்தார். நடித்தவர்கள் எல்லாருமே மாணவர்கள். 1969 ல் வள்ளலார் நாடகத்தைச் சொந்தமாகத் தயாரித்து அரங்கேற்றினர். 1971 முதல் வள்ளலார் வில்லிசை நிகழ்ச்சியைத் தொடங்கினர். 1970 ல் திருச்சிராப்பள்ளி வானொலியில் வள்ளலார் நாடகம் (சுருக்கம்) ஒலிபரப்பாயிற்று. பாண்டிச்சேரி வானொலியில் கவியரங்கங்களிலும் கிராமிய நிகழ்ச்சிகளிலும் பங்குகொள்கிறர். சென்னை இராஜாஜி மண்டபத்தில் கவிஞர் சுரதா தலைமையில் நிகழ்ந்த சன்மார்க்க சிறப்புக் கவியரங்கம் ஒன்றில் கலந்து கொண்டதுடன் சென்னை சன்மார்க்க சங்கங்கள் பலவற்றில் வில்லிசை நிகழ்ச்சியும் நடத்தினர். மாவட்டங்கள் பலவற்றிலும் புதுவை, காரைக்கால் பகுதிகளிலும் சன்மார்க்க விழாக்கள் பலவற்றில் நாடகம், வில்லிசை, இயல் - இசை நிகழ்ச்சி நடத்தியிருக்கிறர். இவரது பாரதியார் வரலாற்று நாடகம் குணச்சித்திர நடிகர் S. V. சுப்பையாவால் பாராட்டப்பெற்றது. வள்ளலார் வரலாற்றை இவர் இயலும் (கதையும்) புருஷோத்தமன் இசையும் (பாட்டும்) ஆகக் கதாகாலட்சேபம் போன்று நடத்துவார்கள். கதைப் பகுதியை அதாவது வரலாற்றுப்பகுதியை ஆதிகணேசன் கூறிவர அதற்கேற்ற அதாவது சந்தர்ப்பத்திற்கேற்ற திருஅருட்பாப்பாடல்களை இசைமுகில் புருஷோத்தமன் பாடுவார். இப்படி இயலும் இசையுமாக, கதையும் (வரலாறும்) பாட்டுமாக நிகழும்

இந்நிகழ்ச்சி இனிமையாக இருக்கும். இதை ஒரு கேசெட்டாகவும் வெளியிட்டுள்ளார். அருட்பெருஞ்ஜோதி அகவல் முழுவதையும் அன்பர் ஒருவரைக் கொண்டு ஓதச்செய்து ஊரன் அடிகளாரின் முன்னுரையுடன் ஒரு கேசெட்டாக வெளியிட்டுள்ளார். வடலூரில் வள்ளலார் தெய்வநிலையங்களின் நிர்வாகம் நடத்தும் தைப்பூசவிழாவில் இவரது வில்லிசை, நாடகம் இயல் - இசை நிகழ்ச்சிகளில் ஒன்று ஆண்டுதோறும் இடம்பெறுவது பல ஆண்டு வழக்கமாகும். வடலூர் இசை விழாக்கள் இரண்டிலுமே, முதல் ஆண்டில் (1986) வில்லிசையும், இவ்வாண்டு (1987) நாடகமும் சிறப்பாக நிகழ்ந்தன. இசைவிழாத்தொடக்க ஆண்டில் - முதல் ஆண்டில் - 1986 ல் பொன்னுடை போர்த்தியும் வெள்ளிப்பதக்கம் அணிவித்தும் திருஅருட்பா இசைச்சங்கத்தால் கௌரவிக்கப் பெற்றார். வடலூரை அடுத்த கருங்குழியில் வள்ளலார் இல்லம் (தண்ணீர் விளக்கெரிந்த இல்லம்) தவத்திரு. ஊரன் அடிகளாரால் திருப்பணி செய்யப்பெற்றுக் குடநீராட்டு விழா 1—6—1987 ல் நிகழ்ந்த போது அன்றிரவு இவரது வள்ளலார் நாடகம் சிறப்புற நிகழ்ந்து அனைவராலும் பாராட்டப்பெற்றது. வடலூரில் "அருட் ஜோதிமன்றம்" என்ற பெயரில் ஒரு மன்றத்தையும் இவர் நடத்திவருகிறார். வடலூர் வாழ் வள்ளலார் வில்லிசைக் கலாநிதியாகிய இவரது முகவரி: கவிஞர் ஆதி. கணேசன், 43 வன்னியர் தெரு, கோட்டைக்கரை, வடலூர் - 607 303.



## அருட்பா. N. அண்ணாமலை

பிறந்த ஊர்: ஆம்பூர். பெற்றோர்: நாகன், கிளியம்மாள். பிறந்த நாள் 3—5—1943. படிப்பு: ஐந்தாம் வகுப்பு. வளர்ந்த ஊர்: திருச்சிராப்பள்ளி. தற்போது வசிப்பது வடலூர். 'சிட்கோ' வில் பணியாற்றுகிறார். 1976 முதல் மூன்று ஆண்டுகள் வடலூரில் சங்கீத பூஷணம் S. கோமதிநாயகம், சிதம்பரம் காந்திநாதன் ஆகியோரிடம் இசைப்பயிற்சி. திருஅருட்பப் பயிற்சிக்கு குருநாதர் அருட்பாமணி ந விசுவநாதன். முதன் முதலில் அருட்பா பாட ஊக்குவித்தவர் இசைமுகில் K. புருஷோத்தமன். வியாழக்கிழமை தோறும் சத்திய தருமச்சாலையில் நிகழும் அருட்பா பாராயணத்திலும் விழாக்காலங்களில் சத்திய ஞானசபையில் நிகழும் அருட்பா முற்றோதலிலும் ஐந்தாண்டுகளாகக் கலந்து கொண்டு

வருகிறர். விழாக்களிலும் மாதப்பூச நாள்களிலும் தனிக்கச்சேரியும் செய்துள்ளார். புதுச்சேரி வானொலியிலும் பாடியுள்ளார். வடலூரில் நிகழ்ந்த இசை விழாக்களில் இரண்டு ஆண்டுகளிலுமே பாடினர். இவரது அருட்பா இசை நிகழ்ச்சியை ஒருசமயம் செவிமடுத்து மகிழ்ந்த தவத்திரு ஊரன் அடிகளார், பெயர் என்ன எனக் கேட்க, அண்ணாமலை என்று இவர் சொல்ல இனி அருட்பா அண்ணாமலை என்று வழங்கட்டும் என்று கூறி அடிகள் ஆசிர்வதித்தார்.

முகவரி : அருட்பா N. அண்ணாமலை, நாகப்பசாமி காப்பவுண்டு,
வடலூர் - 607 303.



"வடலூர் சகோதரர்கள்"

## C. பீட்டர், C. ஆண்ட்ரூஸ்

இவர்கள் இரட்டைக் குழந்தைகளாகப் பிறந்தவர்கள். பெற்றேர் : A. சின்னப்பராஜ், C லூர்துமேரி மதம்: கிறிஸ்தவம் பிறப்பு : 12—3—1967 ஊர் : வடலூர். படிப்பு: பீட்டர் - மேல்நிலைப்பள்ளி இறுதி ஆண்டு; ஆண்ட்ரூஸ் : பி.ஏ., இறுதி ஆண்டு. 1985 முதல் அருட்பா பயின்று கச்சேரி செய்து வரும் இவர்கள் "வடலூர் சகோதரர்கள்" என வழங்கப் பெறுகிறர்கள். இவர்களின் சங்கீத ஆசிரியர்கள் : சங்கீதபூஷணம் மன்னை K. கிருஷ்ணமூர்த்தி; சங்கீதபூஷணம் S. கோமதிநாயகம். அருட்பா ஆசிரியர் : அருட்பாமணி ந. விசுவநாதன். இவ்விளைஞர்கள் பள்ளியிலும், பல இடங்களிலும் போட்டிகளில் கலந்து கொண்டு பரிசுகளைப் பெற்றுள்ளனர். கடலூர்கல்வி மாவட்டக் கலைக்கழக இசைப் போட்டிகளில் முதலாவதாகவும் இரண்டாவதாகவும்வந்து வெள்ளி சுழற்கோப்பை பெற்றுத் தாம் படித்த வள்ளலார் குருகுலம் உயர்நிலைப்பள்ளிக்குப் பெருமை சேர்த்தனர். ஸ்ரீநிவாசா சுப்பராயா தொழில் நுட்பக் கல்லூரியில் நிகழ்ந்த அனைத்திந்திய இசைப்போட்டி ஒன்றில் 40 பேர் கலந்து கொண்டதில் இவர்கள் இரண்டாவதாகவும் மூன்றாவதாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டுச் சான்றிதழ் பெற்றனர்.

சன்மார்க்க விழாக்களிலும், கோயில் விழாக்களிலும் அருட்பா தனிக்கச்சேரி செய்து வருகின்றனர். எல்லாவற்றிலும் மேலாக இவ்வின்னிசை இளைஞர்களைப் பற்றிச்சிறப்பாகக் குறிப்பிட வேண்டிய செய்தி, கிறிஸ்தவர்களாக இருந்தும் உணவில் சுத்தசைவம் என்பதே. இவ்விருவர் மட்டுமின்றி இவர்களது குடும்பமே சைவ உணவுக் குடும்பமாகிவிட்டது. கிறிஸ்தவர்கள் என்றதைக் கேட்டதும் சற்றுத்தயங்கிய ஊரன் அடிகள் சைவ உணவாகிய இச்சிறப்பைக் கேட்டதும் அகமிக மகிழ்ந்து 1-6-1987ல் தாம் நடத்திய கருங்குழி வள்ளலார் இல்லத் திருப்பணி நிறைவு - குட நீராட்டு-விழாவில் திரு நா. மகாலிங்கம் அவர்கள் தலைமையில் சுமார் ஒருமணி நேரத்திற்குமேல் இவ்விளைஞர்களைப் பாடச்செய்து, தாமும் கேட்டு மகிழ்ந்தார். இசைக்கலைச் சிறப்போடு, உணவொழுக்கமும் உடையது பொன்மலர் நாற்றமுடைத்து என்பதைப் போன்றதென்று கூறி திரு. நா. மகாலிங்கம் அவர்கள் பாராட்டி வாழ்த்தினர்.

முகவரி : C. பீட்டர் & C. ஆண்ட்ரூஸ், ''வடலூர் சகோதரர்கள்''
S/o A. சின்னப்பராஜ், 24, செயிண்ட் சேவியர் நகர், வடலூர் - 607 303.



''நடனமணி''

''அருட்பா நாட்டிய ஜோதி''

**குமாரி R. உஷாராஜ் B. Arch**

நெய்வேலி முதன்மைப் பொறியாளர் டாக்டர் A. ராஜேந்திரனின் ஒரே மகளாவார். இவரது அன்னையார் டாக்டர் பத்மாவதி துணை முதன்மை மருத்துவ அதிகாரியாக நெய்வேலி பழுப்பு நிலக்கரி நிறுவனத்தில் பணிபுரிகிருர். செல்வி உஷா சென்னை அண்ணு பல்கலைக் கழகத்தில் B.Arch பட்டம் பெற்றவர். ஐந்து வயது முதல் நெய்வேலியில் நடன ஆசிரியர்களிடம் முறையாகப் பரத நாட்டியப் பயிற்சியைத் தொடங்கினர். நெய்வேலியில் பள்ளிப் படிப்பை முடித்து, சென்னை அண்ணு பல்கலைக் கழகத்தில் 1982-ம் ஆண்டு கட்டிடக் கலைத்துறையில் சேர்ந்தார். 12-ம் வயது முதல் 16 வயது வரை நான்கு ஆண்டுகள் திருமதி சீர்காழி கனகாம்புஜம் அவர்களிடம் பரதநாட்டியம் பயின்ருர். 1982 முதல் 87 வரை தொடர்ந்து திரு. வழுவூர் இராமையா பிள்ளையின்

மாணவர் நாட்டரசன்கோட்டை சங்கீத நாட்டிய கலாமணி திரு M. A. கிருஷ்ணன் அவர்களிடம் பரத நாட்டிய உயர் நுணுக்கங்களைப் பயின்று வருகிறார்.

சென்னைப் பல்கலைக் கழகத்தின் சார்பில் இளைஞர் விழாவில் சென்னை பம்பாய் அண்ணாமலை நகர் ஆகிய இடங்களில் நாட்டிய நிகழ்ச்சிகள் நடத்தினார். சென்னை தொலைக்காட்சியில் நாட்டிய நிகழ்ச்சிகளில் பங்கு கொள்ளத் தேர்வு செய்யப் பெற்றிருக்கிறார். தில்லையில் இவ்வாண்டு நடைபெற்ற நாட்டியாஞ்சலி விழாவில் பரத நாட்டியம்ஆடிச் சிறந்த பாராட்டினைப் பெற்றார்.

இவரது பட்டப் படிப்பின் ஒரு பகுதியாக வடலூர் வள்ளலார் தெய்வ நிலையங்களின் வளர்ச்சிக் கான கட்டிடத் திட்டங்களை உருவாக்கி வழங்கியிருக்கிறார். வீணையில் நல்ல தேர்ச்சியுடன் வானொலியிலும் வீணை வாசிக்கிறார். ஓவியம் வரைவதும் இசைகேட்டு மகிழ்வதும் இவரது பொழுதுபோக்கு.

வடலூரில் நிகழ்ந்த இரண்டாம் ஆண்டு திரு அருட்பா இசை விழாவில் 27-5-87ல் வள்ளலாரின் பதங்களுக்குப் பரத நாட்டியம் ஆடி அனைவரது பாராட்டையும் பெற்றார். அதுசமயம் ''அருட்பா நாட்டிய ஜோதி'' என்ற பட்டம் தவதிரு ஊரன் அடிகளாரால் இவருக்கு வழங்கப்பெற்றது.

---



## இசைக்கொண்டல்
# மயிலாடுதுறை K. இராமசாமி

வயது 69. நாற்பது ஆண்டுகளாகத் தமிழ்இசை, திருவருட்பா இசைத் தொண்டு. இவர் திருஅருட்பா இசை பாடாத சன்மார்க்க சங்கங்களே தமிழ்நாட்டில் இல்லை எனலாம். அதுபோல் பெருவிழாக்களும், மநாடுகளும் இவர் பாடாதது இல்லை எனலாம். திருவருட்பா இசை உலகில் வெளியூர் வித்வான்களில் முதலிடம் பெறுபவர் இவரே. வள்ளலார் விழாக்களில் இரவு வள்ளலார் திருவீதி உலா நடத்தும் ஊர்களில் இரவு ஒன்பது மணிக்கு வீதி உலாத் தொடங்கி இரவு முழுவதும் விடிய விடியப் பாடிக்கொண்டே வந்து மறுநாள் காலை ஒன்பது அல்லது பத்து மணிக்கு நிறைவுபெறும். இவ்வீதியுலாக்களில் விடிய விடியப் பாடுபவர் இசைக்கொண்டல் மயிலாடுதுறை இராமசாமிதான். வடலூரில் வள்ளலார் தெய்வநிலையங்கள் நடத்தும் தைப்பூச விழாவில் தைப்பூசத்திற்கு முதல் நாள் இரவு முழுவதும் விடிய விடிய இவர் திருவருட்பா இசை பாடுவார். தைப்பூசத்தன்று காலை சூரிய உதய நேரத்தில் முதற்காலம் ஜோதி தரிசனம் ஆகும் சமயத்தில் தமது இசைக் கச்சேரியை நிறைவு செய்வார். இது சுமார் இருபதாண்டு வழக்கம். நாம் அறங்காவலராக வந்து பதினேழுஆண்டுகள் ஆகின்றன. 17ஆண்டுகளாகத் தைப்பூசத்திற்கு முதல்நாள் இரவு இவர்தான் பாடி வருகிறார். இதில் இவருக்குப் போட்டி இல்லை. இது இவரது தலைமையையும் தரத்தையும் காட்டுகிறது. தமிழ்நாடு மட்டுமின்றிப் புதுவை மாநிலத்திலும் இவர் புகழ்பெற்றவர். புதுச்சேரியிலும் பிற ஊர்களிலும் பாடிப் பணி புரிந்திருக்கிறார். திருவனந்தபுரத்திலும் பாடினார். வல்ல நாட்டுச்சுவாமி என்றும் வல்ல நாட்டுச்சித்தர் என்றும் வழங்கப்பெற்ற சாது சிதம்பர சுவாமிகளுடன் பம்பாய் வரை சென்று அவர் நடத்திய ஜோதி வழிபாட்டில் திருவருட்பாப் பாடினார். ''இசைக்கொண்டல்'' என்ற பட்டம் 1951ல் கடலூர் பாபுஜி நினைவு நூல் நிலையத்தாரால் அந்நூல்நிலையத்தின் ஆண்டு விழா காந்தியடிகள் பிறந்த நாளாகிய அக்டோபர் 2ல், திருப்பாதிரிப்புலியூர் பாடலி டாக்கீசில், திவான் பகதூர் T.R. சக்கரபாணி ஐயங்கார் B.A., B.L., அட்வகேட் அவர்கள் தலைமையில், குறள்மலர் ஆசிரியர் திருக்குறள் முனிசாமி B. A., B.L., அவர்கள் முன்னிலையில் வழங்கப் பெற்றது. பல ஊர்களில் பலஸ்தாபனங்களால் பாராட்டப்பெற்றவர். வடலூரில் சென்ற ஆண்டு முதன் முதலாக நடந்த திருஅருட்பா இசைவிழாவில் ரூ 501 (ஐந்நூற்று ஒன்று) பொன் முடிப்பும், பதக்கமும் வழங்கிப் பாராட்டப்பெற்றார்.

முகவரி : இசைக் கொண்டல் மயிலாடுதுறை K. இராமசாமி,
மேலவீதி, மயிலாடுதுறை P.O. தஞ்சாவூர் மாவட்டம்.



## அருட்பா கான சரஸ்வதி
## திருமதி T. N. சரஸ்வதி சீனிவாசன்

"அருட்பா கான சரஸ்வதி" என்ற பட்டம் வடலூரில், தென்னார்க்காடு மாவட்ட சன்மார்க்க சங்க இரண்டாவது மாநாட்டில் 1966 ஆம் ஆண்டில் கொடுக்கப்பட்டது. அது முதல் 20 ஆண்டுகளாக வடலூரில் வள்ளலார் தெய்வ நிலையங்கள் நடத்தும் தைப்பூச விழாவில் அருட்பா இசையரங்கில் தவறாது வாய்ப் பளிக்கப்பெற்றுச் சிறப்பாக அருட்பா இசைக் கச்சேரி செய்து வருகிறார். ஆசிரியராகப் பணியாற்றும் இவருக்குத் தற்போது வயது 46. முப்பத்தைந்து ஆண்டு கால இசையனுபவம் உடைய இவரது இசை நிகழ்ச்சிகளுக்கு இவரது கணவர் சீனிவாசன் அவர்களே பக்க வாத்தியமாக மிருதங்கம் வாசித்து வருகிறார். நல்ல இசைத் தம்பதிகள். நாடெங்கும் பல இடங்களில், பல விழாக்களில் அருட்பா இசை பரப்பி வருகின்றனர். அருட்பா கேசட் ஒன்றும் வெளியிட்டிருக்கிறார்.

முகவரி: "அருட்பா கான சரஸ்வதி" திருமதி T. N. சரஸ்வதி சீனிவாசன்,
G. பிளாக் நெ. 9 சிவராமன் தெரு, மந்தைவெளி, சென்னை - 600 028.



## சங்கீதபூஷணம்
## மன்னை கே. கிருஷ்ணமூர்த்தி

இசைப் பரம்பரையைச் சேர்ந்தவர். மன்னை கலைமாமணி கோட்டு வாத்யம் கே. சாவித்திரி அம்மாளின் சகோதரர். சிதம்பரம் ஜெயராமனின் மாணவர் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் இசைக் கல்லூரியில் நான்கு ஆண்டுகள் படித்துச் சங்கீதபூஷணம் பட்டம் பெற்றவர். வடலூரில் தெம்மூர் இராச மாணிக்கம் பிள்ளை அவர்கள் நிறுவிய ஞானக்குடிலில் இசை ஆசிரியராகப் பல ஆண்டுகாலம் இருந்து மாணவர் பலர்க்கு அருட்பா இசையை முறையாகப் பயிற்றுவித்தவர். வடலூரில் வள்ளலார் தெய்வ நிலையங்கள் நடத்தும் தைப்பூசப் பெருவிழாவில் பல ஆண்டுகள் (சுமார் 12 ஆண்டுகளாக) அருட்பா இசை நிகழ்ச்சியில் பங்கு பெற்று வருபவர்.

முகவரி: சங்கீதபூஷணம் மன்னை. கே. கிருஷ்ணமூர்த்தி, 23. செட்டியார் காலனி,
வடலூர் - 607 303, தென்னார்க்காடு மாவட்டம்.



## சூலூர் T. சொர்ணக்குழந்தைவேல்

இவரைப்பற்றிச் சொல்லுமுன் இவருடைய தந்தையாரைப் பற்றிச் சொல்லவேண்டும். தந்தையார் அமரர் கோவை சூலூர். திருஞானசம்பந்தம் சங்கீத வித்வான், நாதஸ்வர வித்வான். தொழிலை விட்டுத் தொண்டில் இறங்கினர். அந்நியத் துணி பகிஷ்காரம், மதுவிலக்கு, தனிநபர் சத்தியாகிரகம், தெருத்தோறும் தனி நாதஸ்வரத்தை இசைத்து மக்கள் கூட்டத்தைக் கூட்டி வெள்ளையர் ஆட்சியை எதிர்த்துப் பிரச்சாரம் செய்து கொண்டே சென்னை வரை பாதயாத்திரை. சென்னையில் கைது. நாதஸ்வரத்துடன் ஆந்திர மாநிலம் அலிப்புரம் சிறையில் ஆறு மாத சிறைவாசம். ''வெள்ளையனே வெளியேறு'' ஆகஸ்ட் புரட்சியில் ஒன்றரை ஆண்டுகள் மிக கொடுமையான சிறைவாசம். நாட்டு விடுதலைக்குப்பின் அரசியல் வாழ்வை நீத்து வள்ளலாரின் சன்மார்க்கப் பணி. தமிழ்நாடு முழுவதும் சன்மார்க்கப் பிரசாரம், கோவை மாவட்டத்தில் சன்மார்க்க சங்கங்கள் பலவற்றை நிறுவுதல்; பல மாநாடுகளை நடத்துதல், எல்லாவற்றிற்கும் மேலாக ''அருள்முரசு'' என்ற பெயரில் சன்மார்க்கத் திங்களிதழ் ஒன்றைப் பல ஆண்டுகள் நடத்தியது. இவரது திருமகனர் திரு. T. சொர்ணக்குழந்தைவேல் பிறப்பு: 1933 - 1 - 11. தற்போது வயது 55. இசைக் குடும்பப் பிறப்பால் 10 வயதிலேயே திருவருட்பா இசைக்கத் தொடங்கல். பாட்டனர் குரு வெங்கட்டராம முதலியார், தந்தையார் திருஞானசம்பந்தம், சிற்றப்பா கணேசர் ஆகியோரிடம் இசைப் பயிற்சி. பெரியப்பா தவத்திரு. வடிவேல் சுவாமிகளிடம் இசை நுட்பங்களை அறிதல். 44ஆண்டுகளாகத் திருவருட்பா இசைப்பணி. 30ஆண்டுகளாகத் திருச்சி, கோவை வானொலியில் திருவருட்பா இசை, நாதஸ்வர இசை நிகழ்ச்சிகள்.

**பெற்ற பட்டங்கள் :** ''இசைமணி'' (கோவை எழுத்தாளர் மாநாடு 30 ஆண்டுகளுக்குமுன்) ''திரு அருட்பா இசைச் செல்வன்' (சூலூர் இராமலிங்க தபோவனம். 30 ஆண்டுகளுக்கு முன்) ''அருட்பா இசை அரசு'' (அன்னூர் மௌனானந்த யோகியார்) ''அருளிசைமணி'' ''தமிழ் சாகித்திய இசைப் புலவர்'' (கோவை, சிரவை ஆதீன மகா சந்நிதானம் தவத்திரு சுந்தர சுவாமிகள்)

**வகிக்கும் பதவிகள் :** கோவை சிரவை ஆதீன இசைப்புலவர். கோவை ஸ்ரீ இராம கிருஷ்ண மிஷன் வித்யாலய இசை ஆசிரியர். பெரியநாயக்கன்பாளையம் சன்மார்க்க சங்கத் துணைத்தலைவர். நிறுவனர், இயக்குனர், ஆசிரியர்: வள்ளலார் இசை மன்றம், பெரியநாயக்கன்பாளையம். சூலூர் இராமலிங்க தபோவன ஆலோசகர். கோவை மாவட்ட சன்மார்க்க சங்க உறுப்பினர்.

முகவரி: சூலூர் T. சொர்ணக்குழந்தைவேல் 29, பிரமனை வீதி,
பெரியநாயக்கன்பாளையம், ஸ்ரீராமகிருஷ்ண வித்யாலயம் P.O. கோயம்புத்தூர்-641 020



### இசைமணி
## புதுக்கோட்டை சீனிவாசன்

புதுக்கோட்டை சன்மார்க்கசீலர் அருங்குள லிங்கம்பிள்ளை அவர்களால் இளமையில் வளர்க்கப் பெற்றவர். பிள்ளையவர்கள் புதுக்கோட்டையில் அமைத்த இராமலிங்க ஞானசபையில் காலை, மாலை திருவருட்பா பாராயணம் செய்து இவரது திருவருட்பா இசைப்பணி தொடங்கிற்று. திருக்கோகர்ணம் இராமச்சந்திரன் என்ற வயலின் வித்துவானிடம் இசைபயின்றார். திருச்சிராப்பள்ளி தாரானூர் இராமலிங்கசுவாமிகள் என்னும் துறவியாரிடம் பழகநேர்ந்து அவரிடம் பாடங்கேட்டார். மாணிக்கவாசகர், தாயுமானவர், இராமலிங்கர், அருளரசி முதலிய தலைப்புகளில் வானொலியில் பலமுறை இசைச் சொற்பொழிவு ஆற்றியுள்ளார். வள்ளலாரைப் பற்றிச் சில சிறு நூல்களை எழுதினார். ''இசைமணி'' — சுத்தானந்த பாரதியார் அளித்த பட்டம். திருவொற்றியூர் இராமலிங்கசுவாமிகள் மடாலயத்தில் சில ஆண்டுகள் பணி. தற்போது சென்னை ஓட்டேரி, தயாசதனில் தங்கிப் பணி புரிகிறார். சென்னையில் பல இடங்களில் இசைச் சொற்பொழிவும், திருவருட்பா இசைக் கச்சேரியும் செய்து வருகிறார். வடலூரில் வள்ளலார் தெய்வநிலையங்கள் நடத்தும் தைப்பூசப் பெருவிழாவிலும் பல ஆண்டுகள் பாடினார்.

முகவரி: இசைமாமணி புதுக்கோட்டை சீனிவாசன்,
தயாசதன், ஓட்டேரி, சென்னை - 600 012.



### அருள்இன்னிசைமாமணி
## மழையூர் S. சதாசிவம்

பள்ளி மாணவனாக இருக்கும் போதே இறை வணக்கத்தை இசையோடு பாடும்பேறு. பின்னர் அருட்பாவில் ஈடுபாடு. புதுக்கோட்டை மாவட்டம் மாத்தூர் சுவாமிகளின் நல்லாசியுடன் அருட்பா இசைப் பணியின் தொடக்கம். இசைப்பேரறிஞர் மதுரைசோமு அவர்களிடம் ஐந்தாண்டு காலம் குருகுலவாசப் பயிற்சி. 1960 முதல் சன்மார்க்க விழா மேடைகளில் திருஅருட்பா இசைமுழக்கம். திருக்கோயில்கள் பலவற்றிலும் பல்வேறு நிறுவனங்களின் விழாக்களிலும், நிகழ்ச்சிகளிலும் அருளிசை வழங்கல்.

முகவரி: அருள் இன்னிசை மாமணி மழையூர். S. சதாசிவம்,
மாரியம்மன் கோயில் வீதி, காவேரிநகர் - 622 501, புதுக்கோட்டை மாவட்டம்.



அருட்பாமணி

## திரு P. கோவிந்தராஜ்

பிறப்பு: 26—3—1910. தற்போது வயது 77 இளமையில் பொன்மலை வாசம். அக்காலத்தில் பொன்மலையில் சன்மார்க்க சங்கம் உத்தரா அரங்கத்தரசு (W. T. ரங்கராஜ் செட்டியார்) அவர்கள் தலைமையில் சிறப்பாக நடந்து வந்தது. அன்பர் P. கோவிந்தராஜ் பொன்மலை சங்கத்தின் பாடகர்களுள் ஒருவரானார். முதலில் தேவாரம், திருவாசகம், திருப்புகழ் தியாகராஜ கீர்த்தனைகள் என்று பலவற்றையும் பாடி வந்தவர். 1933 முதல் திருவருட்பாவை மட்டுமே பாடும் பழக்கத்தை மேற்கொண்டார். 1936ல் மனைவியுடன் தைப்பூசத்திற்கு வடலூர் வந்தார். அதுமுதல் இன்று வரை தைப்பூசத்திற்கு வடலூர் வந்துகொண்டிருக்கிறார் பொன்மலை சங்கத்தில் நல்ல பாராயணக்குழு ஒன்று இருந்தது. அது வருடந்தோறும் தவறாமல் வடலூர் வந்து தைப்பூசத்திலும், சிலசமயம் மற்ற விழாக்களிலும் அருட்பா பாராயணம் செய்யும், அக்குழுவில் இவர் சிறந்து விளங்கினார். பொன்மலை அருட்பா பஜனை கோஷ்டியில் இப்போது இருப்பவர் இவர் ஒருவரே.

1943ல் பொன்மலையில் நிகழ்ந்த விழா வொன்றில் குன்றக்குடி அடிகளார் தலைமையில் திருக்குறள் முனிசாமி அவர்களால் "அருட்பாமணி" என்ற பட்டம் வழங்கப்பெற்றது. ஞானியார் சுவாமிகள், முத்துராமலிங்கத் தேவர், திரு. வி. க., நாகை அட்டவணை இரத்தினம் பிள்ளை, நாகை. கு. அருணசலம் பிள்ளை, ஓ.பி. இராமசாமி ரெட்டியார், சுத்தானந்தபாரதி ஆகிய பெரியோர்களின் முன் பாடி ஆசிபெற்றவர் இவர் இப்போது காரைக்காலில் வசிக்கிறார். இந்த 77 வது வயதிலும் வாய்ப்பு நேரிட்ட போதெல்லாம் ஆங்காங்கே பல சங்கங்களில் அருட்பா இசை பாடிவருகிறார். வடலூர்க்கும் தைப்பூசத்திற்கு வந்து பாராயணத்திற் கலந்து கொள்கிறார்.

முதுபெரும் அருட்பா இசை அன்பராகிய இவரது முகவரி:

அருட்பாமணி பெ. கோவிந்தராஜன்,

C/o N. வெங்கடாசலம் எம். எல். ஏ, 53, பிரஞ்சு ஆசிரியர் வீதி, காரைக்கால்.



இசைச்செம்மல்

## கழுகுமலை A. கந்தசாமி

இவர் பிறந்த ஊர் கழுகுமலை. கழுகுமலை முருகன் மீதுதான் அண்ணாமலை ரெட்டியார் காவடிச்சிந்து பாடினார். காவடிச்சிந்து புகழ் கழுகு மலையிற் பிறந்ததாற் போலும் இளமையிலேயே இசையில் ஈடுபாடு உண்டாயிற்று. இவரது பெற்றோர்: ஆறுமுகம் பிள்ளை; பொன்னம்மாள். இசைப்பேரறிஞர் மதுரை S. சோமசுந்தரம் அவர்களிடம் 12 ஆண்டுகள் குருகுலவாசம் செய்து இசை பயின்றார். 1967 முதல் தமிழ்நாடு, ஆந்திரா, கேரளா, பம்பாய் முதலிய பல இடங்களிலும் தனிக்கச்சேரி செய்து வருகிறார். ''கானரஞ்சிதகான கலாநிதி'' ''இசைச்செம்மல்'' ''தமிழிசைச்செல்வர்'', ''கானகலாபாரதி'' என்ற பட்டங்களைப் பெற்றுள்ள இவர் வானொலியில் அடிக்கடி பங்கு பெற்று வருகிறார். தொலைக்காட்சி யிலும் வானொலியிலும் இவர் A கிரேடு வித்துவான்.

முகவரி: இசைச்செம்மல் கழுகுமலை. A. கந்தசாமி,
லக்ஷ்மி இசை இல்லம், 18 சிவன் கோவில் மேலரத வீதி,
கோவில்பட்டி - 627 701, சிதம்பரனார் மாவட்டம்.



## திரு M. தனவேல்சாமி

வயது 63. முப்பது ஆண்டுகளாகத் திரு அருட்பா இசைத் தொண்டு செய்து வருகிறார். நல்ல இசைஞானம் உடையவர். சிறுவயதி லிருந்தே இசை நாடகங்களில் ஈடுபட்டவர். அருட்பாப் பாடல்கள் நிறைய மனப்பாடம் உண்டு. திருமுறை வரிசையாக விடிய விடிய இரவு முழுவதும் அருட்பாப் பாராயணம் செய்யும் கோஷ்டியில் இசைக் கொண்டல் மயிலாடுதுறை K. இராமசாமி தலைமையில் பல இடங்களில் பாடியிருக்கிறார். பாடியும் வருகிறார்.

முகவரி: திரு M. தனவேல்சாமி, அருட்பா பாடகர்,
விக்கிரமங்கலம், அம்பாப்பூர் S.O. - 621 701.



## திரு. மு. சௌரிராஜன்

இவரது ஊர் செம்பியநல்லூர். செம்பிய நல்லூர் என்றதுமே சன்மார்க்க அன்பர்களுக்கு முதுபெரும் புலவர் செம்பியநல்லூர் கோவிந்த சாமி ஐயா அவர்கள் நினைவே வரும். அவரது பேராதரவால் வளர்ச்சி பெற்றவர் இவர். மங்கை நல்லூரில் ஒரு சன்மார்க்க சங்கம் இருக்கிறது. அதை அன்பர் அமரர் V.S.V. பாவாடை பிள்ளை நடத்தி வந்தார். இப்போது அவர் மகன் திரு இராமலிங்கம் நடத்தி வருகிறார். பாவாடை பிள்ளை இயல் இசை நாடகப் பிரியர். அவரால் அழைக்கப்பெறாத இசை வாணர்களே நாட்டில் இல்லை. திருவையாறு இசை விழாவைப்போல நாமும் நடத்த வேண்டும் என்று மிகப்பலரை - இசைஉலகில் முன்னணியில் உள்ளவர்களையெல்லாம் - அழைத்து மூன்று நாள் பகலும் இரவுமாக விடிய விடிய விழா நடத்தியவர் மங்கை நல்லூர் பாவாடைப் பிள்ளை. அவர் சங்கத்தில் ஆஸ்தான வித்வான்களைப் போல இருந்தவர் பலர். அவர்களுள் அமரர் கீரனூர் அருள் வைத்தியநாதனும் ஒருவர். அவர் அமரரான பின் திரு மு. சௌரிராஜன் சங்கத்தின் இசைப்பணிக்கு ஆளானார். சன்மார்க்க சங்கத்தின் விழாக்கள் பலவற்றில் திருஅருட்பா இசைக் கச்சேரியும், பாராயண பஜனை கோஷ்டி பணியும், சொற்பொழிவும் செய்து வரும் இவருக்கு இப்போது வயது 56

முகவரி: மு. சௌரிராஜன், செம்பியநல்லூர் P.O. 609 503.
பூந்தோட்டம் (வழி), தஞ்சாவூர் மாவட்டம்.



## சேலம் நடராசன்

தற்போது வயது 56. திருமணம் செய்து கொள்ளவில்லை. பிரம்மச்சாரி. வள்ளலாரின் பக்திக்கும் சேவைக்கும் என்றே வாழ்வை அர்ப்பணிப்பு. 9 வயதிலிருந்தே வள்ளலார் பாடல்களைப்பாடி இன்புறும் பழக்கம். ''அகவலைப் படித்தால் வருமுன் தகவலைத் தருகிறது'' என்பது இவர் அனுபவம். அருட்பா ஈடுபாட்டால் ஏதோதோ அதிசயம் ஆனந்தம் நிகழக் கண்டு மகிழ்கிறார். வானொலியில் அருட்பாப் பாடியுள்ளார். தமிழிசைத்தங்கம், தமிழிசைச்செல்வன் என்று ம.பொ.சி. அவர்களால் பட்டம் வழங்கப் பெற்றவர்.

முகவரி: சேலம் நடராஜன், 21, அரசமரம் பிள்ளையார் கோயில் தெரு.
சேலம் - 636 001.



## இசைச்செல்வன்
## சிதம்பரம் S. மீனுட்சிசுந்தரம்

சிதம்பரத்தில் பரம்பரை இசைக் குடியிற் பிறந்தவர். கடந்த 20 ஆண்டுகளாக நாடெங்கும் இசை நிகழ்ச்சிகள் நடத்தி வருபவர். இவரது பாட்டனுர் சாமிநாத நட்டுவனுர் வள்ளலார் இராமலிங்க சுவாமிகளுடன் பழகும் பேறு பெற்றவர். தந்தையார் சிதம்பரம் செல்வரத்தினம் பிள்ளை பெரும் இசை வித்தகர். தனது இசை நிகழ்ச்சிகளில் அருட்பாவை அதிகமாகப் பாடியவர்; இசைத்தட்டில் முதன் முதலாகத் திருவருட்பா பாடியவர். பாடல் - 'பெற்ற தாய்தனை''. இவரது மகனுன சிதம்பரம் S. மீனுட்சிசுந்தரம் தனது கச்சேரிகளைத் தமிழிசை நிகழ்ச்சியாகவே அமைத்துக் கொண்டு திருஅருட்பாப் பாடல்களையும் சேர்த்துப் பாடி வருகிறுர். தனி அருட்பா இசையரங்குகளும் நடத்துகின்றுர். வடலூரில் வள்ளலார் தெய்வநிலையங்களின் தைப்பூசப் பெருவிழாவிலும் சில ஆண்டுகள் அருட்பா இசை வழங்கினுர். சத்திய ஞானசபைத் திருப்பணி நிறைவு விழாவிலும் பாடினுர். 1982 கொழும்பில் நிகழ்ந்த உலக இந்து சமய மாநாட்டில் இவர் நடத்திய இரண்டு இசை நிகழ்ச்சிகளில் ஒன்றினைத் திருஅருட்பா இசை நிகழ்ச்சியாகவே நடத்தினுர். முதன் முதலில் இசைச்சுட்டியில் (கேஸட்) ''திருவருட்பா தேனிசை' வழங்கியவர் இவரே.

முகவரி: 'இசைச் செல்வன்' சிதம்பரம் S. மீனுட்சிசுந்தரம், F-45. ரிசர்வ் வங்கி ஊழியர் குடியிருப்பு, கலைஞர் கருணுநிதி நகர், சென்னை - 600 078.



## குரு. உதயகுமார்

பழம்பெரும் தேசபக்தர் தியாகி நாகை. குரு. குமாரசாமிப் பிள்ளை அவர்களின் புதல்வர். முறையாக இசை பயின்றவர். பக்திப் பாடல்கள், தேவாரம், திருவாசகம், திருஅருட்பா, அபிராமி அந்தாதி, பாரதியார் பாரதிதாசன் பாடல்கள் இனிமையாகப் பாடுவார். நல்ல குரல் வளம், பொருளுணர்ந்து பதம்பிரித்து அருள்ததும்பப் பாடுவார் எனக் கேட்டோர் கூறுவர். பட்டங்கள் பல பெற்றவர். இசைக்குயில், இசைவள்ளல், அருள்ஞான இசைமணி ஆத்மஞான சங்கீத இசை மன்னர் ஆகியன சில.

முகவரி: குரு. உதயகுமார், 5 காணியாளர் தெரு (காலனி), பாபநாசம் - 614 205, தஞ்சாவூர் மாவட்டம்.



## தொண்டர் T. S. முத்தையா

காரைக்குடி சன்மார்க்க சங்கத்தின் தொண்டர், காரைக்குடி சங்கம் தொடங்கப் பெற்ற நாளிலிருந்தே அதிற்பணி செய்து வருபவர். அது, அருட்பாமணி. திரு. ந. விசுவநாதன் காரைக்குடி சங்கத்தைத் தொடங்கிச் சிறப்புற நடத்திய காலம். தேவாரத்திருமுறைகள், பக்திப் பாடல்கள், கீர்த்தனைகள் பாடுவதில் தேர்ந்தவர். அருட்பாமணி அவர்களால் திருஅருட்பாவிலும் ஈடுபாடு மிகுதியாக ஏற்பட்டு அருட்பா இசையிலும் தேர்ந்தவராகி அப்பணியைப் பரவலாகச் செய்து வருகிறார். திருநெல்வேலி சைவக் குடும்பத்திற் பிறந்த இவர் பிறப்பாலேயே சைவ உணவினர் ஆதலோடு பிறர் பலரையும் அகவினத்தாராக ஆக்குவதில் ஆர்வம் உடையவர். தற்போது வயது 77.

முகவரி : தொண்டர் T. S. முத்தையா, 3, உஸ்மான் காம்பவுண்ட்
ராமசாமி நாயக்கர்சந்து, முத்துப்பட்டணம், காரைக்குடி.



## திரு க. அருணாசலம் பிள்ளை

தூத்துக்குடியில் சைவ வேளாளர் குலத்தில் சணபதியாபிள்ளை பேச்சியம்மாள் தம்பதிகளுக்கு 1924ல் பிறந்தார். சிறு வயதிலிருந்தே இசைத் தொண்டு செய்து வரும் இவர் 1961 முதல் வள்ளற் பெருமானின் வரலாற்றைக் கேட்டு மன முருகி வள்ளலார் வரலாற்றை நாடகமாகத் தயாரித்து தக்க நடிகர்களைக் கொண்டும் தானும் நடிப்பவரானார். பக்க வாத்தியங்களுடன் கதா காலட்சேபமும் செய்து வருகிறார். தூத்துக்குடி மதுரை கோட்ஸ் மில்லில் கணக்கராகப் பணியாற்றி ஓய்வு பெற்று தற்போது திருப்பரங்குன்றத்தில் வசித்து வருகிறார். தனியாக அமர்ந்து ஆண்டவனைப்பாடி ஆனந்திப்பதோடு, அழைத்த இடங்களுக்கும் சென்று அருட்பா இசைப்பணி புரிந்து வருகிறார்.

முகவரி : அருட்பா பாடகர், திரு க. அருணாசலம் பிள்ளை,
110. சன்னதி வீதி, திருப்பரங்குன்றம், மதுரை - 625 005.



## திரு. V. இராமச்சந்திரன்

பிறப்பு : 1922. பெற்றோர் : வேணுகோபால் நாயுடு; தாயாரம்மாள், சிறுவயது முதலே இசைப் பணியில் ஈடுபட்டார். அந்நாளைய திரைப்பட உலகில் 'தாய்நாடு' 'விசித்திரவனிதா' முதலிய படங்களில் நடித்தவர். பக்திப்பாடல்களைப்பல காலமாகப் பாடிவரும் இவர் கடந்த ஐந்தாண்டு களாக அருட்பாவில் மிகவும் ஈடுபட்டுப் பாடி வருகிறார். தற்போது வசிப்பது மதுரை மாநகர் ஹார்விப்பட்டியில்.

முகவரி : V. இராமச்சந்திரன், ஹார்விப்பட்டி,
திருப்பரங்குன்றம், மதுரை - 625 005.



## திரு. S. அழகப்பன்

காரைக்குடி சன்மார்க்க சங்கத்தின் தொண்டர், விஸ்வகர்ம குலத்தைச் சேர்ந்தவர். இசையில் வல்லவராதல்போலவே மரவேலையிலும் வல்லவர். சீர்காழிகோவிந்தராசனை மானசீக குருவாகக் கொண்டு அவரது பாடல்களையும் ஐயப்பன் பாடல்களையும் பாடித்திரிந்த இவர் காரைக்குடி கொப்புடையம்மன் கோயில் மார்கழி மாத பஜனையில் கலந்து கொள்ளலானார். அக்காலம் காரைக்குடி சன்மார்க்க சங்கம் அருட்பாமணி திரு. ந. விசுவநாதன் அவர்களைக் கொண்டு மிகச்சிறப்பாகச் செயற்பட்டு வந்த காலம். அழகப்பன், அருட்பாமணி அவர்களால் அருட்பா நெறிக்கு ஈர்க்கப் பட்டு 1958 முதல் அருட்பாவில் ஈடுபாடு கொண்டார். அதுமுதல் காரைக்குடிப் பகுதியிலும் மதுரை இராமநாதபுரம் மாவட்டங்களிலும் பரவலாக அருட்பா இசைப்பணி செய்துவருகிறார். வள்ளற்பெருமான் வரலாற்றை வில்லுப்பாட்டாகவும் பாடுவார், அருட்பா இசையரங்கும், வள்ளலார் வரலாறு வில்லிசையும் காரைக்குடி சன்மார்க்க சங்கத்தொண்டும் இவரது இன்றையவாழ்க்கை. தற்போது வயது 57.

முகவரி : S. அழகப்பன், சன்மார்க்க சங்கம், 2. பெருமாள் கோயில்கிழக்கு,
நா. புதூர். காரைக்குடி - 623 001.



திருஅருட்பா இசைமாமணி

## விருதுநகர் S. சின்னமணி

இப்போது வயது 68 ஆகிறது. 12 வயதிலிருந்தே திரு அருட்பா பாடிவருகிறுர். இவரது 60 வது ஆண்டு விழா சென்னை அயன்புரம் சமரச சுத்த சன்மார்க்க சங்கத்தில் நிகழ்ந்தது. "இசைமாமணி," "அருட்பாமணி," எனப்பாராட்டப் பெற்றுர், அச்சங்கத்தில் திரு. நா. மாகலிங்கம் அவர்கள் தலைமையில் நிகழ்ந்த வள்ளலார் பிறந்ததின விழா ஒன்றில் பொன்னுடை போர்த்தித் "திருஅருட்பா இசையரசு" என்ற பட்டமும் வழங்கப்பட்டது. நன்ருக, உருக்கமாக அருட்பா இசைபாடுபவர்.

முகவரி : இசைமாமணி S. சின்னமணி, 54, இராஜுதெரு
அயனுவரம், சென்னை - 600 023.



## புதுச்சேரி திரு. N. கிருஷ்ணசாமி செட்டியார்

இளமை தொட்டே வள்ளலாரிடம் பற்றுடையவர். 25 ஆம் வய்தில் தொடங்கிய உணவகத்திற்கு "ஜோதி கபே" என்று பெயரிட்டுப் பதினைந்து ஆண்டுகள் தொழில் நடத்தினுர். இவரது மாமனுர் வடலூரில் கட்டிய சத்திரம் புதுச்சேரியார் சத்திரம் என்று இன்றும் விளங்குகிறது. புதுச்சேரி அம்பலத்தாடையர் மடத்தின் தலைவர் தவத்திரு திருநாவுக்கரசு சுவாமிகள் அவர்கள் அருட்பாடல்களைப் பயிலவும் பாடவும் இவருக்கு ஊக்கமளித்தார். தேவாரம் திருவாசகம், திருப்புகழ், திருஅருட்பா இன்னிசைக் கச்சேரிகள் கோயில் விழாக்களிலும் கும்பாபிஷேகங்களிலும் செய்து வருகிறுர். திருவாசகத்திலும் திருஅருட்பாவிலும் தனி ஈடுபாடு. சன்மார்க்க சங்கங்களிலும் பல இடங்களில் இசைச் சொற்பொழிவாற்றியுள்ளார். இவ்வாண்டு இவரது மணிவிழா ஆண்டாகும்.

முகவரி : புதுச்சேரி N. கிருஷ்ணசாமி செட்டியார்.
121, கலவை சுப்பராய செட்டி வீதி, பாண்டிச்சேரி - 605 001.



## திரு. T. K. ஸ்ரீநிவாசன்

வயது : 65. தஞ்சையில் பிறந்து வளர்ந்து காரைக்குடியில் வாழ்பவர். 12 வது வயது முதல் வீணைவித்வான் N. இராமசாமிபிள்ளை, திருவையாறு T. R. S. சர்மாபாகவதர், திருவாரூர் N. S. சந்திரசேகரன் ஆகியோரிடம் 9 ஆண்டுகள் கர்நாடக சங்கீதப்பயிற்சி பெற்ருர். 1938 முதல் மேடைக் கச்சேரிகள் செய்யத் தொடாங்கினர். இசைப் பாடல்கள் இயற்றி அவற்றுக்குத் தாமே இசை அமைத்தார், மாணவ மாணவிகளுக்கு கர்நாடக சங்கீதப் பயிற்சி அளித்தும் திருஅருட்பா இசைப்பயிற்சி அளித்தும் இருவகையிலும் இசை ஆசிரியராக விளங்கு கிறுர், ஆர்மோனிய வித்வானுங் கூட. இவர் 2 மணிநேரம் திருவருட்பா இசைக் கச்சேரி செய்பவர். இவரது மாணவர்களையும் அவ்வாறு செய்யப்பழக்கியிருக்கிருர். நாடகங்கள் எழுதி நடித்தவர். நாடகக் கம்பெனியே வைத்திருந்தார். இரண்டாவது உலகமகாயுத்தத்தில் நான்கு ஆண்டுகள் (1943 - 47) இந்தியவிமானப் படையில் பணிசெய்த போதும் சென்ற இடமெல்லாம் திருவருட்பா இசைபாடித் திரிந்தவர். ''கந்தர்வகான ஏழிசை இளவல்,'' ''தமிழிசைத் தென்றல்,'' ''சங்கீதவித்வான்'' என்றெல்லாம் வழங்கப்பெறுபவர்.

முகவரி : ''தமிழிசைத் தென்றல்'' திரு. T.K. ஸ்ரீநிவாசன்,
M. S. Rm. காம்பவுண்டு, அதனைப்பட்டிவலையர்தெரு, காரைக்குடி - 623 001.



## சக்தி K. நாகராஜன்

1940 ல் எட்டாவது வரை படித்து விட்டு சும்மா இருந்தபோது கீழையூர் வித்துவான் S. வேணு பிள்ளையிடம் 5 ஆண்டுகள் முறையாக சங்கீதம் பயின்ருர், 1946 ல் நாகப்பட்டினத்தில் ஸ்ரீ சக்தி நாடக சபா கம்பெனியில் சேர்ந்து பாடி நடித்தார். நான்கு ஆண்டுகள் அதில் இருந்தார். இன்னெரு நான்கு ஆண்டுகள் ஸ்ரீதேவி நாடக சபாவில். 1955 முதல் சொந்த ஊருக்கு வந்து முருகன் பாடல்கள் பாடிக் கச்சேரி செய்து வந்தார். பின்னளில் அருட்பாவை அதிகமாகப் பாடத்தொடங் கினர். சீர்காழிகோவிந்தராஜனைப் போல் பாடுகிருர் என்று பாராட்டப்பெறும் இவர் இப்போது அருட்பா இசைப்பணியை அவர்நு வட்டாரத்தில் பரவலாகச் செய்து வருகிருர்.

முகவரி : சக்தி. K. நாகராஜன், தென்கரை ஈசனூர், திருவாய்மூர் அஞ்சல்,
(வழி) திருக்குவளை, தஞ்சாவூர் மாவட்டம்.



## சங்கீதபூஷணம் P. S. அழகர்சுவாமி

அண்ணாமலைப் பல்கலைக்கழக இசைக் கல்லூரியில் பயின்று சங்கீதபூஷணம் பட்டம் பெற்றவர். அரசு பள்ளிகளில் இசைஆசிரியராகப் பணியாற்றி வருகிறார். வடலூரில் உள்ள அரசினர் ஆசிரியப் பயிற்சி நிறுவனத்திலும் சில ஆண்டுகள் இசை ஆசிரியராக இருந்தார். அது சமயம் அருட்பாவில் ஈடுபாடு உண்டாயிற்று. 1968 முதல் அருட்பா பாடிவருகிறார். பணம், நாம், சொர்க்கவாசல் ஆகிய திரைப்படங்களில் பின்னணி இசைபாடியுள்ளார். 1970 லிருந்து பாண்டிச்சேரி வானொலியில் பாடிவருகிறார். வடலூரில் இருந்த காலத்தில் தைப்பூசவிழாவில் தருமச்சாலை மேடையில் அருட்பா இசைக்கச்சேரிகள் செய்யும் வாய்ப்புகளைப் பெற்றார். தனிப்பட்டமுறையிலும் இளைஞர்களுக்கு இசைப் பயிற்சி அளித்து வருகிறார்.

முகவரி : சங்கீத பூஷணம் P. S. அழகர்சுவாமி, இசையாசிரியர்,
முல்லாத்தெரு, எலவானாசூர்கோட்டை (P.O.) உளுந்தூர்ப்பேட்டைவட்டம்.



## சங்கீதவித்வான் S. G. நாயகம்

மாணவப்பருவத்திலேயே இசைப்போட்டி களிலும் இசையரங்குகளிலும் பங்கு கொண்டார் முறையான இசைப்பயிற்சியை வயலின் மேதை நெல்லை மணியிடமும் தஞ்சை D. V. சுப்பிரமணியத்திடமும் பெற்றார். அரசினர் ஆசிரியப் பயிற்சிப் பள்ளிகளில் ஏறத்தாழ 35 ஆண்டுகள் இசை ஆசிரியராகப் பணியாற்றினர். வடலூரில் உள்ள அரசு ஆசிரியப் பயிற்சி நிறுவனத்திலும் இசையாசிரியராகச் சில ஆண்டுகள் பணியாற்றினர். 1967 முதல் இருபது ஆண்டுகளாக அருட்பா இன்னிசை நிகழ்ச்சிகளை நடத்திக் கொண்டிருக்கிறார். வடலூரிலும் பல ஆண்டுகள் வள்ளலார் தெய்வநிலையங்களின் தைப்பூச விழாவில் அருட்பா இசை வழங்கினர்.

முகவரி : சங்கீதவித்வான் S. G. நாயகம், 96, ஜி. எஸ். டி. ரோடு,
நந்திவரம், கூடுவாஞ்சேரி - 603 202, செங்கற்பட்டுமாவட்டம்.



## திருமதி T.R. தீலகவதி

இவரது குடும்பமே இசைக் குடும்பம். தாயார் கர்நாடக சங்கீத வித்துவான். தந்தையார் மிகச் சிறந்த சங்கீத ரசிகர். இங்கிலையில் பிறப்பிலேயே இசை ஞானம் அமைந்தது. பள்ளிப் பருவத்திலேயே இசைப் பயிற்சி தொடங்கி 16 வயதில் திருக்கோயில் குட முழுக்கு விழாக்களிலும், திருவிழாக்களிலும் தேவாரம் முதலிய பக்திப்பாடல்கள் பாடத் தொடங்கினுர். பல போட்டிகளில் முதல் பரிசு பெற்ருர். உள்ளூர் கோயிலுக்குத் தினந்தோறும் சென்று பாடும் பழக்கத்தைக் கொண்டார். சிதம்பரம் ஆருத்ரா தரிசன விழாவில் திருமுறைகளையும் திருவருட்பாவையும் பாடித் தீட்சிதர்களின் பாராட்டைப் பெற்ருர். தில்லை சன்மார்க்க சங்கத்தாரால் ஊக்குவிக்கப் பெற்று அருட்பா இசையில் அதிகம் ஈடுபடலானுர். கதாகாலட்சேபமும் செய்கிருர்.

இவரது முகவரி: T.R. திலகவதி, 1785, கொண்டிராஜபாளையம்
கீழவீதி, தஞ்சாவூர்.



## திருமதி. ருத்திரமணி ராஜப்பா

இவர்கள் திருஅருட்பா இசை தம்பதிகள். ராஜப்பா கணவர், ருத்திரமணி மனைவி, இருவரும் சேர்ந்து இசை நிகழ்ச்சிகளை நடத்துகின்றனர், ராஜப்பா ஆர்மோனியம் வாசிக்க ருத்திரமணி பாடுவார். ராஜப்பாவும் பாடக் கூடியவரே. மதுரைப் பக்கத்தில் இவர்கள் பரவலாகப் பணி செய்து வருகின்றனர். மாணவர்களுக்கு இசைப்பயிற்சியும் அளிக்கின்றனர்.

ருத்திரமணி 7 வயது தொடங்கியே கர்நாடக இசையில் பயிற்சி பெற்றவர். 25 வயதுக்குமேல் திருஅருட்பாவையே அதிகமாகவும் முக்கியமாகவும் பாடிவருகிருர், 12 ஆண்டுகளுக்கு மேலாக அருட்பா இசைப்பணியாற்றி வருகிருர்கள்.

முகவரி: ருத்திரமணி ராஜப்பா, S. P. குருசாமி சேர்வை காம்பவுண்டு.
புதுத்தெரு, தண்டக்காரன்பட்டி, பழங்காநத்தம், மதுரை - 625 003.



## பாகவதர் S. அருணாசலம்பிள்ளை

பிறந்த ஊர் பொள்ளாச்சியை அடுத்த ஆனைமலை. அங்கலகுறிச்சி பழனியப்ப வாத்தியாரிடம் சங்கீதம் பயின்றார். 20 வயதில் கேரளத்திற்குச் சென்றார். தற்போது வயது 76. 56 ஆண்டு இசை அனுபவம். 25 ஆண்டுகளாக அருட்பா பாடி வருகிறார். மாணவர்கள் பலருக்கு இசைப்பயிற்சி அளித்து வரும் இவருக்கு மனைவியாரும் ஆண்மக்கள் இருவரும் பெண்மக்கள் நால்வரும் உள்ளனர்.

முகவரி : S. அருணாசலம்பிள்ளை, பாகவதர், ராயப்பன்தெரு,
தத்தமங்கலம் - 678 102, பாலக்காடு, கேரளா.



## திரு. A. வெங்கடராமபிள்ளை

இவரது ஊர் கோனூர்நாடு. சிறந்த நாதஸ்வர வித்வான். சொந்தத்தில் நிலபுலன்கள் உடையவர். திருவாவடுதுறை இராஜரத்தினம் முதலிய பெரிய வித்வான்களோடு இவர் வாசித்திருக்கிறார். தேவார திருவாசகங்களில் ஈடுபாடு அதிகம். நிறையமனப் பாடம் உண்டு. வாய்ப்பாட்டிலும் வல்லவர். பல ஆண்டுகளாகத் திருஅருட்பா கச்சேரியும் செய்துவருகிறார். வள்ளலாரிடம் மிகவும் பக்தியுடையவர். வடலூர் விழாக்களுக்குத் தவறாது வந்து தரிசிப்பவர்.

முகவரி : A. வெங்கடராமபிள்ளை, சங்கீதவித்வான்,
கர்ணகொல்லைத்தெரு, கும்பகோணம்.



*சங்கீத பூஷணம்*

## சிதம்பரம் R. நாராயணசாமி

அண்ணுமலைப் பல்கலைக்கழகத்தில் சங்கீத பூஷணம் பட்டம் பெற்றவர். அரசினர் ஆசிரியப் பயிற்சிப் பள்ளிகளில் இசை ஆசிரியராகப் பணி யாற்றி ஓய்வு பெற்றவர். தற்போது வயது 63' திருவருட்பாவில் சிறந்த ஈடுபாடு உடையவர். வானெலியில் சுமார் 30 ஆண்டுகளாகப் பாடி வருகிறர். இவருக்கு இரண்டு ஆண்மக்களும், ஒரு மகளும் உளர். தற்போது அருட்பா தனிக்கச்சேரிகள் செய்து வருகிறர்.

முகவரி : சங்கீதபூஷணம் சிதம்பரம் R. நாராயணசாமி
தந்தைபெரியார் தெரு, சிதம்பரம்.



## திரு. PL.S. செந்தில் ஆறுமுகம் B.A.

ஊர் தூத்துக்குடி. பி.ஏ. பட்டதாரி. இசையில் நன்கு தேர்ச்சி பெற்றவர். அருட்பாவிலும் சிறந்த ஈடுபாடுடையவர், தூத்துக்குடி திருநெல்வேலி, இராமநாதபுரம், மதுரை ஆகிய தென் மாவட்டங்களில் பல ஆண்டு காலமாகவே அருட்பா இசையைப் பாடிப் பரவலாகப் பணி செய்து வருபவர். அருட்பா தனிக்கச்சேரியும் செய்து வருபவர்.

முகவரி : PL. S. செந்தில்ஆறுமுகம் B.A.,
39. மேலரதவீதி (சுயம்பு) தூத்துக்குடி - 628 002,



''அருட்பாத் தென்றல்'', ''அருட்பாக் காவலர்''

**Dr. M C. இராசமாணிக்கம்.**

M.B.B.S., M.S. (General), M.S. (ortho), M.N.A M.S. (ortho) F.I.C.S., F.R.S.H (London), D.Auc. T.

---

பிறந்த ஊர் : சென்னிமலை மேலப்பாளையம்.
பிறந்த நாள் : 15—10—1941. தொழில்: மருத்துவம்.
தொண்டு : சன்மார்க்கம் - அருட்பா.

**தொழில் :** அறுவை மருத்துவத்திலும் குறிப்பாக எலும்பு, முட்டு மருத்துவத்திலும் நிபுணர். முன்பு சென்னையிலும் ஈரோட்டிலும் அரசு மருத்துவமனைகளில் மருத்துவராகப் பணியாற்றினர். இப்போது ஈரோட்டில் அருட்பெருஞ்ஜோதி மருத்துவமனை என்ற பெயரில் சொந்தமாகவே ஒரு மருத்துவமனையை நிறுவி நடத்தி வருகிறார். ஈரோட்டில் இது சிறந்ததோர் மருத்துவமனை. இவர் கைராசியான டாக்டர். இவர் எழுதிய எலும்புப்பாதுகாப்பு என்னும் நூல் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரால் வெளியிடப்பெற்றுள்ளது.

**தொண்டுகள் :** திருவருட்பாவில் 25 ஆண்டுகால ஈடுபாடு. 14 ஆண்டுகளாகத் திருவருட்பாப் பேச்சு. ஜீவகாருண்ய ஒழுக்கம், மரணமிலாப் பெருவாழ்வு, ஒளிவழிபாடு என்னும் மூன்று தலைப்புகளில் விஞ்ஞான ரீதியான இவரது பேச்சு தனிச்சிறப்பானது. இவரது இப்பேச்சுகளைப் பாராட்டி ஊரன் அடிகளார் வடலூர் தைப்பூச விழா மேடையில் அறிமுகப்படுத்தி அதிக இடமும் கொடுத்தார். ஈரோட்டில் சன்மார்க்க சங்கங்கள் மூன்று உள்ளன. 1 ''அருட்பா அன்பர்'' ''சன்மார்க்கக்காவலர்'' திரு. தி. கோ. சீதாராமன் அவர்கள் நடத்தும் வள்ளலார் உலகப் பிரச்சார இயக்கம். 2. சன்மார்க்க அன்பர் திரு. A.K.V. பொன்னுசாமி அவர்கள் தலைமையில் நடைபெறும் அருட்ஜோதி சன்மார்க்க சங்கம். 3. டாக்டர் M.C. இராசமாணிக்கம் அவர்கள் தலைமையில் நடைபெறும் சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம். இச்சங்கத்திற்கு இவர் 1981 முதல் தலைவராக இருந்து வருகிறார். சங்க அலுவலகமும் இவர் இல்லத்திலேயே இருக்கிறது. இவரை இச்சங்கத்தின் ஸ்தாபகத் தலைவர் எனலாம். இச்சங்கத்தில் வாரந்தோறும் டாக்டர் திருவருட்பா விளக்கத் தொடர் சொற்பொழிவுகள் நடத்தி வருகிறார். விஞ்ஞான ரீதியான விளக்கங்களுடன் விரிவாக நடத்தப்பெறும் இத்திருவருட்பா விளக்கத் தொடர் சொற்பொழிவுகள் மிகவும் பயனுள்ளன. ஜீவகாருண்ய ஒழுக்கம் மட்டுமே ஒரு ஆண்டு (52 வாரங்கள்) தொடர்ந்து நடத்தப் பட்டதாம். ஈரோடு சன்மார்க்க சங்கமும் உலகமைய சன்மார்க்க சங்கமும் இணைந்து நடத்திய அனைத்திந்திய சன்மார்க்க முதல் மாநாடு (நவம்பர் 1983) சிறப்பாக நடந்ததற்குரிய பெருமை அனைத்தும் டாக்டரையே சாரும். மாநாட்டில் ஒரு சிறப்பு மலரையும் டாக்டர் (ஈரோடு சன்மார்க்க சங்கம்) வெளியிட்டார். வாழையடி வாழை மரபில் ஒருவர் என்று ஒரு நூலையும் எழுதி வெளியிட்டிருக்கிறார். இவரும் ஈரோடு

பேராசிரியர் திரு. மு.ச. சிவம் அவர்களும் இணைந்து செய்த ஜீவகாருண்ய ஒழுக்க ஆங்கில மொழி பெயர்ப்பு The Path of compassion என்ற பெயருடன் பேராசிரியர் சிவம் அவர்களால் வெளியிடப்பட்டுள்ளது.

அண்மையில் இரண்டு ஆண்டுகளாக வள்ளலாரைச் சந்தித்தால் என்று ஒரு நிகழ்ச்சியை இவர் தயாரித்து நடத்தி வருகிறார். டாக்டர் வள்ளலார் வேடம் தரித்து வந்து ஓர் இருக்கையில் அமர்வார். முக்காடிட்டு, கைகட்டி அடக்கமாக அமர்ந்திருக்கும் கோலம் அழகாக இருக்கும். அவருடைய சன்மார்க்க சங்க அன்பர்கள் சிலர் தொழுவூர் வேலாயுத முதலியாராகவும், வேட்டவலம் ஜமீன்தாராகவும், இன்னும் பெருமானுடனிருந்த சிலராகவும் கிராமவாசிகளாகவும் வேடம் தரித்து வந்து தரையில் அமர்வர். பெண்கள் சிலரும் இருப்பர். டாக்டரின் துணைவியாரும் அவருள் ஒருவராக இருப்பது அதில் ஒரு தனிச்சிறப்பு. இவர்கள் எல்லாரும் வள்ளலாரை நோக்கிக் கேள்வி கேட்பர். இவர்களது ஐயவினாக்களுக்கெல்லாம் ஐயன் வள்ளலாராக வீற்றிருக்கும் டாக்டர் விடையளிப்பார், விளக்கஞ் சொல்வார். ஓரங்க நாடகம் போன்றிருக்கும் இந்நிகழ்ச்சி ஒருமணி நேரம் ஒன்றரை மணி நேரம் நடக்கும். 1986 நவம்பரில் ஈரோட்டில் நிகழ்ந்த மாநாட்டில் முதன் முதலாக இந்நிகழ்ச்சியை டாக்டர் தயாரித்து நடத்தினார். 1987 தைப்பூசவிழாவில் வடலூரில் தருமச்சாலை மேடையிலும் இது நடத்தப்பட்டது. பல்லாயிரக்கணக்கான மக்கள் கண்டு களித்தனர், பயன் பெற்றனர். இசைக்கலைஞர்களே சிறப்பாக இடம் பெறும் இத்தொகுப்பில் டாக்டரும் இடம் பெறுவது இதனாற்றான்.

ஈரோடு பல சிறப்புகளை உடையது. தமிழ்மாமுனிவர் தவத்திரு. குன்றக்குடி அடிகளாரின் அருள்நெறித்திருக்கூட்டம் அங்கு சிறந்து விளங்குகிறது. அன்பர் திரு A.P. வேங்கடாசலம் அருமையாக நடத்தி வருகிறார். அன்பர் வேலா. இராசமாணிக்கம் அவர்களின் குறளாயம் சிறந்து விளங்குகிறது. வள்ளலாரின் சமரச சன்மார்க்கத்தைச் சன்மார்க்க சங்கங்கள் ஒன்றுக்கு மூன்றாக இருந்து வளர்க்கின்றன. தென்னார்க்காடு மாவட்டத்தில் மாவட்ட ரெவின்யு அதிகாரி (D. R. O) ஆக இருந்து ஓய்வுபெற்ற சன்மார்க்கப் பேரன்பர் திரு. M. குப்புமுத்துராசு அவர்களும் இப்போது தம்சொந்த ஊராகிய ஈரோட்டிலேயே இருக்கிறார். குறட்பாநெறிக்கு ஒரு வேலா. இராசமாணிக்கம் என்றும், அருட்பா நெறிக்கு ஒரு டாக்டர் இராசமாணிக்கம் என்றும் ஈரோடு இந்நாளில் பெருமபோடு போட்டு வருகிறது.

அந்நாளில் டாக்டர் இராசமாணிக்கனார் என்று ஒரு தமிழ்ப்பேராசிரியர் இருந்தார். டாக்டர் மு. வ. வும், டாக்டர். மா. இராசமாணிக்கனாருமே அக்காலத்திய பெரும் (தமிழ்) டாக்டர்கள். தமிழுக்கு ஒரு டாக்டர் இராசமாணிக்கனார் போல, சன்மார்க்கத்துக்கு ஒரு டாக்டர் இராசமாணிக்கனாராக நம் ஈரோடு டாக்டர் வளர்க.

திண்டுக்கல் சுவாமி சரவணனந்தா அவர்களைச் சன்மார்க்க மெய்ஞ்ஞானி என்றால் நம் ஈரோடு டாக்டரைச் சன்மார்க்க விஞ்ஞானி எனலாம்.

வாழ்க சன்மார்க்க விஞ்ஞானி ஈரோடு டாக்டர். இராசமாணிக்கம், அவர் குடும்பம் வாழ்க ! தொழில் வளர்க ! தொண்டுகள் ஓங்குக.

வளர்ந்து வரும் சன்மார்க்க விஞ்ஞானியின் முகவரி :

டாக்டர். M. C. இராசமாணிக்கம்
அருட்பெருஞ்ஜோதி மருத்துவமனை & சன்மார்க்க சங்கம்
25. சிதம்பரனர் பூங்காவழி, (ஒட்டல் ஆக்ஸ்போர்டு எதிரில்)
ஈரோடு - 638 003.



## டாக்டர். செல்வி. M. பிரமிளா

இவர் இசையில் எம். ஏ., பட்டம் பெற்றவர். இந்திய தத்துவ ஞானத்தில் எம். ஏ., பட்டம் பெற்றவர். ஹரிகதையைப்பற்றி ஆராய்ச்சி செய்து டாக்டர் (பி.ஹெச்.டி.) பட்டம் பெற்றவர். இப்போது சென்னைப்பல்கலைக்கழகத்தில் இசைத் துறையில் விரிவுரையாளராகப் (Lecturer) பணி யாற்றுகிறார். இவர்பயின்றது-கர்நாடக சங்கீதம்: முசிரி சுப்பிரமணிய ஐயர், முடிகொண்டான் வேங்கடராமஐயர், கல்லிடைக்குறிச்சி மாகதேவ பாகவதர், T. K. கோவிந்தராவ், B. ராஜம்ஐயர், திருமதி. K. R. லக்ஷிமி, T. M. தியாகராஜன் ஆகியோரிடம். தேவாரம், திருப்புகழ்: லால்குடி சுவாமிநாதன், சோமசுந்தரதேசிகர் ஆகியோரிடம். ஹிந்துஸ்தானி மெல்லிசை, பஜனை : P. S. சீனிவாசராவ் அவர்களிடம், ஹிந்துஸ்தானி இசை : S. கிருஷ்ணனந்த் அவர்களிடம். ஹரிகதைபற்றி ஆராய்ச்சிக்கு திருமதி C. பன்னிபாய், திரு. எம்பார் விஜயராகவாச்சாரியார்.

தமிழிசைச் சங்கம், மியூசிக் அகாடெமி, இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸ் சொசைட்டி, கிருஷ்ணகானசபா, இயல் இசை நாடகமன்றம் ஆகியவற்றில் பல முறை பல விழாக்களில் பாடியுள்ளார். டெல்லி தமிழ்ச் சங்கத்திற்கும் ஆந்திரப்பிரதேசத்தில் விஜயநகரத்திற்கும் தெனுலிக்கும் சென்று கச்சேரிகள் செய்துள்ளார்.

சென்னையில் அருட்செல்வர் திரு. நா. மகாலிங்கம் அவர்கள் நிறுவி நடத்தும் இராமலிங்கர் பணி மன்றத்தின் ஆஸ்தான இசை வித்வான் என்று இவரைச் சொல்ல லாம். சென்னையில் திரு. மகாலிங்கம் அவர்கள் ஆண்டுதோறும் நடத்தும் விழாக்கள்

மூன்று. 1. வள்ளலார் காந்தி விழா. அக்டோபர் 1 முதல் 8 முடிய சென்னை மயிலை இராசேசுவரி திருமண மண்டபத்தில். 2. இசைக் கலை விழா. 3. பாரதியார் விழா. (மௌன்ட் ரோடு ஜெமினிகார்னர் ராணி சீதையம்மாள் மண்டபத்தில்). இம்மூன்று விழாக்களிலுமே செல்வி பிரமிளா பல ஆண்டுகளாகப் பாடி வருகிறார்.

இவர் இசைப்புலவர் (சங்கீத வித்வான்) மட்டுமல்லர், இசை ஆசிரியருங் கூட. சாதாரண ஆசிரியரல்லர், பல்கலை கழகத்தில் இசைத்துறையில் லெக்சரர். இசையில் எம். ஏ. பட்டம் பெற்றதோடல்ல, இந்திய தத்துவ ஞானத்திலும் எம். ஏ. பட்டம் பெற்றவர். கதாகாலட்சேப கலையை ஆராய்ந்து அதில் டாக்டர் பட்டம். இப்படி உயர்ந்த படிப்பு, உயர்ந்த பட்டங்கள், உயர்ந்த பதவி, உயர்ந்த கலைத்திறன் இவரிடம் ஒருங்கே சேர்ந்துள்ளன. பரிசுகள், பதக்கங்கள் பற்பல பெற்றவர். சென்னை வானொலியிலும் தொலைக்காட்சியிலும் பல ஆண்டுகள் இசைக் கலைஞராக இருந்து வருகிறார். இதனோடன்றி இலங்கை வானொலியிலும் சிங்கப்பூர் வானொலியிலும் இவரது இசை நிகழ்ச்சிகள் ஒலிபரப்பாகியுள்ளன. இந்திய அரசின் கலாசாரத்துறை இவருக்கு ஆண்டு ஸ்காலர்ஷிப் கொடுத்தது.

செல்வி பிரமிளாவின் அருட்பா கேசட்டுகள் நான்கு இதுவரை வெளிவந்துள்ளன. தென்னாப்பிரிக்கா நேட்டால் வேதிக் சொசைட்டிக்காக இரண்டு. சென்னை ஏ. வி. எம். ஒன்று. நான்காவது, திருவடிப்புகழ்ச்சி இந்த ஆண்டு 1987 அக்டோபரில் வள்ளலார் காந்தி விழாவில் வெளியாயிற்று, சங்கீதா (Sangeetha) வெளியீடு.

கர்நாடக சங்கீதம், ஹிந்துஸ்தானி சங்கீதம், தமிழிசை ஆகிய மூன்றையும் அறிந்த இவர் அருட்பா இசைக்கும் அதன் வழிச் சன்மார்க்கத்திற்கும் பணி செய்து வருவது பாராட்டிற்குரியது. வளர்க ! வாழ்க !! இவரது முகவரி :

டாக்டர். செல்வி. M. பிரமிளா,
21. சுப்பிரமணியம் காலனி, வண்ணான்துறை, சென்னை 600 041.

---



*கலைமாமணி, சாகித்யகர்த்தா*

## திரு சரவணபவானந்தர்

செவ்வேட் பரமன் முருகன் எனக்குக் காட்சிதந்த கடவுள், திருவருட்பிரகாச வள்ளலார் தவப்பயனல் எனக்குக் கிடைத்த ஆத்மார்த்த குருமூர்த்தம், அருட்பா என்னை ஆளாக்கிய அருப்பெரும் அமுதத் தமிழ்மறை'' என்று கூறும் இவர் பிறந்த ஊர் : திருநாகைக் காரோணம் என்னும் நாகப்பட்டினம். சமயம் : சைவம். பெற்றோர் : துரைசாமி, வள்ளியம்மை பிறந்த நாள் : விரோதிகிருது, புரட்டாசி 9, (27—9—1912) வெள்ளி. தொடக்கக்கல்வி ஆசிரியர் இராமலிங்க தேசிகர். திண்ணைப்பள்ளிக் கூடம். பின்பு ஆங்கிலக் கல்விச்சாலையில் சில நாள். தமிழாசிரியர்: சேது சமஸ்தானம் முதுகுளத்தூர் பிச்சைக் கவிஞர். வேதாந்தபாடம் சங்கத்தையா எனப்படும் சாது நாராயண சுவாமியிடம். இசைப்பயிற்சி : நாகை துரைராஜ்பிள்ளை என்பவரிடம். சிலம்பம் மல்யுத்தம் கற்பித்தவர் பயில்வான் இராஜமாணிக்கம். குருநாதர் பிரம்மமுடி யதீந்திரர். ஆறு வயது முதலே முருக பக்தி. பன்னிரண்டு வயதில் வள்ளலார் கனவிற் காட்சியளித்தது. இருபது வயதில் திருமணம் சிதம்பரத்தில் தமிழ் முறையில். மனைவி சரஸ்வதி அம்மாள். இரண்டு குழந்தைகள். பெண் : கார்த்தியாயனி. ஆண் : ஜோதிநாதன். 26 வயதில் ''ஜோதி இராமலிங்கம்'' சினிமாப் படத்தில் தொழுவூர் வேலாயுத முதலியராக நடித்தார். 1937-38. திரைப்படத்தின் பெயர்: ஜோதி இராமலிங்கம். திரைப்படம் எடுத்தவர்கள் : ஜோதி பிக்சர்ஸ், சென்னை, கதை, வசனம், பாடல்கள் இவர் (சரவணபவானந்தர்). இசை அமைப்பு மதுரை மாரியப்ப சுவாமிகள், உதவி : பாபநாசம் சிவன், லட்சுமணதாஸ், ரகுநாத், மணி. வள்ளலாராக நடித்தவர்: முத்துபாகவதர் என்னும் திருச்செந்தூர் தீட்சிதர். சகநடிகர்கள் : எம். ஜி. சக்ரபாணி (எம். ஜி. ஆரின் முத்த சகோதரர்) என். எஸ். கிருஷ்ணன், மதுரம், டி. வி. ஜனகம், மதுரை சுந்தரம்மாள், பி. ஜி. வெங்கடேசன், மகாதேவன், பபூன் சங்கர ஐயர் மற்றும் பலர். தொழுவூர் வேலாயுத முதலியாராக நடித்தவர் இவர் (சரவண பவானந்தர்). பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் மோசூர் கந்தசாமி முதலியாரிடமிருந்து கிடைத்த தொழுவூர் வேலாயுத முதலியாரின் உருவப் படத்தை வைத்துதான் இவருக்கு வேட மிட்டார்கள். புகழ்பெற்ற நடிகர் M.K. ராதாவின் தந்தையார் கந்தசாமி முதலியார் தொழுவூராரிடம் படித்தவர். அவர் இவரைத் தொழுவூராராகத் திரைப் படத்தில் பார்த்து இவர்தான் என்னுடைய ஆசிரியர் என்று சொல்லி மகிழ்ந்தார். பாடகச்சேரி இராமலிங்க சுவாமிகள், பசும்பொன் முத்துராமலிங்க தேவர், நாமக்கல் கவிஞர், கிருபானந்தவாரியார், சுத்தானந்த பாரதியார் முதலியோர் பாராட்டினர்கள்.

சொற்பொழிவு, இசைப்பேருரை, நூல்கள் இயற்றல், இவை இவருடைய பணி. வேதநாயகம் பிள்ளை, குமரகுருபரர், பாம்பன் சுவாமிகள் முதலிய அண்மைக் கால, இடைக்கால, முற்கால ஞானிகள், பக்தர்கள், சித்தர்கள், புலவர்களைப் பற்றிச் சொற்பொழிவாற்றுவதில் வல்லவர். வானொலி, தொலைக்காட்சி, திரைப்படங்கள் ஆகிய முத்துறைகளிலும் ஈடுபாடுண்டு. வானொலிச் சொற்பொழிவுகள் நூறுக்குமேல். இயற்றிய இசைப்பாடல்கள் ஆயிரக்கணக்கானவை. ஆதலால் சாகித்யகர்த்தா என வழங்கப் பெறுகிறார். நாடறிந்த நல்ல இசைமேதைகள் பலரும் இவர் இயற்றிய இசைப்பாடல்களை இனிது பாடி வருகின்றனர். இசைத்தட்டில் ஏறிய பாடல்கள் ஏராளம். நாடகங்கள், நாட்டியங்கள், குறம், அம்மானை, சிந்து, சந்தப்பாக்கள், வில்லுப்பாட்டு, தூது இப்படிப் பலவகையில் இதுவரை நூற்றுக்கு மேற்பட்ட நூல்களை இயற்றியுள்ளார். ஜோதிக்கும்மி, ஞானத்தமிழ், வள்ளலார் ஒரு வண்ணக்கிளி என்பன அவற்றுட் சில. தமிழகமெங்கும் இவருடைய நிகழ்ச்சிகள் நடந்துள்ளன. நடந்து கொண்டு வருகின்றன. இவருக்கு இப்போது வயது 76. சுமார் 60 ஆண்டுகளாகச் சிறிதும் அயர்வின்றித் தமிழுக்கும், தமிழிசைக்கும், வள்ளலாருக்கும் தொண்டாற்றிவரும் இவருக்குத் தமிழக அரசு கலைமாமணி விருதை 20—4—1970ல் வழங்கியது. இவரது வாழ்வு இசை வாழ்வு, கலை வாழ்வு, தொண்டு வாழ்வு. இளமைமுதலே சுவாமிகள் பலரோடு பழகி, இசைப் பாடல்களால் இசைச் சொற்பொழிவுகளால் பக்தி வளர்க்கும் இவரை, சுவாமி சரவணபவானந்தர் என வழங்குவதும் உண்டு. நாடறிந்த நல்ல அருள் நெறிச் சொற்பொழிவாளராம் இவரது முகவரி :

கலைமாமணி, சாகித்யகர்த்தா. அருள்திரு. சரவணபவானந்தர்,
29 பெருமாள் கோயில் தோட்டம்,
இராஜா அண்ணாமலைபுரம் அஞ்சல்
சென்னை - 600 028.